# WANTED

Reformers,

Not of others,

but of themselves.

Who have won

Not University distinctions,

But victory over the local self ;

**Age** :—The youth of divine joy.

**Salary** :—Godhead.

**Apply Sharp**

with no begging solicitations, but con
manding decision to the Director of th
Universe Your own Self.

Om ! Om ! Om !

ஓம்

ஸ்ரீ இராமதீர்த்தாயநம:

# ஸ்ரீ ஸ்வாமி இராமதீர்த்த * *
# * * பரமஹம்ஸ விஜயம்

இஃது

ப்ரஹ்ம ஸ்ரீ

R. நாராயணஸ்வாமி ஐயர்

இயற்றியது.

---

பிரசுரித்தவர்:

சை. ந. பாலசுந்தரம்,

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தகசாலை,
4/34, நயினியப்ப நாயக்கன் வீதி,
பார்க் டவுன், சென்னை.

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தகசாலை,
நெ. 4/31, நயினியப்ப நாயக்கன் வீதி, பார்க் டவுன் (P.O.), சென்னை.

# ஸ்ரீ ராமதீர்த்த பரமஹம்ஸ விஜயம்.

## [2-ம் பாகம்.]

பொருளடக்கம்



ஸ்வாமிகள் யோக ஆசன படத்துடன் உயர்ந்த கலிகோ கட்டடம்
ரூபா 3 12 0

# ஆக்கியோன் குறிப்பு

ஸ்ரீ இராமதீர்த்த ஸ்வாமிகளைப்பற்றி இதுகாறும் தமிழுலகத்தார் அறியச் சாதனமேயில்லாதிருந்தது. லாகூரில் எம். ஏ. பட்டதாரியான பிறகு சந்நியாசியாகி உலகயாத்திரை செய்து தமது ஆத்ம ஜோதியை உலகத்துப் பல மேதாவிகளுக்கும் நேரில் காண்பித்து, முடிவில் தமது ஜன்ம பூமிக்கே திரும்பிய மகா புருஷராகிய ஸ்ரீ ராம தீர்த்தர் முப்பத்துமூன்று வருஷகாலமே ஜீவித்தவரானாலும் பாரதநாட்டிற்காகக் கண்ணீர் பெருக்கியபடியே காலம் போக்கினார். உடலைப் பிரிந்துபோகும் வரையில் ஆத்மநிலை வழுவாமலே அடிக்கடி ஜனங்களின்மீதுள்ள கருணையில் கருணை மழைரூபமாக அத்வைத ரஸமென்ற வாசனையையும் வீசிப் பொழிந்துகொண்டே விளங்கினார். "பாரத பூமியின் தாழ்ந்த ஸ்திதிக்கு ஆரம்பம் பாரத யுத்தகாலத்திலேயே" என்றும், "அதனாலேயே அந்நிய ராதிக்கம் சாத்திய மாயிற்று" என்றும், "வேதாந்த உண்மையை அனுபவத்தில் கால வேற்றுமைக்குத் தக்கவாறு உபயோகிக்கத் தெரிந்துகொள்ளாமையே உண்மையான குறைவு" என்றும், "உபநிஷத்துக்கள் ஒழுங்காகக் கிரகிக்கப் பட்டாலே தேச முன்னேற்ற முண்டாம்" என்றும் பறை சாற்றிவந்தார். இப் புத்தக மூலமாகத் தமிழ் நாட்டினர் உண்மையான திடமான தேசபக்தியும் ஆத்ம அறிவு

மடைய ஊக்கம் கொள்ளுமாறு அவர்களைத் தூண்டிவிட வேண்டுமென்பதே எனது நோக்கம். ஸ்ரீ ராமதீர்த்தரது சரித்திரத்தைக் கூறிவிட்டுப் பிறகு அத்வைத விளக்கமான சில உபந்யாச சாரத்தைத் திரட்டிச் சேர்த்து முடிவில் தேசபக்தி நிரம்பிய சில உபதேச மொழிகளைச் சேர்த்திருக்கின்றேன். சரித்திரத்திற்கு வேண்டிய விபரமான விஷயங்கள் ஸ்ரீராமதீர்த்தரைப்பற்றி யதிகம் கிடைக்கவில்லை யாதலால் சிறிதளவு கிடைத்ததைக் கொண்டு ஒருவாறு ஸ்வாமிகளின் மகத்துவத்தை மாத்திரம் எடுத்துக் கூறுவது சாத்தியமாயிற்று. சரித்திரம் ஆராய்வதற்கு முன் முன்னுரையாக அவதார மென்றால் என்ன என்று விளங்குமாறு என்னால் முடிந்தவரையில், என் சிற்றறிவிற் கெட்டியவரையில் எழுதியிருக்கிறேன்.

பிறகு அத்வைத தத்துவமென்பதைத் தெளிவாக அறியவும், அனுபவத்தில் கொண்டுவருதற்கு வேண்டிய சாதனங்க ளின்னவை யென்பது விளங்கவும் பல முக்கிய உபந்நியாசங்கள் சேகரம் செய்து வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன. இவற்றில் மிகச் சிறந்த “ஆநந்தம் எங்கிருக்கிறது?” என்பதையும், “மதப்பயிற்சியின் பூர்த்தி” என்பதையும் சொல்லலாம். ஸ்வாமிகளின் ஹிமாசல யாத்திரையில் விளங்கும் மனோபலம் [பக்கம் 110-116) ஆச்சரியத்தை விளைவித்துப் பயங்கரத்தன்மையுடன் கூடியது. பிறகு மனைவியுடன் வசிப்பவர்கள் நடந்துகொள்ளவேண்டிய விபரம் தெரிவிக்கும் பாகம் விளங்குகிறது. முடிவில் தேசபக்தி நிறைந்த உபந்யாசங்கள் வெளியாகியிருக்கின்றன. ஆஹா! ஸ்வாமிகளின் பக்தியே பக்தி. இந்திய பூமி மிகப் புண்ணியம் நிறைந்த

தென்று ஸ்ரீ கிருஷ்ணன் இந்தப் பூமியின் மண்ணையும் தின்று என்கிறார். பாரத மாதாவை இவ்வளவு உன்னதமாகக் கருதும் ஸ்வாமிகளின் தேச பக்தியே உண்மையான பக்தி. மற்றப்படி மதப்பயிற்சி வாசனையு மறியாத இராஜீயக் கிளர்ச்சிக்காரரது பக்தியும், ஓட்டுகளை விரும்பி உழைப்பவரது பக்தியும் நாடக மேடையில் போட்டுக்கொள்ளப்படும் வேஷங்களேயல்லவா?

ஸ்ரீ ஸ்வாமிகளின் உபந்யாசங்கள் நிரம்ப அதிகமிருக்கிற தென்றாலும் இந்தப் புத்தகத்தில் ஸ்வாமிகளது கொள்கைகள் முழுமையும் விளக்குமாறு தேவையான பாகங்களை வெளியாக்கி யிருக்கின்றேன். இப் புத்தகம் ஜனங்களால் விரும்பப்படுமாயின் ஸ்ரீ இராமதீர்த்தரது மற்ற உபந்யாசங்களையும் சேர்த்து வேறு பாகமாக வெளிப்படுத்தப் பிரியங் கொள்வேன். பிரபஞ்சத்தில் தன்னைத் (ஆத்மனைத்) தவிர வேறு எதுவுமில்லையென அறிந்து அதனால் தன்னலமற்ற (பற்றின்மை கொண்ட) வாழ்க்கையை யப்பியசித்து மானிடராய்ப் பிறந்தவர்களது நோக்கமாகிய முக்தி நிலையை அடைவதற்கு இப் புத்தகம் உற்சாக மூட்டவேண்டுமாறு பாரதமாதாவைப் பிரார்த்திக்கின்றேன். ஓம் சாந்தி!

விவேகாநந்தாலயம்
திருவல்லிக்கேணி,
சென்னை.
4—5—1920.

R. நாராயணஸ்வாமி ஐயர்.

# விஷய அட்டவணை



ஸ்ரீ ஸ்வாமி இராமதீர்த்த பரமஹம்ஸ தேவர், எம்.ஏ.



ஸ்ரீ திரிபுரசுந்தராம்பாள்—திருக்கழுக்குன்றம்.

# ஸ்ரீ ஸ்வாமி இராமதீர்த்த பரமஹம்ஸ விஜயம்.

## முன்னுரை.

உலகத்து எந்தப் பாகமாவது எப்பொழுதேனும் எவ்வாருயினும் கலங்கி நிற்கும்போது அக்கலக்கத்தைத் தீர்க்கவேண்டி ஈஸ்வரன் தமது அம்சத்தைச் சிறிது வெளிப்படுத்துகிருர். ஜனசமூகத்தார் செழிக்கவேண்டியதற்கும் சிறப்புடன் விளங்குவதற்கும் சாதகமாயிருக்கும் தத்துவங்களெல்லாம் தர்மமாகும். ஜனங்களில் எந்த வகுப்பினராவது தன்னயத்தால் தூண்டப்பட்டுப் பிற வகுப்பினரைத் தொல்லைகளுக்குள்ளாக்கிப் பொது சமூகத்தில் குழப்பங்களை உண்டாக்கினுல் 'தர்மம் குறைந்துபோயிற்று' என்று கூறப்படும். தர்மத்தில் எல்லாத் துறைகளும் சிறந்து விளங்கினுல் சர்வ ஜனங்களும் சுகமே வாழ்வார்கள். ஆனுல், உலகப்போக்கில் ஒவ்வொரு சமூகத்தினரும் மேலோங்கிச் சிறிதுகாலம் சென்றுகொண்டும் பிறகு கீழ்நோக்கிச் சிறிதுகாலம் இறங்கிக்கொண்டும் செல்வது இயற்கையின் அல்லது பிரகிருதியின் தத்துவம். கீழ்நோக்கிச் செல்லுங்காலத்

தில் பல வகுப்பினருள்ளும் சுயநலம் என்ற பேய் நர்த்தனம் செய்து தனது தொழிலைச் செவ்வனே நடத்தி, சமூகத்தவருக்குள் குழப்பத்தை உற்பத்தி செய்துவிடும். இப்படிக் கீழ்நோக்கி யிறங்கும் காலந்தான் தர்மம் தேய்ந்துவரும் காலமாகும். தர்மம் தேய்ந்து அதர்மம் மேலோங்கி நிற்கும் காலத்தில் ஜனசமூகத்தை ரட்சிக்கக் கடவுள் தமது அம்சத்தில் சிறிது வெளிப்படுத்தி, அளவற்ற ரஜோகுணத்தோடும் கூடிய ஒரு மகாபுருஷனிடம் மகத்தான சத்வம் பிரகாசிக்குமாறு செய்து விடுகிறார். இப்படிப்பட்ட மகா புருஷர்கள் அவதாரங்களெனப் பெயர் பெறுவார்கள்.

அநாதிகால முதற்கொண்டு பாரதபூமி யெனப் பெயர் பெற்ற நமது புண்ணிய பூமியில் மகத்தான தத்துவங்களெல்லாம் மகத்தான பிரகாசத்துடன் விளங்கி நமது பாரததேவியை உலகில் உள்ள எல்லாப்பாகங்களையும்விடச் சிறந்து விளங்குமாறு செய்துவந்தன. தத்துவ சாஸ்திரங்களெனப்படும் வனத்தில் எந்தத் தேசத்திலும் கிடைத்தற் கரியதான அரிய புஷ்பங்களுள் மிக்கவும் அரியதான அத்வைத தத்துவமென்ற புஷ்பம் நறுமணம் வீசிப் பொலிந்த நாடு நமது பாரதபூமியாம் புண்ணிய நாடு. 'தத்துவ சாஸ்திரங்கள் ஆத்ம தத்துவத்தைப் போதிப்பதால் இகலோக வாழ்க்கைக்குச் சகாயம் தத்துவப் பயிற்சியினால் கிடையாது' என்று சிலர் கூறுவது பிழையாகும். ஆத்மப்பயிற்சி என்பது தன்னயமற்ற வாழ்க்கையைக் கற்பித்து, ஜனசமூகம் மேன்மைப்படும்படி செய்து, தர்மத்தின் பலவகைப்பட்ட துறைகளும் பிரகாசிக்கும்படி செய்வதால் ஜனசமூகம்

எல்லா வழியிலும் பலனடைய ஆதாரமாகிறது. ஆதலால் 'ஆத்மப்பயிற்சி சிதைந்து போனபடியால் பாரததேசம் உலகில் குறைவுடைய தேசமாகிவிட்டது' என்பது உண்மையிலும் உண்மையாம். ஜீவர்களின் தன்னயமற்ற வாழ்க்கையில் குறைவு உண்டானல் உண்மையான தத்துவ வாழ்க்கை குறைவுபட்டதாகும். அப்போது தர்மத்தின் பல துறைகளும் சிதைந்து சமூகத்தை சீர்கேடடையச் செய்யும், உலகில் ஒரு ஜனசமூகம் மேலோங்கி நிற்பதற்குச் செல்வப் பெருக்கு, அதிகாரப் பெருக்கு, என்ற இரண்டும் அவசியமெனத் தற்காலத்து நாகரிகம் கூறுகின்றது. 'ஆத்மப்பயிற்சி என்பது விளையாட்டுக்காக ஏற்பட்ட ஒரு இலாகா' என தற்கால நாகரிகம் மதிக்கின்றது. இது ஒரு பெரிய பிழையாகும். இந்தப் பிழைக்காகத்தான் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் தற்கால நாகரிகத்திற்குப் பெயர்போன ஐரோப்பா முழுமையும் நரகலோக வாதனைகளையெல்லாம் அனுபவித்து வருமாறு நேர்ந்துவிட்டது' 'இகலோக வாழ்க்கைக்கு ஆத்மப் பயிற்சி யவசியமில்லை' என்று நினைத்த பாவத்தினுல் நேர்ந்திருக்கும் துக்கங்களினின்று கரை யேறுவதற்கு மார்க்கம் உண்மையான தத்துவ ஆராய்ச்சியுடன் கூடியவாழ்க்கை யொன்றுதான். இந்த உண்மையை அறியும்வரையில் சர்வதேச சமூகக் குழப்பம் நீங்கித் தெளிவு ஏற்பாடாவது கிடையாது.

ஒரு ஜனசமூகத்தின் உண்மையான உயர்வு எப போதென்றல், 'செல்வப் பெருக்கும் அதிகாரப் பெருக்கும் நிறைந்திருப்பதுடன் பலவகைப்பட்ட சாஸ்திர ஆராய்ச்சியிலும் மேலோங்கி நிற்கும்போதுதான்' என்று

பாரதபூமியி லுண்டான அனுதிகால தத்துவம் கூறுகின்றது. நமது பூமியில் ஆத்மதத்துவம் மேலோங்கிப் பிரகாசித்த காலத்தில் சகல சாஸ்திரங்களும் சிறந்துவிளங்கியதும், பிற்காலங்களில் ஆத்மப்பயிற்சி குன்றி நிற்கும் போது ஒவ்வொன்றும் குறைவுபட்டதும் கவனிக்கத்தக்கது. இது தற்செயலாகத் தோன்றிய ஒற்றுமையல்ல. தன்னயமற்ற வாழ்க்கையே சகல செழிப்புக்கும் அஸ்திவாரம். இது ஒப்பற்ற உயர்ந்த தத்துவம். தன்னயமற்ற வாழ்க்கையைக் காண்பிக்கும். தத்துவ வாழ்க்கையை அலட்சியம் செய்தகாலத்தில்தான் பாரதபூமி அந்நியர் வசமாகிவிட்டது. இதுவரையிலும் அந்நியர் வசமிருப்பதற்குக் காரணம் உண்மைத் தத்துவமில்லை மேலோங்காததுதான்.

ஆனல், ஒருசமூகம் கீழ்நோக்கிச் செல்லும்போது சிறிதுதூரமிறங்கியதும் துக்கங்கள் நிரம்பி ஜனங்கள் தவிக்கக் கடவுள் தமது சக்தியினுல் சிறிது அனுக்கிரகம் செய்வார் என்பது உண்மை. பாரதபூமியானது அந்நியர் ஆளுகைக்குள் சிறிதுகாலமிருந்து பூர்வீகப் பெருமைகள் குன்றி நின்றபோதெல்லாம் பரிசுத்த குணமிக்க புண்ணிய புருஷர்கள் மகத்தான ரஜோ குணத்தில் ஜொலிக்கும் சத்வகுணத்துடன் விளங்கத் தோன்றிக்கொண் டிருந்தார்கள். வட. இந்தியாவில் வசிக்கும் ஜனசமூகத்தில் இஸ்லாம் மதத்தவர்கள் வந்து புகுந்து உண்டாக்கிய குழப்பங்கள் சீக்கிய ஜாதியாரின் ஆதி மதாசாரியரான குருக்களை உற்பத்தி செய்தன. மேன்மைபெற்று விளங்கும் வீரர்களான சீக்கியர்கள் தம் குருமூர்த்திகளின் மகத்துவத்தை விளக்கிக்

காட்டும் ஞாபகச் சின்னங்களாக விளங்குகிறார்கள். தக்கணத்திலும் மகாராஷ்டிர தர்மத்தை யுண்டாக்கிய ஆதிபக்தகோடிகள் தோன்றினார்கள். இவர்களுடைய மகத்தான சத்வகுணமே மகாராஷ்டிர வீரர்களின் மூலமாக ஒரு காலத்தில் இமயமலைமுதல் கன்னியாகுமரி வரையில் பிரகாசித்து ஜொலித்தது. இவர்களெல்லாம் ஜனசமூகம் கலங்கிநின்ற காலத்தில் கடவுளருளால் தோன்றிய மகா புருஷர்களாவார். கலக்கம் தெளிந்து பல துறைகளும் விளங்குவதற்குக் காரணமாக நிற்பவர் இவர்கள். சர்வ மாயாசக்திக்கும் தலைவரான கடவுளின் விசித்திர சங்கல்பத்தை யாரே அறியவல்லார்.

ஆசியா கண்டத்தைச் சேர்ந்த அந்நியர் புகுந்து கலக்க முண்டாக்கிய பிறகு பாரதபூமி முழுமையும் தெளிவதற்குள் நிலைமை மறுபடியும் மாறிவிட்டது. இந்தியா தேசத்தின் சிற்சில பாகங்களில் மாத்திரம் கலக்க முண்டாகி யிருந்தது. கலக்க முண்டான பாகத்தில் கடவுளின் கருணை பாய்ந்து சத்வகுணப் பிரகாசம் பொருந்திய மகா புருஷர்கள் தோன்றினார்கள். இம் மகா புருஷர்களின் சக்தியானது ஆசியாகண்ட முழுதும் பிரகாசிக்கும். ஆனால், கடவுளின் சங்கல்பம் வேறாக இருந்து வருகிறது. மனிதர்களிடம் தோன்றும் சத்வ ரஜ தமோகுணச் சேஷ்டைகளையெல்லாம் எப்படியோ ஈசன் தன் காரியத்திற்கு உபயோகித்துக்கொண்டு விடுகிறான். உலக முழுமையும் படைத்து ரட்சிக்கும் கடமையை மேற்கொண்ட ஈசன் இந்தியாவின் சில பாகங்களை மாத்திரம் தெளியவைத்து நின்றுவிடமாட்டானன்றோ? வட இந்தியாவில் மாத்திரமே அந்நியர்கள்

புகுந்து கலக்க மேற்பட்டபடியால் மகா புருஷர்கள் அங்குப் பலர் தோன்றினார்கள். திராவிட பூமியெனப் பெயர் பெற்ற தென்தேசமோ பௌத்தமதக் கிளையான ஜைனமதத்தால் தாக்கப்பட்ட பிறகு வேறு அந்நியர்வச மகப்பட்டுத் தவிப்படையவில்லையாதலால் பிற்காலங்களில் மகாபுருஷர்கள் தோன்றக்கூடிய பாக்கியம் பெற வில்லை.

பிற்காலங்களில் ஐரோப்பியர் புகுந்து பாரதபூமியில் வியாபகமடைந்த விசித்திரகதை தற்கால சரித்திர சம்பந்தமுள்ளது. இவர்கள் புகுந்த பிறகுதான் ஆத்மப் பயிற்சியை அப்படியே தாராளமாக ஜனங்கள் கைவிட ஆரம்பித்தார்கள். தற்கால நாகரிகமாகிய ஐரோப்பிய நாகரிகத்தில் தன்னயமற்ற பயிற்சிகளுக்கு நேரே செல் வாக்குக் கிடையாது. ஆனால், மறக்கத்தகாத உண்மை யொன்றுண்டு. அவர்களுக்குத் தெரியாமலே அவர்க ளிடம் மறைந்து கிடக்கும் தன்னயமற்ற குணம் தான் அவர்களது நாகரிகத்தை வெளியுலகில் பரவும்படி செய் திருக்கிறது. தன்னயத்தோடுங் கூடிய ராஜதந்திர சூழ்ச்சிக ளால் ராஜ்யம் எங்கும் பரவிவிடவில்லை. பெருந்தன் மையையும் உதாரகுணத்தையும் காட்டியவரையில் ராஜ் யம் விசாலமாக விரிந்துகொண்டேபோயிருக்கிறது. தன் னயம் பொருந்திய தந்திரங்களைப் பிரயோகம் செய்த இடங்களிலெல்லாம் அபஜெயமே கிடைத்திருக்கின் றன. ஆனால், தற்கால நாகரிகம் என்ற இராட்சத னுக்கு இந்த உண்மை மறைந்துநிற்கிறது. 'தன்னலத்தா லேயே சகல வெற்றியும் கிடைக்கும்' என்று எண்ணி விடுகிறான். 'அரசன் அன்றே கொல்வான், தெய்வம்

நின்று கொல்லும்'. ஆதலால், 'ஐரோப்பிய நாகரிகம் உலகமெங்கும் பரவி மேலோங்கிவிட்டது' என்ற எண்ணம் உலகத்து நிபுணர்களிடம் குடிகொண்டிருக்கும் காலத்திலேயே ஐரோப்பா திடீரென்று மகத்தான துக்கங்களுக்கெல்லாம் இடமாகிவிட்டது. ஆழ்ந்து பார்க்கும் சக்தி வாய்ந்தவர்க்கு இந்தச் சிறந்த உண்மை தென்படும்.

ஆனால், தேசத்திற்குள் ஏற்பட்ட சமூகக் கலக்கம் தெளிவதற்கு முன் ஜடதத்துவ சம்பந்தமுள்ள நாகரிகம் பாரத பூமிக்குள் புகுந்து ஆத்மதத்துவத்தைப் பரிகாசம் செய்யத் தொடங்கிய காலத்தில் ஜனங்கள் மதிமயங்கலானார்கள். மறுபடியும் ஒரு பெரிய கலக்கம்; இதற்குமுன் எப்போதுமில்லாத கலக்கம். வர்த்தக சேர்க்கையினால் ஆசியாவும் ஐரோப்பாவும் கலந்து கொள்கின்றன. தத்துவ வாழ்க்கை ஏற்கனவே குன்றிப்போன இந்திய சமூகத்தில் வர்த்தக நாகரிகம் பிரகாசித்து இந்தியாவின் பூர்வீக வாழ்க்கையை எதிர்த்துப் போராடிநின்றது. 'இகலோக சாதனங்களைக் கைக்கொள்வது மாத்திரமே சிறந்தது' என்றும், 'ஆத்மப் பயிற்சியென்பது வீண்கனவு' என்றும், நாகரிக முதிர்ச்சி பெற்றோர் மதித்துவந்தனர். அநாதிகால முதற்கொண்டு ஆத்மப்பயிற்சியைப் போற்றிவந்த ஜனசமூகம் இவ்வாறு அடிப்படையிலிருந்து கலக்கப்படவே யோசிக்கத் தலைப்பட்டது. ஜனசமூக மனோமய கோசத்துள் அமுந்திக் கிடக்கும் வாசனைகளெல்லாம் வெளிக் கிளம்பின. இவ்வளவுதான் தாமதம். சத்வகுணப் பிரகாசம் மறுபடியும் விளங்கிற்று. உலகமெல்லாம் பிரகாசிக்கத்தக்க பெரு

மையுடன் கூடியவர்கள் கிளம்பினார்கள். சீக்கியரும் மகாராஷ்டிரரும் இந்தியாவுக்குள் மாத்திரம் விளங்க வேண்டியதற்காகத் தோன்றியவர்கள். பிற்காலத்தில் தோன்றிய மகாபுருஷர்கள் ஐரோப்பாவிலும் சத்வகுணப் பெருக்கத்தினால் பிரகாசிக்கவேண்டியவர்கள். இவ்விதத் தன்மை வாய்ந்தவர்களுள் சிறப்புற்று விளங்கிய சில மகா புருஷர்கள்: ராஜாராம் மோகனராய், தயாநந்த சரஸ்வதி ஸ்வாமிகள், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் முதலி யோர். இவர்களுள் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரே சர்வ தேசத்தவராலும் போற்றப்படுபவராவார். இவரது உத்தம சிஷ்யரான ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகள் உலக மறிய வேதாந்த தத்துவத்தைப் பறைசாற்றிய வீரர். "ஆத்மப் பயிற்சியைக் கைவிட்ட காலமுதற்கொண்டு தான் இந்தியா கீழ்நோக்கிச் செல்ல ஆரம்பித்திருக் கிறது" என்று கண்டு வெளியிட்ட உத்தம புருஷர் இவர்தான். ஐரோப்பிய நாகரிகத்தால் வெறிகொண் டிருக்கும் ஜனசமூகங்களை நேரில் கண்டபிறகு ஆழ்ந்த புத்தியுடன் பார்த்ததன் பயனாக, "நாகரிக மிகுந்த தேசங்களில் லட்சக்கணக்கான ஜனங்கள் தங்களுடைய சமூக நோக்கங்களைப் பூர்த்திசெய்ய வேதாந்தத்தின் உயர்ந்த நிலைமையே வேண்டுமெனக் கண்டுகொண்டு விட்டார்கள்" என்று கூறியிருக்கிறார். எனவே, என்ன நிலைமை ஏற்பட்டுவிட்டது. வர்த்தக மூலமாக இரண்டு வித நாகரிகங்களுடன் கூடிய ஜனசமூகத்தார் கலந்து கொள்ள ஜடதத்துவ வெள்ளம் ஒருபக்கமாக ஓட வும், ஆத்மதத்துவ வெள்ளம் எதிர்முகமாக ஓடவும் ஆரம்பித்திருக்கிறது. ஜடதத்துவ வெள்ளம் வர்த்தகப் பெருமை படைத்தவர்கள் மூலமாக மேனாடுகளி

லிருந்து கீழ்நாடுகளுக்குச் செல்ல நேர்ந்தது. ஆத்ம தத்துவ வெள்ளம் கடவுளின் கருணையால் அளவற்ற ரஜோகுணத்தோடுங் கூடிய மகா சாத்விகர்கள் அவதரிக்க அவர்கள் மூலமாகக் கீழ்த்தேசங்களிலிருந்து மேனாடுகளுக்குச் செல்ல நேர்ந்தது. இவ்வித சத்புருஷர்கள் பலர் இக்காலத்தில் உற்பத்தியாகிக்கொண்டு வருகிறார்கள். இவர்களுள் ஒரு உத்தமாது சரித்திரத்தைத் தான் இப்பொழுது கூற முன்வந்தேன். உலகத்தில் அடையத்தக்க பொருள்களை யெல்லாம்விட மிக சிரேஷ்டமானது ஆத்மஞானமென்ற பொக்கிஷம். இதனை யடைந்த மகாபுருஷர்கள் உலகத்திலேயே இந்தியாவில் தான் தற்காலத்திலும் அதிகம். இந்த மகாபுருஷர்களுள் உலகத்தின் நன்மையைக் கோரிய காரியங்கள் செய்யவேண்டியதற்காக ரஜோகுண சம்பந்தம் வைத்துக்கொள்பவர்களே உலகத்தை ரட்சிப்பதற்காகக் கடவுளால் கையாளத்தக்க கருவிகளாகின்றார்கள். இவர்கள் காலத்திற்குத் தகுந்தபடி பலவித சக்திகளுடன் பிறக்கின்றார்கள். தற்காலத்தில் வெளியுலகத்தில் போய் ஞானஒளி பரப்புவதற்குமுன் உலகத்தாரால் போற்றப்படுகின்ற தற்கால நாகரிகப்போக்கில் தேர்ந்த புத்தி செலுத்தியவராகவேண்டும். அதற்காகப் பலமத ஆராய்ச்சிகள் செய்வதுடன் ஜடதத்துவ சம்பந்தமான சாஸ்திரங்களின் போக்கையும் அறிந்தவர்கள் வேண்டும். அதனால்தான் தற்கால முனிவர்கள் ஆங்கிலக் கல்வி கற்றவர்களாகவும், வடமொழியுடன் வேறு சில பாஷைகளில் தேர்ந்தவர்களாகவு மிருக்கின்றார்கள். ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தர் கல்கத்தா சர்வகலாசாலையில் பி. ஏ. பட்டம் பெற்றவர். அதே மாதிரி நான் இப்போது எடுத்

துக்கொண்ட ஸ்ரீ ஸ்வாமி இராமதீர்த்தரும் லாகூரில் படித்து எம். ஏ. பட்டம் பெற்றவர். வடமொழியுடன் ஹிந்துஸ்தான் பாஷைகளில் பலவும் அறிந்தவர். உலகத்துச் சகல தத்துவங்களிலும் மிகுதியான பழக்க முள்ளவர். இப்படிப்பட்ட பெருமைகளுடன் ஆத்மஞானமடைந்து அத்வைத நிலேயே மிக்க உயர்ந்ததென்று அனுபவித்த உண்மையைத் தற்கால நாகரிகம் படைத்த சமூகத்தினர்முன் பிரகாசம் செய்து, அவர்களும் மதி மயங்குமாறு செய்து, நமது பூமியின் மகத்துவத்தை ஸ்தாபித்தவர். இவ்வித மகாபுருஷர்கள் செய்யவேண்டிய காரியம் இருவகையாகும். 'நாட்டிற்குள் ஆத்மப் பயிற்சி ஆழ்ந்துபோய்விட்டபடியால்தான் குறைவு நேர்ந்து ஜனங்கள் இகலோக வாழ்க்கைச் சுகங்களை யெல்லாம் இழக்க நேர்ந்தது' என்று விளக்கிக்காட்டி உண்மையான தத்துவப் பயிற்சியை ஜனங்கள் ஆதரிக்குமாறு செய்யவேண்டியது ஒரு பாகம். 'வெளியுலகத்தார் முன் பாரத பூமியின் தத்துவங்களே உண்மையில் உலகில் ஜெயம் பெறுவது' என்று எடுத்துக் காட்டி விளக்குவது மற்றொரு பாகம். இந்த இரண்டுவிதமான வேலைகளும் ஒன்றுக்கொன்று உதவி செய்ய அவசியமாகிறது. தற்கால நாகரிகப்போக்கின் தீமைகளால் மதிமயங்கி நிற்கும் மேல்நாட்டவர்க்கும் ஆத்மப்பயிற்சி சம்பந்தமான நாகரிகம் அவசியம். இந்தியர்களும் இகலோக வாழ்க்கையை மறப்பது தர்மம், என்று தப்பபிப்பிராயம் கொண்டுள்ள நிலைமையை ஒழிக்கவேண்டும். இந்த இரண்டுவித வேலைகளையும் அழகாக முடிப்பவர்களே தற்காலத்திய மகாபுருஷர்கள். கடவுளின் கருவிகள் இவர்களே. உத்தமமான கர்மயோகிகளும் இவர்களே யாவர்.

உண்மையான அத்வைத நிலையில் எப்போதும் தங்கி நின்று மகத்தான அன்பு நிறைந்த பேரானந்தப் பெருக்கால் உலகத்தை மூடிவிடுகின்ற சக்தி வாய்ந்தவரும் தம்மைச் சுற்றியுள்ளாருடைய சகல துக்கங்களையும் அறவே ஒழித்துவிடக்கூடியவருமான ஸ்ரீ ராமதீர்த்த ஸ்வாமிகளின் மகத்துவத்தை என்னால் கூற முடியாது. இது வரையில் எவரும் கூறத் துணியவுமில்லை. ஆனால், கருணைப் பெருக்கத்தால் உலகுய்யவேண்டுமென்று கடவுளின் கிருபையால் ரஜோகுணம் பிரகாசித்து அதன் மூலமாகவன்றோ பேரானந்தமெனச்சொல்லத்தகும் தத்வகுணம் ஜொலித்தது. அந்த ரஜோகுணத்தைத் தான் சிறிது வர்ணிக்கலாம், அதன் மூலமாக விளங்கும் சத்வம் கிரகிப்பவரது சக்திக்கும் கூறுகின்ற என்போன்றவரது சக்திக்கும் தக்கவாறு விளங்கும். தற்கால உலகம் துக்கம் நீங்கப்பெறவேண்டுமென்ற கருணையுடன் வேலை செய்து விளங்கிய சுபாவங்களைத் தரிசித்தல் நமது கடமையாகும். இது ஒரு புண்ணிய காரியமாகும். முதலில் இம்மகாபுருஷரது வாழ்க்கையைப் பார்த்துவிட்டுப் பிறகு பேரின்பம் சொரிந்து தரும் அமுதவாக்குகளையும், ஜீவர்களிடம் அன்புபாராட்டியதால் உண்டான புத்திமதிகளையும் அப்படியே கூறலாமென்பது எனது எண்ணம்.

---

# Ramthirtha Paramahamsa Vijayam

## PART I

## *Hindu Opinion (27-8-20)*

"This is a Tamil rendering of some of the highly inspiring lectures and writings of Swami Ramthirtha on Vedanta and nationalism. The book, consisting of more than 250 pages, contains also an account of the Swami's noble life. We hope the Tamilian public will welcome the publication since it presents an easily digestable form of the fundamental principles of our ancient philosophy with appealing illustrations from daily life and puranic stories."

ஓம்

ஸ்ரீ இராமதீர்த்தாயநம:

# ஸ்ரீ ஸ்வாமி இராமதீர்த்த பரமஹம்ஸ விஜயம்.

## ஸ்ரீ ஸ்வாமிகளின் சரித்திரச் சுருக்கம்.

ஐந்து நதிகள் பாயப்பெறும் பாக்கியம் பெற்ற பஞ்சாப்தீரத்தில் சிலகாலங்களுக்கு முன் துளசிதாஸர் என்ற இராமபக்தர் ஒருவர் இருந்ததை எல்லோரும் அறிந்திருப்பார்கள். வடமொழியில் வால்மீகியால் எழுதப்பட்ட இராமாயணத்துக்குச் சமத்துவமான பெருமையுடன் ஹிந்திபாஷையில் மற்றொரு இராமாயணம் வெளியிட்ட புகழுடன் கூடியவர் இந்த இராமபக்தரான துளசிதாஸர்; பிராமண குலத்தில் உதித்தவர். இந்தத் துளசிதாஸரது நேர் வழியில் அவருடைய வம்சத்தில் 1873-ம் வருஷத்தில் ஒரு குழந்தை பிறந்தது. முப்பத்திமூன்று வருஷ காலம் மண்ணுலகில் தங்கி, இருபதாம் நூற்றாண்டு ஆரம்பிக்கும் தருணத்தில் கடவுளின் சிறந்த கருவியாக நின்று

உயர்ந்த அத்வைதாநுபவம் பெற்றவர்கூட இகலோக சாதனங்களைப் போதிக்கத்தக்க அதிகாரிதான் என்று விளக்கவந்த தீரர் தோன்றினார். குழந்தை பிறந்ததும் வழக்கப்படி ஜோதிடர்கள் வந்து பார்க்க பரம ஆச்சர்ய மடைந்தனர். சாதாரண குடும்பங்களில் கூட சிறிது அதிகமான அதிருஷ்டம் ஒருதுறையில் ஓங்கிநின்றாலும் ஜோதிடர்கள் ஆச்சர்யமாக வர்ணிக்கத் தொடங்குவதை நாம் பார்க்கிறோம். அப்படியிருக்க நமது தேகத்தை மாத்திரமேயன்றி உலகத்தையே அசைத்து வைத்த மகிமைபொருந்திய மகாத்மாவின் ஜாதகத்தைப் பார்த்து விட்டால் அவர்களுக்கு வார்த்தைகள் கிடைக்குமோ? "இவர் காலத்தில் உலகப்பெருமையுடன் விளங்கும் தீரர்களுக்குள் தலைமை வகிக்கும் பெருமையுடன் வசிப்பார்" என்று கூறினார்கள். குஜரன்வாலா ஜில்லாவில் முரோலி வாலா என்ற கிராமத்தில் தீபாவளிக்கு மறுதினம் தோன் றினார். இந்தக் குழந்தை பிறந்த சிறிது நாட்களுக்குள் ளேயே தாயாரை இழக்கும்படி நேர்ந்தது. ஆதலால், குழந் தைப்பருவத்திற்கு அவசியம் தேவையான தாய்ப்பால் கூட கிடைக்கவில்லை. தமது வாழ்க்கையில் மேலான அத் வைத நிலைமையை மாத்திரமே சுயமாக அனுபவித்துவந்த தீரருக்குக் குழந்தைப்பருவத்தில்கூட அவசியமாக வேண் டிய பொருள் இல்லாமற்போயிற்று. சரீர சுகத்தைப்பற் றிய கவலையைப்படாமல் ஆத்மாவிலே லயித்திருப்பதல்லவா ஆத்மானுபவமாகிற அத்வைதானுபவம். அதற்கு வேண் டிய பழக்கமேற்படவே கடவுள் இவ்வாறு செய்தார் போலும். இவரது மூத்த சகோதரரான குருதாஸர் இவரைப் போற்றி வளர்த்தார்.

பெரிய மகான்களுடைய சரித்திரத்தில் ஜனங்கள் கவனிக்கவேண்டியதெல்லாம் பிறந்து வளர்ந்த விபரங்களும் சரீரமாகிய கருவியால் செய்த காரியங்களின் தொகுதியுமல்ல. 'இன்னவயதில் இன்ன செய்தார்' என்று கூறவேண்டியது அவசியமல்ல. மகான்களின் வாழ்க்கையில் பிரகாசிக்கும் சக்திகளும் விசேஷமான தத்துவ உண்மைகளுமே கவனிக்கத்தக்கன. நமது பாரதகண்டத்து மகான்களிடம் உலகில் வேறெங்கும் காணப்படாத சில பெருமைகள் விளங்குகின்றன. பூத உடம்பைப்பற்றிப் புகழ் ஜனசமூகத்திற்கு அவ்வளவாகத்தேவையில்லை. தத்துவ நிலையைப்பற்றிய புகழுடம்புதான் பிற்காலத்தில்கூட ஜனசமூகத்திற்குப் பயன்படும். பாரதகண்டத்து மகான்களிடம் விளங்கும் பெருமைகள் என்ன? ஐரோப்பாவில் நெப்போலியனைப் போன்ற இராணுவ வீரர்க்குக் கிடைக்கும் புகழ் ஆத்மப்பயிற்சியில் வல்ல ஆசாரியர்க்குக் கிடைக்காது. இந்தியாவிலோ நெப்போலியனைப்போன்ற இராணுவ வீரர்க்கு அந்தப் பெருமைக்காக மாத்திரம் பெருமை கிடைக்காது. விக்கிரமாதித்தன், அசோகன் முதலியவர்கள் சிறந்த யுத்தவீரர்களானபோதிலும் அவர்கள் தேசமெங்கும் தர்மத்தை ஸ்தாபிக்கப் பாடுபட்டிராவிட்டால் சரித்திரங்களில் அவர்கள் பெயரே வந்திருக்காது. தர்மமாகிற நோக்கத்தைப் பூர்த்திசெய்ய தமது உயிரையே இழக்கத் தயாராயிருக்கும் மன்னர்கள்தான் சிறந்த மன்னர்களெனப் போற்றப்படுவார்கள். மன்னனேயன்றிச் சந்நியாசியானாலும் ஆத்மவழியில் பெரியார் பெயர்கள் நமது தேசசரித்திரங்களில் பரந்து கிடக்கின்றன. வாழ்க்கையென்பது தத்துவ வழிப்படல் என்பதுதான். சரீரம்

மனாது முதலியபோர்வைகளைச் சிறப்பிக்கப் புத்தி செலுத்தாமல் உள்ளேயிருக்கும் மனிதனைச் சிறப்பிக்க வழி தேடுவதுதான் சிறந்த தர்மம். 'ஒவ்வொருவரும் தனி மனிதர்கள்' என்று பிரித்துக்காட்டித் தனிப்பட்ட சுதந்தரத்தையே நோக்கமாகக் கொண்ட மேல்நாட்டவர்களின் வாழ்க்கையைக் காட்டிலும் சமூக முழுமையுமே சேர்ந்த ஒரு சமஷ்டியை ஒன்றாகப் பாவிக்கும் தர்மவாழ்க்கையைச் சத்தியமென மதிக்கும் இந்தியவாழ்க்கை சிறந்ததென்பது ஆராய்ந்து பார்ப்பவர்க்கு விளங்கும். இந்த இரண்டுவித நோக்கங்களையும் பிரதானமாகக் கொண்டு இரண்டுவித நாகரிகங்கள் கிளம்பிவிட்டன. 'எவ்வகையிலும் தனிமனிதருடைய சுதந்தரத்திற்குப் பங்கம் வரக்கூடாது' என்பது மேனாட்டவர்களின் நோக்கம். அதற்குத் தகுந்தபடியே சமூக வழக்கங்களும் சட்டதிட்டங்களும் மரியாதைகளும் ஏற்படுகின்றன. ஐரோப்பிய நாகரிகத்தில் தனிமனிதர்களுடையவும் ஸ்திரீகளுடையவும் சுதந்தரம் காப்பாற்றப்படத்தான் ஜனசமூக சுதந்தரம் வேண்டுகிறார்கள். வார்த்தைகளால் தாராளக் கொள்கைகள் பேசினாலும் செய்கையில் அவர்களது சமூகம் இடங் கொடுப்பதில்லை. சுயநலம் கருதிய சமூகமே ஒவ்வொரு செய்கையிலும் வெளிப்படுகின்றது. இந்திய தேசத்து நாகரிகமோ தர்மத்தையே பெரிதெனக் கொண்டு சமூக சமஷ்டியின் நன்மைக்கே தனி மனிதர்களின் சுதந்தரத்தையும் உபயோகிக்க வற்புறுத்துகிறது. தனிமனிதர்களின் காரியங்கள் ஜனசமூகத்திற்கு நன்மையைப் பயப்பதாயிராவிட்டால் கண்டிக்கப்படுகின்றன. சமஷ்டியின் மேன்மையே சத்தியமென்று நமது நாகரிகம் கூறுகின்றது. காலத்

திற் கேற்றவாறு சமூக மேன்மைக்கு வேண்டிய காரியங்கள் நிதானிக்கப்பட்டு தர்ம சாஸ்திரங்கள் ஸ்தாபிக்கப்படும். 'இவ்விதம் சமஷ்டியாத்மனே சத்தியமென மதிப்பதால்தான், தனி மனிதனைத் தனியே மதியாதிருப்பதனால்தான் இந்தியசமூகம் அழியாமலிருக்கிறது' என்றும், 'உலகில் மற்ற சமூகங்களெல்லாம் இவ்வித சத்திய தத்துவத்தை யறியாதபடியால்தான் நிலையாக வசிக்கச் சக்தியற்றவர்களாய் இருக்கின்றன' என்றும், ஆரிய தத்துவ உண்மை கூறும். சரித்திரங்களே இதற்கு ருஜு. 'தனி மனிதரைக்காட்டிலும் சமூகமே சிறந்தது' என்றும், 'ஒரு சமூகத்தைக் காட்டிலும் மனிதவர்க்கமே சிறந்தது' என்றும் கூறுகிற தத்துவம் தியாகம் என்ற கொள்கையைச் சிறப்பித்துக் கூறும். நான் அழியாமலிருக்கவும் சுகமடையவும் சமூகம் அழியாமலிருக்கவேண்டியது அவசியம். அதனால் ஆத்மப்பயிற்சி சம்பந்தமான நாகரிகம் ஏற்பட்டது. சமூக சேவையே ஆத்மப்பயிற்சியின் பயன். ஆதலால், இந்தியாவில் தோன்றும் மகான்களது வாழ்க்கைகளில் சமூகசேவையும் ஆத்மப்பயிற்சியாகிற தர்மமார்க்கங்களும் சிறந்துவிளங்கும். ஆதலால், நாம் இப்போது ஸ்ரீ ராமதீர்த்த ஸ்வாமிகளாகப் பெயர் பெறப்போகும் குழந்தையையும் இந்த நோக்கத்தைக் கொண்டே கவனிக்கவேண்டும்.

'விளையும் பயிர் முளையிலேயே தெரியும்' என்ற பழமொழிப்படி இந்தக் குழந்தை வளர்ந்தது. தர்ம மார்க்கத்தையே பின்பற்றவேண்டிய நிலைமைக்கு எப்படி எழும்ப முடியும்? புராண கதைகளையும், இராமாயண பாரத பாகவத கதைகளையும் கேட்பதில் சிரத்தை யதி

கம் ஏற்பட்டது. சிறுவயதிலேயே கேட்ட கதைகளை யெல்லாம் தன் மனதில் ஆராய்ச்சி செய்து பார்ப்பார். கதைகளில் சந்தேகங்களைக் கேட்டுக்கொண்டு தானே சமாதானம் கூறிக்கொள்வார். தனியே சென்று மன தால் தியானம் செய்து உயர்ந்த தத்துவம் விளங்கும் கதைகளைப்பற்றிச் சிந்தனை செய்வதும், தியானத்தின் மகிமையை அனுபவத்தில் அறிவதும், இவருக்குப் பழக்கமாயின. தியானத்திற்காகத் தனியே செல்வது இவருக்கு அதிபாலிய முதற்கொண்டே வழக்கமாம். கல்விச்சாலையிலும் இவரது அபாரமான அறிவைக் கண்டு மெச்சாதவர்களில்லை: பெரியோரைப்பற்றி எழு தும்போது மிகைபடக்கூறல் அப்பெரியாரைப் பின் பற்றுகிறவர்களுக்கு இயற்கை. ஆனால், ஸ்ரீ ராமதீர்த்த ரது புத்தியின் விசாலத்தையும், ஆத்மப்பயிற்சிக்கு அவ் திவாரமாக இருந்த அபார சக்தியையும், முழுமையும் அறிந்தாலல்லவோ ஒருவன் அதிகமாகப் புகழமுடியும். உள்ளதைக்கூடக் கிரகிக்க முடியாது. ஆதலால், மிகப் பெரியோர்களைப்பற்றிக் கூறும்போது அதிகரித்த வர் ணனைகள் இருக்க முடியாதென்று நம்பலாம். கல்விச் சாலையில் உயர்வகுப்புக்குப் போகப்போக இவரது தீட் சண்ய புத்தியும் உயர்ந்துகொண்டே போய்க்கொண் டிருந்தது. உயர்ந்த சந்யாசிக்கு வேண்டிய கடினமான தியாகத் தன்மையை இவர் மாணக்கரா யிருக்கும் போதே அப்பியசிக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டி ருந்தது. மிகுந்த வறுமையினால் இவர் கஷ்டப்பட நேர்ந் தது. சில நாட்கள் வரையில் ஆகாரமே யில்லாமல் வசி க்க வேண்டிய நிர்ப்பந்தம்கூட வந்ததாகச் சொல்லப் படுகிறது. அற்பமான ஆகாரத்தை யுட்கொண்டு தன்

ளிரவுவரையில் வாசித்துவருவார். இவருக்குக் கணித சாஸ்திரத்தில் மிக்க பிரியம். அரிய கணக்குகள் ஏதேனும் கிடைத்துவிட்டால் அதைப்பற்றி யாராய்ச்சி செய்வதில் மிக்க பிரியங்கொள்வார். அப்போது இரவு போவது தெரியாமல் வேலைசெய்து கொண்டே போகும்போது பொழுதுவிடிந்துவிடும். 'வறுமையினாலும் கடினவேலைகளாலும் இவர் வாட்டமடைந்து படிப்பை நழுவவிடுவரோ' என்று சிலர் சந்தேகப்பட்டாலும், அந்த வறுமையும் வேலையும் இவரிடம் வந்து பரிசுத்த மடைந்தன. கஷ்டமான பழக்கங்களினால் மனதில் வருத்தத்தைப் புகவிடமாட்டார். தேகம் கஷ்டங்களுக் காளாவதனால் மனோபலம் பெருகவேண்டும். இப்படியே தனக்குக் கடவுளால் கொடுக்கப்படும் சந்தர்ப்பங்களைக் கொண்டு பரிசுத்த குணத்தையும் ஆத்ம சக்தியையும் விர்த்தி செய்துவந்தார். தன்மதிப்பு என்பது ஒன்றே மதிக்கத்தக்க ஆபரணம் என்று அறிந்து சந்தர்ப்பங்களின் கடினதசைகளால் கலங்காத நெஞ்சம் வளர்த்துவந்தார். ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் ஒவ்வொரு நோக்கம் பிரதானமாக ஓங்கி நிற்கும். மனதினிடம் தன்னயம் பெருகும் எண்ணங்கள் குடிபுகுவதால், நோக்கத்தைக் கைவிட்டுச் சாமான்ய ஜனங்கள் இகசாதகங்களைத் தேடுவதிலேயே வாழ்க்கைகளை வீணாக்குகிறார்கள். பெரியோரென மதிக்கத்தக்கவரிடம் எந்தக் கடினமான துன்பங்கள் நேர்ந்தபோதிலும் அவர் மனதிற் கொண்ட சிறந்த நோக்கம் நழுவாது. சிறந்த நோக்கத்தைப் பூர்த்தி செய்யும் காரியமே பெரியோர்களிடம் காணப்படும். மறந்தும் சிறந்த வேலைகளைக் கைவிடமாட்டார்கள். ஆதலால், ஸ்ரீ ராமதீர்த்தருக்கு வாலிப பருவத்தில்

சேர்ந்த வறுமைப் பிணியும் கடின உழைப்பும் அவரைச் சாமான்ய மனிதருடைய நிலைக்கு இழுத்து விடவில்லை. ஆனால், மனோபலமே திடப்பட்டு வந்தது. கல்வியும் நாளுக்குநாள் விர்த்தியாகிக்கொண்டே வந்தது. கலாசாலைப் பரீட்சைகளில் மிகுந்த உன்னத ஸ்தானத்திலேயே தேர்ச்சி பெற்றுவந்தார். கணித சாஸ்திரத்தில் அபரிமிதமான பிரீதியும் திறமையும் இவரிடம் காணப்பட்டன. இதே சாஸ்திரத்தையே சிறந்த பாடமாகத் தேர்ந்து எடுத்துக்கொண்டு பி. ஏ. பரீட்சையில் இவர் சென்ற வருஷத்தில் இவரே முதல் மாணாக்கராகத் தேர்ந்தாராம். பிறகு எம். ஏ. பரீட்சைக்குச் சென்றபோது முதல் மாணாக்கராகத் தேர்ந்தார் என்று கூறுவது மாத்திரம் போதாது. மிகவும் அதிகமாக உயர்ந்த எண்கள் வாங்கித் தேறியதும் இவர்தான். கலாசாலைப் போதகர்களுக்கெல்லாம் இவரிடம் அளவுகடந்த பிரீதியுண்டு என்பது நாம் கூறவேண்டியதில்லையல்லவா? லாகூர் கிறிஸ்தவ கலாசாலையில் கணிதபோதகராக இரண்டு வருஷகாலம் வேலைபார்த்தார். கணித சாஸ்திரத்தில் இருந்த அளவற்ற பிரீதியினாலேயே இவர் வேலைபார்த்தார் போலும்! கவர்ன்மெண்டு கல்லூரித் தலைவராக இருந்த மிஸ்டர் பெல் என்ற ஐரோப்பியர் இவருடைய சக்தியைக் கண்டு அளவிலா மகிழ்ச்சிகொண்டு, இவரை மாகாண ஸிவில் சர்விஸ் போட்டிப் பரீட்சைக்கு ஆஜராகும்படி வேண்டினார். அக்காலத்தில் மாகாண இலாகாவில் வேலை பார்க்கும் பெருமையே இந்தியர்களால் மிக உயர்வாக மதிக்கப்பட்டுவந்தது. இந்தியாவில் காலசக்ரம் வெகு வேகமாக உருண்டுகொண்டே செல்கின்றது. இப்போது இந்தியா முழுமைக்குமென் றேற்பட்டிருக்கும் சிவில் சர்விஸ்

கூட சாமான்யமாக மதிக்கப்படுகிறது. அக்காலத்தில் அளவற்ற மகிழ்ச்சியைத் தருவது மாகாண சிவில் உத்தியோகம். ஐரோப்பிய நாகரிகத்தில் தோன்றிய ஒருவருக்கு மிகப்பெரிய மதிப்பெனத் தோன்றிய ஒரு உத்தியோகம் ஆத்மப்பயிற்சியில் தேர்ச்சி பெற்ற இந்தியருக்கு அற்பமாகவே தோன்றிவிட்டது. உத்தியோகப்பற்றும் சாதாரண உலகப்பற்றும் ஸ்ரீ இராமதீர்த்தரிடம் நெருங்க மறுத்துவிட்டன. ஸ்ரீ இராமதீர்த்தருடைய ஆத்ம சந்நிதானத்தில் அவைகள் நீறுக்கப்பட்டுவிடும். கணித சாஸ்திரத்தில் அளவற்ற பிரீதி ஏற்பட்டு மிகுந்த கஷ்டப்பட்டுச் சேகரித்த அறிவைப் பிறருக்கும் போதிக்க வேண்டுமென்றிருந்த அளவில்லா அவாவினால் மாத்திரம் போதகாசிரியராக இருக்கச் சம்மதித்தார். அந்த சாஸ்திர சம்பந்தமாக கேம்பிரிட்ஜில் கொடுபடும் பட்டத்திற்கு ஆசைப்பட்டு, அப்போது அவருக்குக் கிடைக்கக் கூடியதாக இருந்த இராஜாங்க உதவியைப் பெற்று இவர் இங்கிலாந்து செல்ல விரும்பியதுண்டு. ஆனால், இவர் பிராமணர் குலத்தில் பிறந்த காரணத்தாலோ மற்று எக்காரணத்தாலோ இவருக்குத் தடை யேற்பட்டது. இவர் இங்கிலாந்துக்குச் செல்லவில்லை. இவருக்குக் கிடைக்கவேண்டிய உதவியைக்கொண்டு ஒரு முகமதியர் சென்று விட்டார்.

இதுவரையில் கணித சாஸ்திரத்தைப் பற்றிய அறிவு இவரிடம் இருந்ததை மாத்திரம் கூறினோம். தத்துவ ஆராய்ச்சியினால் ஆத்மத் தெளிவு சேர்ந்த தன்மையைப்பற்றிக் கூறவேண்டியது அவசியமல்லவா? இவருடைய வாழ்க்கையே ஆத்ம ஞானத்தில் அழுந்திய

தல்லவா? கணிதசாஸ்திரப் பழக்கமும் இவரது ஆத்ம ஞானத்தைத் திடப்படுத்த உதவி செய்தது. இவரது உபந்நியாசங்களில் இருக்கும் தெளிவும் கேட்பவர் மன தில் ஏற்படும் திடமும் இவரது கணிதசாஸ்திரப் பழக் கத்தால் ஏற்பட்டவைகளே. ஹிருதயத்தைக் கைப் பற்றிய பிறகுதான் அறிவைப் புகட்ட முடியும் என்ற சிறந்த ரகஸ்யத்தை யறிந்தவராய்க் கணக்காக வசீகரம் செய்யத்தக்க வார்த்தைகளைப் பிரயோகம் செய்திருக்கிறு ரென்று இவரது வாக்கினின்று கிளம்பிய வசனங்களை யும் கவிகளையும் பார்த்தால் விளங்கும். ஸ்ரீமான் விவே கானந்த ஸ்வாமிகள் வேதாந்த தத்துவமும் அத்வைத மும் சிறந்தது என்று உலகத்து தத்துவ சாஸ்திர நிபு ணர்கள் அங்கீகாரம் செய்யுமாறு தர்க்கத்தினுல் ஜெயம் பெறவேண்டியே வெளியே கிளம்பினுர். தத்துவ ரீதி யாக ஜெயம் பெறுவதற்குத் தகுந்த வீர மொழிகள் அம்மகான் வாக்கினின்று கிளம்பின. ஜெயமடைந்த பிறகு ஞான ஒளி என்ற பொக்கிஷத்தைப் பாமர ஜனங்களும் உணரும்படி செய்யவேண்டிய வேலைக்குத் தக்க சிறப்பு வாய்ந்தவராக ஸ்ரீ இராமதீர்த்த ஸ்வாமிகள் வெளியுலகத்திற்குக் கிளம்பிச் சென்றுர். அறிவு என்ற ஞானத்தைப் புகட்டுவதற்கு முன் ஜனங்களுடைய ஹிருதயத்தை வசப்படுத்த வேண்டியது அவசியம். இதற்குத் தர்க்க ரீதியான ஒழுங்கு என்பது அவ்வள வாகத் தேவையில்லை. ஆத்மாவின் ஆநந்த சொரூபமே விளங்கி எங்கும் பரவவேண்டும். ஆநந்தரூபமான ஆத்மாவிலேயே எப்போதும் லயித்துநின்று ஆநந்தத் தையே எங்கும் பரவுமாறு செய்து ஜகத்தினிடமே அன்பு செலுத்தியவராக தேஜோமயமாக விளங்கிவர

லானுர். அந்த நிலையிலுள்ள ஒருவர் காரியங்களைச் செய்யும்போது அலட்சியமாக இருப்பதுபோல் தோன்றுமானுலும் மிகவும் ஒழுங்கான காரியங்களே நடைபெறும். அந்த நிலைக்குக் கிளம்புமுன் கல்வியில் அலட்சியமாகவே பயின்று தொட்ட சாஸ்திரங்களையெல்லாம் ஆழ்ந்து பார்த்துப் பயின்றுவந்தார். வறுமைத் துன்பங்களும் மற்ற கஷ்டங்களும் கல்விப் பழக்கத்தில் இவருக்கு இருந்த அளவற்ற ஆசையினுல் மூடப்பட்டுப் போயின. "மிகவும் கணக்காகவே காரியங்களைச் செய்யும் அஜாக்கிரதை யென்ற நிலைமை வேண்டும்" என்று இவர் கூறுவார். அப்படிப்பட்ட நிலைமையை இவர் பாலிய முதற்கொண்டே பழகிவந்தார். இவருடைய வாழ்க்கையில் ஒரு பெரிய தத்துவ உண்மையை இவர் கண்டுகொண்டு பிற்காலம் பொதுவான தத்துவமாக வெளியிட்டிருக்கிறுர். நமக்குச் சுகமென்று தோன்றும் வேலையில் அமர்ந்துகொள்ளல் என்பது பிழை; நமக்குக் கிடைத்த அல்லது ஏற்பட்ட வேலையினிடம் அன்புகொள்ளல் வேண்டும். இதுவே உண்மையானதும் ஸ்திரமானதுமான சுகத்தைத் தரக்கூடியது. இவர் ஏழ வறுமையையும் உணராமல் செய்திருப்பது இவருக்கிருந்த மேலே கூறியபடிக்குள்ள பழக்கமே. வாலிப பருவம் மாணுக்கராக இருக்கையில் ஸ்ரீ ராமதீர்த்தருக்குக் கணித சாஸ்திரத்தில் அளவற்ற பிரீதி என்றேம். அந்தப் பிரீதியினுலேயே இவர் போதகராகவு மானுரென்றேம். பிறகு சிமைக்குப் போக இடையூறு ஏற்பட்டது. அப்போது இவருக்குப் பிரீதியாக இருந்த காரியம் தடைப்பட்டது. அப்போதுதான் இவருடைய உண்மையான தத்துவப் பழக்கம் வெளிட்

பட ஆரம்பம் போலும். இவர் உற்பவித்த குலப் பெருமையும், இயற்கையில் இவரிடம் அடங்கிக் கிடந்த மகத்தான பெருமையும்சேர்ந்து ராமதீரரை விளக்கியது. தமக்குப் பிரியமுள்ள வேலையில் அமர இடையூறு ஏற்பட்ட பிறகு தத்துவநிலையை உணர ஆரம்பம் செய்தார். மகத்தான ஆத்மபலம் பொருந்திய மகாபுருஷருடைய சரித்திரங்களைக் கவனித்துப்பார்த்தால் மிகச் சிறிய தாகப் பிறர் கண்களில் படும் விஷயங்களே அம் மகான்களுடைய வாழ்க்கை முழுதும் மாற்றியிருக்கிற தென்று அறிவோம். கௌதம சாக்கியர் ஒரு மனித னுடைய துக்க நிலையைக் கண்ணால் முதல்முதல் கண்ட தும் பௌத்தராக மாறிவிட்டார். பிறகு வாழ்க்கை முழுமையும் மாறிவிட்டது. பட்டினத்துஅடிகள் கதை எல்லோரும் அறிந்ததுதான்: "காதற்ற ஊசியும் வாராது" என்று அறிந்தபிறகு பொருள்களை யெல்லாம் கொள்ளைக்கு விட்டுப் பரதேசியாகிப் பரவழியில் தம் வாழ்க்கையை நிறுத்தினார். இப்படியே ஏதோ அற்ப காரணங்களால் உள்ளே அடங்கிக் கிடந்த மகாசக்தி கிளம்பியதும் பிறகு எவராலும் அடக்கிவிட முடியாத படி வெளிக் கிளம்பி ஆத்மவெள்ளத்தைப் பொழிந்து விடும். இப்படியே ஒரு சிறிய காரணம் ஸ்ரீ ஸ்வாமி களுக்கு ஏற்பட்டதும் கணித சாஸ்திரத்தில் ஆழ்ந் திருந்த மனம் தத்துவ நிலையையே தன் ஸ்வரூபமாகக் கொண்டுவிட்டது. மாணாக்கராக இருக்கும்போதும் பிற கும் கணித சாஸ்திரத்தில் அன்பு அதிகமானாலும் தத்து வம், சரித்திரம் முதலிய இதர பாடங்களிலும் சிறந்து விளங்கினார். கணிதத்தில் எவ்வளவு சக்தியிருந்ததோ அவ்வளவு சக்தியும் மற்றப் பாடங்களிலும் இருந்தது.

இவர் தொட்ட இடங்களிலெல்லாம் இவரது ஜீவாத்மாவே பிரவேசித்து அந்தக்கரணமே அந்தந்தப் பொருளாகவும் எண்ணங்களாகவு மாறிவிடும். ஒவ்வொரு வஸ்துவும் கல்வியும் இவருடைய மனதிற்குள் புகுந்து தத்துவ மயமாக்கப்பட்டு ஸ்ரீராமரது முத்திரையுடன் புதுமாதிரியாகவே பிறருக்கு ஆநந்தத்தையும் புது அறிவையும் கொடுத்து வெளிப்படும். இவரிடம் புகுந்தபின் வெளிப்படும் கல்வி பரிசுத்தத்துடன் கூடித் தெளிவடையும், ஜனங்களுக்குப் பிடிக்காத விஷயங்களையும் அவர்கள் அன்புடன் எதிர்கொள்ளுமாறு செய்வார். சத்வ மேலீட்டினால் மாத்திரமே இப்படிச் செய்வது நடைபெறக் கூடும். இவர் கல்விகற்கும் முறையே மிகச் சிறந்தது. சரித்திர பாடத்தைப் படிக்கும்போது இவர் எவ்வாறு இருப்பார் என்பதை உதாரண மூலமாக விளக்கலாம். அசோகனது சரித்திரத்தைப் படித்தால் அக்காலத்தில் இருந்த ஜனசமூகங்களும் அவர்களுடைய பழக்க வழக்கங்களும் அசோகனது உபதேச மொழிகளில் அடங்கிய சன்மார்க்க சாரங்களும் அப்படியே இவர் மனதில் தோன்றி அந்தப் பூர்வகாலத்தை இந்தக் காலத்திற்குள் இழுத்துவிடும். தத்துவ சாஸ்திரத்திலும் இவரது மனம் முழுகிவிடும். தத்துவங்களைப்பற்றிப் படிக்கையில் ஸ்வாமிகள் தத்துவநிலையை அனுபவிக்க இறங்கிவிடுவார். இப்படியே சகல கலைகளையும் பயின்று தமது ஆத்ம சக்திப் பிரவாகத்தால் கலைகளை யெல்லாம் பரிசுத்தமாகவும் தெளிவாகவும் செய்துவிட்டார். இவர் செய்யும் உபந்நியாசங்களுக்கு இவர் கொடுக்கும் பெயரையும், உபந்நியாசங்களில் அடங்கும் வாக்கியங்களையும் கவனித்தால் ஸ்ரீ ராமதீர்த்தரது விநோதமான ஹாஸ்யத்

தன்மை விளங்கும். இவர் சிறந்த கவியாகவு மிருந்தா ரென்று கூறவேண்டியது அவசியம். உபந்நியாசங்களில் வசனங்களிலும் கவித்தன்மை விளங்கும். கவிகளுக் கென்றே வாக்கு தனியே கிளம்பும்போதும். மிகுந்த ஆநந்த ரஸமே மிகுந்த வாக்கு அன்பு நிறைந்து வெளிப்படும். சத்வகுணப் பெருமைகளையுடைய சாதுக் களுக்குப் பிராணிகளிடத்தன்பு மிகுதியுமிருக்குமென்று கேள்விப்பட்டிருக்கிறோம்.

ஸ்ரீ ராமதீர்த்தரது அன்பு விசித்திரமானது. தத்து வத்தில் சிறந்த அத்வைதத்தையே இவர் வாலிபபரு வம்முதல் பழகி யனுபவித்தாராதலால் இவரது அன்பு பிராணிகளுடன் நின்றுவிடாமல் சிருஷ்டி முழுவதிலு மே பரவிற்று. சிருஷ்டிக்கப்பட்ட சகல பொருள்க ளின் மூலமாயும் ஒரே பரமாத்மன் விளங்குகிறதாயிருக்க, பிராணிகளென்றும் மற்றப் பொருள்கள் என்றும் பிரித் துப்பார்க்கச் சம்மதிக்கமாட்டார். சிருஷ்டிக்குள் அடங் கிய எதுவும் ஆத்மாவுக்கு உதவி செய்யக் கூடியது என்று கருதி, சகலகருவிகளிடமும் அன்பைச் செலுத்து வாராம். தமது எழுதுகோலை நோக்கிப் பரிவுடன் பேசு வாராம். மனிதரிடம் பேசுவதுபோலப் பிரிய வசனங்க ளால் கருவிகளுடன் சம்பாஷிப்பாராம். இப்படிக் கருணை நிதியாகவே ஆத்ம வெள்ளத்துடன் ஒன்றெனக் கலந்த அன்பின் பிரவாகத்தையும் தம்மைச் சுற்றிலும் வீசிப் பொழிந்துகொண்டே காலந் தள்ளினர். ஆத்ம அறிவு நிரம்பித் ததும்பும் அத்வைதிகளிடம் தீரத்தன்மையும் பயங்கரமான பரிசுத்தத்தன்மையும் விளங்கும் என்றும், பக்தர்களிடம் மாத்திரம் அன்பு என்பது பிரகாசிக்கு

மென்றும் சாமான்யமாக ஜனங்களுக்குள் எண்ணமுண்டு. தத்துவ நிலையில் பூரணத்தன்மை யடையாதவரும், புத்தகக் கல்வியினால்மாத்திரம் தர்க்கத்தில் வெற்றி பெற விரும்புகிறவருமான கல்வியாளர் விஷயத்தில் மாத்திரமே இவ்வுண்மை பொருந்தும். ஆத்மஞானத்தை அனுபவிக்க விரும்பி வளர்ந்துவருகிறவரிடம் அன்பு என்ற தன்மையும் சேர்ந்தே பிரகாசிக்கும். ஜீவன் என்றும் ஜடமென்றும் பிரித்துக் காட்டாத அத்வைத தத்துவத்தை அனுபவ உண்மையாக உடையவராதலால் ஸ்ரீ ராமதீர்த்தரது அன்பு பொருள்களிடமும் சென்று பரவி.

ஜீவர்களும் பொருள்களும் ஏதோ பந்தத்திலிருப்பதாக நினைத்து விடுவித்துக்கொள்ளச் செய்யும் பிரயத்தனங்களே சக்திகளாகத் தென்படுகின்றன. சக்திதத்துவம் நானாவாகத் தோன்றிப் பொருள்களை எப்போதும் மாற்றிக்கொண்டேயிருக்கும் நிலையில் நிறுத்துவதால் பொருள்களும் சக்திகளும் என்று விவகாரம் ஏற்படுகிறது. உண்மையில் பொருள்களைப் பிரித்துச் சக்தியையாவது சக்திகளால் தாக்கப்படாத பொருள்களையாவது நாம் உணரலாமோ? கல் மண் முதலியவற்றிலும் கடினத்தன்மை, நிறம், உருவம் முதலியவை மாற்றப்படும் தன்மையானவைகளே. அவைகளும் சக்திகளே. இச் சக்தியும் பொருளும் சேர்ந்த ஜகத்தில் மாறக்கூடியதாயிராத ஆதாரப்பொருள் இருக்கவேண்டுமென்பது அப்பொருளின் சந்நிதானத்தால் மாத்திரமே இப்பிரபஞ்ச சக்திகள் இயங்கிப் பொருள்களாகத் தோற்றுவிக்கின்றன என்பதும் சிறந்த தத்துவம். அப்

பொருள்களின் சமஷ்டியே மாயை என்பது. இருக்கிற தென்றும் கூறமுடியாமல், இல்லையென்றும் கூறமுடியாமல் இருக்கும் மாயையின் மூலமாக ஒப்பற்ற ஏகத்துவநிலையை யறிந்துவிட்டவனே பரிபூரணன். அவனே குருவின் அநுக்கிரகம்பெற்ற ஆத்மஞானியாவான். ஜீவ வாழ்க்கையின் துன்பங்களைக் கண்டோ அநுபவித்தோ சகிக்கமுடியாமலிருப்பவனே தத்துவ உண்மையை அநுபவிக்கச் சக்தி பொருந்தியவன். அவனுக்குத்தான் சற்குரு உபதேசம் பலிக்கும். ஸ்ரீ ராமதீர்த்தர் 1899-ல் —அப்போது அவர்க்கு வயது 26—ஹிமயமலைக் காடுகளுக்குச் சென்றார். பிறகு ஒரு வருஷத்தில் சந்யாசியானார் என்று சரித்திரம் முடித்துவிட்டார்கள். அடிக்கடி ஹிமாலசத்துக் காடுகளுக்குச் செல்வதுண்டு. அங்கே தியானம் செய்து உபநிஷத்து உண்மைகளைப் பற்றிச் சிந்திப்பார். இப்படிச் செய்துவருங்காலங்களில் தான் இவர் பரமாசாரியனை அடைந்து ஆத்மஞானம் அடைந்திருக்கவேண்டும்.

இதுவரையில் ஸ்வாமிகளின் ஆத்மப்பயிற்சியைப் பற்றியே அதிகம் கூறினோம். இப்போது ஸ்வாமிகளின் கல்விப் பழக்கத்தில் ஏற்பட்ட கவிதாநிலைமையையும் அறிந்தால் ஒருவாறு முடிந்துபோம். கவிகளது மனமே கல்லிலும் மண்ணிலும்கூட அழகைக் கண்டு பிறர் மகிழும்படி வர்ணிக்கச் சக்திபொருந்தியதாயிருக்கும். மலையருவிகளிலும் பிரகிருதியின் அழகுகளிலும் சிறந்த பாடங்களைப் படிப்பார்கள். ஓங்கார தொனியின் சங்கீதமே இனிமையாக அவர்களுடைய காதுகளில் எப்போ

தும் கேட்டுக்கொண்டிருக்கும். ஸ்ரீ ஸ்வாமி ராமதீர்த்த ருக்கு ஹிந்துமத தத்துவத்தினிடம் மிகுந்த மதிப்பு வளர்ந்துவந்தபடியால் இவருடைய கவிகளெல்லாம் தத்துவத்தையே வளர்த்தும் போதித்தும் வந்தன. தர்க்க ரீதியான சிறப்பு அதிகம் தேவையிராது. கவிகளுக்கு வேண்டியது அன்பின் பெருக்கமும் உருக்கமும் தான். ஸ்வாமிகளின் தத்துவத்தில் தர்க்கப் பிழையைக் காண முடியாது. அத்வைத தத்துவத்தை அவலம்பித்தவர்க்குத் தர்க்கப் பிழை என்பது எக்காலத்திலும் நேராது. மேலும், எந்த விஷயத்தையும் ஆகியோடந்தமாகத் தமது மனதிற்குள் ஆராய்ந்து கேள்விகளும் ஆட்சேபனை சமாதானங்களும் செய்துகொண்டு பிறகு தீர்மானிக்கும் தன்மையினையுடைய ஸ்வாமிகளின் விஷயத்தில் தவறான முறை ஏற்படாது என்பது நிச்சயம். தத்துவ சாஸ்திரங்களில் தற்காலத்தில் ஏற்பட்டுள்ள நூதன விர்த்தியம்சங்க ளடங்கிய நூல்களையும், பூர்வ காலத்திய சாஸ்திர தத்துவங்களையும் பூர்த்தியாகப் படித்தவர் என்று கூறுவதுடன் நிறுத்திவிட்டால் முழுப் பெருமையும் விளங்காது. தத்துவ சாஸ்திரங்களின் நுட்பங்களையும், பலவித அபிப்பிராயங்கள் கொண்ட கட்சியினர்க்குமுள்ள பேதங்களின் தன்மைகளையும் ஸ்வாமிகள் தமக்கே சொந்தமாகவுள்ள நூதன ஆராய்ச்சி முறைப்படி தம் மனதிற்குள் விசாரித்தறிந்து தமது அனுபவத்தில் விவரமாக உண்மையான தத்துவத்தை அப்பியசித்துவந்தார். கல்வி கசடறக் கற்றபின் அதற்குத் தக்கவாறு நிற்கவேண்டும் என்பது பாடமாக மாத்திரமிராமல் அனுபவத்திலும் கொண்டுவந்த மகா புருஷர்களுள் ஸ்ரீ ராமதீர்த்தர் மிகச் சிறந்தவர் என்பது

அவருடன் பழகியவர்களே திறமாக அறியவல்லார். ஆனால், ஸ்வாமிகளின் அருள் நிறைந்த வசனங்களைப் படிப்பவர்களும் வார்த்தைகளுக்குப்பின் மறைந்துநிற்கும் மனிதரின் சாயலையாவது சிறிது அறியக்கூடும். மிகவும் அபூர்வமான மிக உன்னத தத்துவநிலையில் உள்ள மகா புருஷர். தமது ஆனந்த சொரூபத்தால் உலகமுழுமையும் வசமாவதற்குப் பதில் தாமே உலகத்துடன் ஒன்றாகித் தம்மையே அன்பும் ஆனந்தமும் நிறைந்தபடி எங்கும் நிறைந்தவராக ஆகிவிட்டால் நலம் என்று நினைப்பார். உலக முழுமையுமே ஒரே பரமாத்மாவின் சொரூபமென்பதை அனுபவத்தில் அறிய எங்கும் கடவுளின் தன்மை விளங்குமாறு பார்க்கச் சக்தியை உண்டாக்கிக் கொள்ளப் பழகுவார். பரிபூர்ண ஞானம் அடைவதற்காகப் பலமாக இரவும் பகலும் கஷ்டப்பட்டிருக்கிறார்.

தியான பலம் மிகவும் அதிகம். மேனாட்டுக் கடுமையான சுருசுருப்பு நிலைமையும் இவரது தியான பலத்தைக் கலைத்துவிடவில்லை. அமெரிக்காவில்கூட உபந்யாசம் செய்கையில் இடையில் 'ஓம், ஓம்' என்று ஓங்காரதொனியைக் கூறிவிடுவாராம். எப்போதும் தியான பலத்தால் கிடைக்கக் கூடியதான தெய்வத்தன்மையாகிய ஆத்ம நிலையிலேயே தங்கியிருப்பவர். ஆத்மாவே சர்வமும் என்றும், பரமாத்ம சொரூபமே மாயையினால் பிரபஞ்சமாகத் தென்படுகிறதென்றும், உண்மை தோன்றப்படும் பொருள்கள் சொப்பனம் போன்ற மித்தையென்றும் கூறும் அத்வைதமே சிறந்தது என்பது; உண்மையே அதுதான், அந்தத் தத்துவம்தான் என்று உறுதி கொண்ட பரிபூர்ண ஞானியென்று கூறலாம். ஆனால், தியான பலத்தால் பக்தர்களுக்கு அவர்களால் ஆராதிக்

கப்படும் தெய்வம் பிரத்தியட்சமாகுமென்று அத்வைதி கள்—பிரபஞ்சம் மித்தையென்று கூறுகிறவர்களும்—நம்பிக் கூறுவார்கள். அப்படிப்பட்ட பிரத்தியட்சமும் மனோபலத்தால் ஏற்பட்ட தோற்றமேயன்றிச் சத்திய மல்ல வென்பர். ஆனால், சாமான்ய மனிதனைக்காட்டி லும் அவ்விதத் தோற்றங்களைப்பார்க்கவல்லவர்கள் பரிசுத் தமானவர்களாதலால் அவர்களது நிலைமையும் விரும்பத் தக்கதுதான். ஸ்வாமி இராமதீர்த்தரது இளமைப்பருவத் தில் நேர்ந்த அதியாச்சர்யமான சம்பவத்தை அறிய வேண்டியது அவசியம். எப்போதும் தியான பலத்தால் உயிர்நிலையில் நிற்பவர் இவர். ஆதியில் இவர் சநாதனதர்ம சபைகளில் பக்தி மார்க்கத்தைப் பற்றிப் பிரசங்கங்கள் செய்வதுண்டு. ஸ்வாமிகள் பக்தியைப்பற்றிச் செய்த பிரசங்கங்களும் அத்வைதக் கருத்துக்க ளடங்கியவைக ளாகவே யிருந்திருக்க வேண்டுமென்று ஊகிக்கலாம். அக்காலங்களில் பலதடவைகள் பின்வருமாறு நேரில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைத் தரிசனம் செய்திருக்கிறார். நீலமேக வர்ணத்துடன் கூடிய ஸ்ரீ கிருஷ்ணன் பகவான் மூங் கிற் குழாயிற் செய்யப்பட்ட புள்ளாங்குழலை உதடுகளில் வைத்துக்கொண்டு (காளிங்கமென்னும்) சர்ப்பத்தின் மேல்நடனம் செய்துகொண்டிருக்கும் வண்ணமாகப் பல தடவைகளிலும் பார்த்திருக்கிறேன் என்று ஸ்வாமிகளே கூறியிருக்கின்றார்கள். இது சாமான்யமாகப் பார்த்ததல்ல வென்று கூறவேண்டும்போலும். ஏனெனில், ஸ்வாமிகள் பூரண பிரக்ஞையுடன் கண்களை விழித்துக்கொண்டிருக் கையிலேயே எதிரில் கண்டதாகக் கூறுகிறார். ஆத்மவித் தையில் சிறிதும் பழக்க மில்லாதார்க்கு இது பரிகாச மெனத்தோன்றும். வீண்பொய்க்கூற்றென்று வாய்கூசா

மற் கூறிவிடுவார். தெய்வபக்தி என்பது மூடபக்தியாக மாத்திரம் இருக்கும். பலரும் இதை ஆட்சேபிக்க பயப்படுவர். ஆனால், மனதிற்குள் உண்மையென்று திடப்படுத்திக்கொள்ளவும் மாட்டார்கள். அவர்களால் அறிய முடியாத விஷயம் ஆனதால் எப்படி திடம் செய்துகொள்ள முடியும். பக்தியின் மகிமையைச் சிறிதாவது அறிந்து அனுபவித்திருந்தால் மாத்திரமே இவர்கள் நம்பக்கூடும். ஸ்வாமி இராமதீர்த்தருடைய அத்வைததத்துவம் இதற்கு எப்படிச்சமாதானம் கூறுகிறதென்று பார்ப்போம். "மனதினது தியானப் பழக்கத்தில் இது குறிப்பிடத்தக்க ஒரு எல்லை. அது என் மனதினிடம் பதிந்து கிடந்த உயர்ந்த பாவனைகள் எல்லாம் ஒருங்கே உருக்கொண்டதாகும். அவ்வளவேயன்றி வேறொன்றுமில்லை," என்று ஸ்ரீ ராமதீர்த்தர் பிற்காலத்தில் கூறியிருக்கிறார். இதுவே தக்க சமாதானம். பக்தர்களுக்குத் தோன்றும் சொரூபங்களும் இம்மாதிரியேதான். பக்தர்களுக்குக் காரியசித்தியாவதெல்லாம் அவர்களுடைய மனோமயகோசத்திலடங்கிக் கிடக்கும் சக்தியின் பயனேயாகும்.

இப்படிப் பரம உன்னதமான ஆத்மஞானத்தையடைந்த பிறகு உலகம் உய்யுமாறு சில காரியங்கள் செய்து முடிக்கக் கிளம்பினார். பிராரத்தம் அனுபவித்துத் தீரவேண்டுமன்றோ? ஆதலால் இவரது வாலிபபருவப் பழக்கத்தையொட்டிச் சிலகாரியங்கள் சம்பவித்தன. உலகமெங்கும் நிறைக்கத்தக்க அன்பையே விர்த்திசெய்துவந்தவர், சகல சரித்திர தத்துவங்களையும் ஆராய்ந்து பார்ப்பதிலும், கனிகளாகவே அருள் நிறைந்த

அமுதவாக்குப் பொழிந்த பழக்கத்தை விர்த்திசெய்வதி லும் காலத்தைக் கழித்தவர் என்ன காரியம்செய்ய முடியும். மேலும் பாரசீகம், இங்கிலீஷ், ஹிந்தி, உருது, சமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் எல்லாம சமமாக மிருந்த உயர்ச்சிபெற்று விளங்குகிறவர் என்னதான் செய்யக்கூடும். மனிதர்களிடத்துள்ள அன்பின் பெருக் கத்தால் வெளியே கிளம்பி உலகத்தைச் சுற்றித் தமது சிரிப்புகளாலும் அன்பின் பிரவாகத்தாலும் உலகத்தி லுள்ள துக்கத்தைச் சிறதளவாவது மாறச் செய்யலாம். ஜபானியர் பலர் கூறியிருக்கின்றனர் : "எங்கள் வீடு களில் இருக்கும் அறைகளுக்குள் புகுந்தால் பலவரு ஷங்களுக்கு முன் ஸ்வாமிகள் அங்கிருந்து சிரித்தது இன்னம் காதுகளில் கேட்கின்றன" என்பார்கள். இவ ரது காஷாயந்தரித்த உடலினின்று வெளிக்கிளம்புவது மனிதர்க்கு ஜீவ வாழ்க்கையைப் பிரகாசிக்கச் செய்யும அக்னி ஜுவாலையே யென்பார்கள். அமெரிக்காவில் ஒரு கோடீஸ்வரர்—தனமிக்க கனவான்—"ஸ்வாமிகளின் புன் சிரிப்பு எவராலும் ஜெயிக்கப்படாத பலம் பொருந்தி யது" என்றார். ஈஜிப்டில்—முஸ்லிம்கள் நிறைந்த தேசத் தில்—ஜனங்கள் மனமார ஸ்வாமிகளை வரவேற்றனர். முகம்மதிய மசூதியில் பாரஸீக பாஷையில் உபந்நியாசம் செய்தார். அடுத்த நாள் முஸ்லீம் பத்திரிகைகள் இவ ரைப் புகழ்ந்து எழுத ஆரம்பித்தன. "ஒரு ஹிந்து மேதாவியான ஸ்வாமி ராமரைச் சந்திப்பதே பெரிய கௌரவமாகும்" என்று எழுதின. இவ்வாறு சென்ற விடங்களிலெல்லாம் ஜனங்களின் அன்பைக் கொள்ளை கொண்டு ஆனந்த வெள்ளத்தைப் பரப்பிக்கொண்டு

ஜபான், அமெரிக்கா முதலான தேசங்களில் யாத்திரை செய்து உலகத்தைச் சுற்றிக்கொண்டே இந்தியாவுக்குத் திரும்பினார்.

ஐரோப்பிய நாகரிகமே உலகில் மகத்தான ரஜோ குணத்தால் ஆக்கப்பட்டது. அவ்வித நாகரிகத்தில் மிகச் சுருசுருப்பான பூமி அமெரிக்காவின் கண்ணுள்ள ஐக்கிய நாடுகளேயாகும். அவ்வித சுருசுருப்பு நிறைந்த பூமியில் அவர்களுக்குச் சமமாகவோ அதிகமாகவோ சுருசுருப்புக் காண்பித்து வந்தாலும் தனது ஆத்மநிலை கலங்காதவராகவே விளங்கினார். ஆகா இவரது பெருமைகளைப்பற்றி எவ்வாறு புகழ்வதென்று தெரியவேயில்லையே: பரம்பரையில் மிக மேலான துளசிதாஸர் என்ற இராமபக்தரது குலத்தில் தோன்றி குழந்தைப் பருவ முதற்கொண்டே மகத்தான துக்க நிலையிலும் ஆநந்தத்தையே அனுபவித்து, உலகில் சிறந்த கல்விமானென வும் கியாதியடைந்து, உத்தம கவியாகவும் விளங்கி சர்வ கலாசாலையிலுள்ள பரீட்சைகளையும் முடித்துவிட்டு, பாரதமாதாவின் உண்மையான பெருமையின் உன்னதம் இவ்வளவுதான் என்று பிறதேசத்தவர் நேரில் காணுமாறு சென்று உலகத்தை யெல்லாம் மகிழச்செய்ததுடன் நிற்காமல் ஹிந்துக்கள் எதிர்பார்க்க முடியாதபடி முஸ்லிம் நாகரிகத்தால் சிறந்த ஈஜிப்து தேசத்திலும் மகத்தான பெருமை யடைந்து திரும்பிய அத்வைத ஆநந்த தேஜோமய சொரூபியாக விளங்கிய தீரரான மகா புருஷரை எப்படி வர்ணிப்போம். இப்படிப்பட்ட மகத்துவம் பொருந்திய சத்புருஷரைப் பெற்று உலகுக்

இந்த பாரதமாதாவும் பயன் பெற்றாள் என்பதில் தடையில்லை. ஸ்வாமிகள் பாரததேவிக்குச் செய்திருக்கும் பேருபகாரத்தை ஸ்வாமிகள் செய்த உபந்நியாசங்களின் மூலமாக அறியுமாறு வேண்டுகிறோம். பிறந்த தேதி முதற்கொண்டு முப்பத்துமூன்று வருஷ காலத்திற்குச் சற்றேறக்குறைய பூமியில் வசித்துத் தமது பிராரத்த கர்மாவை அனுபவிக்கும் ரூபமாக உலகிற்குப் பலன் கொடுத்தருளிய ஸ்ரீ ராமதீர்த்தர் ஆதியில் ஸ்ரீ ராமபிரான் நதியில் மறைந்ததுபோல் தமது ஆத்மாவின் கோசங்களை யெல்லாம் நீத்து, பரமாத்ம ஸ்வரூபத்தை யடைந்தார். அவரது உபதேச ரத்னங்களை ஆழ்ந்து பார்த்து ஆழப் பதிந்து கிடக்கும் சிறந்த மணிகளைத் தேர்ந்தெடுத்து ஆத்ம சுத்திக்கு உதவி செய்துகொள்வோமாக. இதற்காகவே ஸ்வாமிகள் உலகில் சஞ்சரித்ததாதலால் நாம் முடிந்தவரையில் ஸ்வாமிகளின் ஆநந்த வெள்ளத்தைப் பங்கிட்டுக்கொண்டு நமது ஹிருதய பீடத்தில் ஸ்வாமிகளை எப்போதும் அழுத்திவைப்போமாக. ஓம்! ஓம்!!

---

ஓம்:

# ஸ்ரீ ஸ்வாமி ராமதீர்த்த பரமஹம்ஸ விஜயம்

## க-வது, ஆத்மானுபவத்திற்கு மார்க்கம்.

உயர்ந்த ஆத்ம அனுபவமாகிய அத்வைத நிலையில் ஸ்வாமிகள் நின்றவர் என்பதை முன்பு விளக்கிக் காட்டிய பிறகு இந்த அத்வைத நிலையை நழுவ விடாமலே ஸ்வாமிகள் எப்படித் தேசபக்தியில் விளங்கினர் என்பதையும், தேசபக்தியும் அத்வைத நிலையும் கெடாமலே ஸ்வாமிகளுக்கு எவ்வாறு உலகப்பிராணிகளிடத்து அன்பு காப்பாற்றப்பட்டது என்பதையும் விளக்கிக் காட்டவேண்டும். அதற்காக ஸ்வாமிகள் வேதாந்த தத்துவங்களை யறிவிக்கும் விதத்தை முதலில் கூறப் புகுந்தோம். சில உபந்நியாசங்கள் அத்வைத வேதாந்த நிலையைக் காட்டி ஸ்வாமிகள் போதித்தபடி தெரிவிப்போம். முதன்முதலில் ஆத்மானுபவத்திற்கு மார்க்கம் போதிக்கப்படுகிறது.

இந்தப் பாடத்தில் அடங்கிய ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வொரு வாக்கியமும், ஆத்மாவை விளக்கும் ஒவ்

வொரு சொல்லையும் மனதால் நன்கு தியானம் செய்து பார்த்து அதன் பொருளை நன்றாகச் சிந்தித்து மனமானது ஆத்மாவிற்குள் அழுந்தி விடுமாறு—அதிலேயே லயித்துக் கலந்துவிடுமாறு செய்யவேண்டுமென எச்சரிக்கை செய்கிறார். ஓங்கார தொனியாகிய ஓம் என்பதையே தியானம் செய்யும்போது ஆரம்பம் செய்பவர்கள் தம்முடைய சக்தியை சூரியமண்டலத்தை நோக்கியபடியே செலுத்தட்டு மென்கிறார்.

உபந்நியாசம்:—வேதாந்த தியானத்தில் மனதால் கிரகிக்கவேண்டிய விஷயம், பாவிக்கப்படவேண்டிய விஷயம், நமது உண்மையான ஆத்மாவே ஜோதிகளை விளக்கும் ஜோதியென்றும், சூரியர்களுக்கெல்லாம் சூரியன் என்றும் அறியவேண்டியதுதான். இந்த நிலையில் உன்னை நிறுத்திவிடு; சரீரபாவனைக்கு மேலே, மனதே தான் என்ற பாவனைக்கும் மேலாகவே நிலைநிறுத்தி மயக்கத்தினின்றும் மாயையினின்றும் உன்னை விடுவித்துக்கொண்டு ஜோதிகளை விளக்கும் ஜோதியென்றும், சூரியர்களைப் பிரகாசிக்கச் செய்யும் சூரியன் நீயே யென்றும் அறியப் பிரயத்னம் செய்துகொள். அப்போது உலகமுழுமையும் உன்சந்நிதியில் சொப்பனம் போல் நீங்குவதைப் பார்ப்பாய்; மேகம்போல் இளகிவிடும். உன் முன்பு எல்லாம் படிந்து கிடக்கும்.

அசௌகர்யமொன்று மில்லாவிட்டால் அதிகாலையில் எழுந்திரு, சூரியன் கிளம்பிக்கொண்டிருக்கையில் வானத்தில் அரைகுறையாகக் கிளம்பியபடி யிருக்கையில் அதைப் பார்; அதைச் சுற்றித் தோன்றும் அழகிய

வட்டத்தைப் பார். தேஜோமயமாக ஜொலித்துக்கொண்டிருக்கும் அந்தத் தோற்றம் மனதை உற்சாகப்படுத்தும். சிறிதளவு எழும்பச் செய்யும். சிறிதளவு மனதைக் கிளப்பிவிட்டால், கொஞ்சம் தூக்கிவிட்டால், பிறகு உனக்கு இஷ்டமான உயரம் கிளப்புவது மிக எளிதாகிவிடும். மலையுச்சிகளிலுள்ள உன்னத ஸ்தானங்களுக்குக் கிளப்பிவிடலாம்.

இந்தியாவில் விளையாடும் பிள்ளைகளிடம் ஜில்லிக் கட்டையென்று ஒன்றுண்டு. அதன் உடல் பருத்தும் இருமுனைகளும் மெலிதாகவு மிருக்கும். இரண்டு பக்கங்களும் கூர்மையாகச் செய்யப்பட்டிருக்கும். கீழே கிடக்கும்போது இரண்டு முனைகளும் மேலே கிளம்பிய படி யிருக்கும். கிட்டியால் ஒருபக்கத்தை யடித்தோமானல் ஜில்லி ஆகாயத்தில் சிறிது கிளம்புகிறது. பிறகு அதைப் பலமாகக் கிட்டியாலடிக்கிறோம். உடனே நெடுந்தூரம் ஆகாயத்தில் பறந்து செல்கிறது. இந்த விளையாட்டில் இரண்டு வித வேலைகள் இருக்கின்றன. முதலில் ஜில்லியை எழுப்புதல்; பிறகு அதை ஆகாயத்தில் பறந்துசெல்லுமாறு செய்தல். மனமானது தெய்வானுக்கிரகம் பெறவேண்டுமானல் முதலில் சிறிது எழுப்பிப் பிறகு ஆத்மப்பயிற்சியாகிற ஆகாயத்திற்குள் நெடுந்தூரம் பறந்துபோமாறு செய்வித்தல் அவசியமானது.

உற்சாகத்தை யூட்டும் ஆகாயவெளிகள், அழகிய காட்சியைத் தரும் பூமிகள், மற்றுமுள்ள அழகிய காட்சிகள் ஆகிய இவை மனதை முதலில் எழுப்புவதற்கு நெடுந்தூரம் உதவிசெய்கின்றன. ஆரம்பத்தில்

மனதை உற்சாகப்படுத்த உதவுகிறது. மேலெழும்பச் செய்கிறது. பிறகு நமது மனதை மேன்மேலும் போகுமாறு செய்யமுடியும். மேலே மேலே, இன்னம் மேலே. இப்படியே போய்க்கொண்டு சரீர நினைப்பையே மறந்து ஆத்மாவாகவே, கடவுளாகவே, கடவுளைத்தவிர வேறொன்று மின்றியே நினைப்புண்டாகுமாறு செய்து கொள்ள முடியக்கூடும். இதற்குவேண்டிய முதல் உதவியாக, முதலில் எழுப்பிவிடுவதற்கு, ஆரம்ப உற்சாகத்திற்குச் சாதகமாக இருக்கும் காலத்தையும் இடத்தையும் உபயோகித்துக்கொள்ளலாம். விடியற்காலை நேரம், பட்சிகளின் கானங்கள், மனத்திற்கு இனிமையைத்தரும் காற்று, அதிகாலையில் கிழக்குத்திக்கில் வானத்தில் தோன்றுகிற வசிகரிக்கத்தக்க அழகிய பலவகை நிறங்கள் ஆகிய இவைகள் மனதிற்கு வேண்டிய முதல் எழுச்சியைத் தருகின்றன. பிறகு மனதை எவ்வாறு தெய்வீக உலகங்களுக்கு எழும்புமாறு செய்யமுடியும்? ஆத்மாவானது மேலே கடவுளின் பீடத்தை எப்படி எட்டிப் பிடிக்குமாறு பறக்கும்?

உதயகால சூரியனும் அஸ்தமன சூரியனும் கண்களின் பாதி மூடிய இமைகளில் படும்போது ஓம் என்ற மந்திரத்தை முணுமுணுப்பால் ஜெபிக்கிறோம். உணர்ச்சியின் மூலமாக இம்மாதிரி கானம் செய்வோம். மனிதர்களைப் பொறுத்து, ஓம் என்பதற்குப் பொருளும் வித்தியாசப்படுகிறது. அவரவர்களுடைய ஆத்மபரிபாகத்திற்குத்தக்கபடி எந்தப்பொருள் பொருத்தமோ அதைக் கொடுக்கவேண்டும். சிலர் இந்த மந்திரம் சூரியர்களுக்கெல்லாம் சூரியன் என்று பாவித்து உதயகால சூரிய

மண்டலத்தைப் பார்க்கிறார்கள். ஸ்திரீகள் கண்ணாடி களைப் பார்ப்பதுபோல சூரியமண்டலத்தை இவர்கள் பார்க்கிறார்கள். இந்தியாவில் ஸ்திரீகள் தம் கைவிரல் களின்மேல் நிலக்கண்ணாடிகளை வைத்துக்கொள்வார்கள். தங்கத்தால் வளையமாகச் செய்யப்பட்ட பீடத்தில் நிலக் கண்ணாடிகள் பதிக்கப்பட்டிருக்கும். கண்ணாடிக்குள் பார்க்கும்போது தன் முகத்தையே வெளியில் இருப்பது போல் பார்க்கிறாள். ஆனால், அது தானே என்பது நன் றாக அறிவாள். அதேமாதிரி வேதாந்தியும் சூரியனைப் பார்க்கிறான். வெளியில் இருப்பதுபோல் பார்த்தாலும் அனுபவத்தால் உண்மையான சூரியன் தன் ஆத்மாவே என்று அனுபவிக்கிறான். வெளியிலிருக்கும் அந்த ஜடத்தன்மை பொருந்திய சூரியன் தன் உருவமே, சாயைமாத்திரமே, நிழல்தான். அதாவது, இன்னம் தெளிவாக விளக்குவோம்.

சந்திரனுக்கும் சூரியனுக்கும் எவ்வித சம்பந்தமோ அவ்வித சம்பந்தம் தான் வேதாந்தி சூரியனுக்கும் தனக் கும் இருப்பதாக அறிகிறான். சந்திரன் தானே பிரகாசிப் பதுபோலத் தோன்றினாலும் உண்மையில் சாஸ்திர ஆராய்ச்சியின்படி பார்ப்போமானால் சந்திரனுடைய ஒளிமுழுதும் சூரியனிடமிருந்து வாங்கப்பட்டதாகும். அதே மாதிரியே வேதாந்தியும் அறிகிறான். சூரியன் தானே பிரபலமாக ஒளிவீசிப் பிரகாசிப்பதுபோலத் தோன்றினாலும் உண்மையில் அந்த ஒளியெல்லாம் என் ஆத்மாவிடமிருந்து கிரகித்ததேயாகும். அதன் கம் பீரத்தன்மையும் புகழும் எனக்கே உரியன. பூமி சுற்றிக் கொண்டிருக்கையில் சூரியன் சுற்றுகிறதுபோலத்

தோன்றுகிறது. வானசாஸ்திரம் படித்த பிறகு பூமியே சூரியனைச் சுற்றுகிறதென்று தெரிந்துகொள்கிறோம். அப்போது நம்மை ஏமாற்ற முடியாது. உண்மையில் சூரியன் சுற்றுகிறதில்லையென்றும் பூமியின் சுழற்சியைச் சூரியனிடம் ஏற்றுகிறோம் என்றும் நிச்சயமா யறிகிறோம். அதே மாதிரி வேதாந்தியும் உதயசூரிய மண்டலத்தைப் பார்க்கும்போது, கம்பீரத்தன்மையும் பெருமையும் சக்தியும் அந்த மகத்தான சூரியனிடம் இருப்பதாகத் தோன்றினாலும், சூரியனுக்கே அவை சொந்தம் என்று கூறுவது தவறு என்று உணர்கிறான். உண்மையில் அவை எனக்குச் சொந்தமானவை; என்னுடைய குணங்களே; என்னுடையவை என்பதற்குச் சந்தேகமே யில்லை; நிச்சயம், நிச்சயம், முக்காலும் நிச்சயம்.

ஜடத்தன்மை பொருந்திய சிருஷ்டியில், இவ்வுலகத்தில் ஒளியைக் குறிப்பது சூரியன். அதாவது அறிவு, ஞானம். சக்தியைக் காண்பித்துக்கொண்டு சக்திக்கு அடையாளமாக நிற்பது சூரியன். கிரகங்களை யெல்லாம் சுற்றச்செய்கிறது. [சூரியனை மையமாக நிறுத்திக்கொண்டு மற்ற கிரகங்கள் சுற்றியோடிக்கொண்டிருக்கின்றன என்பது உண்மை.] இருப்பிற்கே அடையாளம் அது; ஜீவனே யது; எல்லா ஜீவனும் சூரியனாலேயே நிலைமையைப் பெறுகின்றன. அழகுக்கு அடையாளமாகவும் சூரியன் நிற்கிறது. பூமியையும் மற்ற ஒவ்வொன்றையும் தன்னிடம் வசீகரம் செய்யவில்லையா? எவ்வளவு பளபளப்புடன் விளங்குகிறது. ஆகவே அறிவு, ஒளி, வாழ்க்கை, சக்தி, இருப்பு, அழகு, வசீகரிக்கும் தன்மை ஆகிய இவற்றிற்கு அடையாளமாக

உதய சூரியன். இவ்வளவு குணங்களும் தன்னிடமிருப்பதாகவே, தனக்கே உரியனவாக வேதாந்தி அனுபவிக்கின்றான். வேதாந்திக்கு இவையெல்லாம் தன்னிடம் விளங்குவதாகத் தோன்றும். நானேயாகத் தெரியும். நானே அவை. என்னுடைய குணங்களல்ல; நானே அவை. இந்த குணங்கள், சக்தி, ஒளி முதலியவைகள் வெளியே உள்ளனபோல் தோன்றிவிட்டாலும் அழகிய மாதர் தம்முகம் நிலைக்கண்ணாடிக்குள் பார்க்கும்போது பிரத்தியேகமாகத் தோன்றுவதுபோலத் தான், உண்மையில், விஷயம் உள்ளபடி நானே ஒளியாகவும், ஜீவனாகவும், அறிவாகவும், சக்தியாகவும், வசீகரத் தன்மையாகவும், மற்றுமுள்ளவைகளாகவு மிருக்கிறேன்.

இவ்வித அனுபவம் அடைவதற்கு மாயையினின்றும் விலகி உண்மையான ஆத்ம நிலைக்கு வரவேண்டி ஆரம்பம் செய்கிறவனுக்கு ஓம் என்ற மந்திரத்தினால் பெரிய உதவி கிடைக்கும். ஓம் என்று உச்சரிக்கும்போது வேதாந்திக்கு இதன் பொருள் வருமாறு:—ஒளிகளுக்கெல்லாம் ஒளி (கொடுப்பவன்) நானே, நானே சூரியன், உண்மையான சூரியன் நானே. தோன்றும் சூரியன் எனது பிம்பமே. நானே சூரியன்; என் முன் எல்லாக் கிரகங்களும எல்லா உடலும் சுற்றிக்கொண்டிருக்கின்றன. எனக்காகவே கிரகங்களெல்லாம், மனித சரீரங்களுள் படவும், சகல இயக்கங்களும் செய்கின்றன. எல்லாம் என்பொருட்டே நடைபெறுகின்றன. நான் சலனமற்றவன், நித்தியன், நேற்றும் இன்றும் இனி எப்போதும் ஒரேநிலையிலிருப்பவன்; என்முன்பாக

உலகமுழுமையும் ஜகத் முழுதும் விரிவடைகின்றன. சுற்றிச்சுற்றிச் சென்றுகொண்டே அவற்றின் பாகங்களையெல்லாம் என்முன் விளக்குகின்றன. ஜகத்தினிடமுள்ளவைகளெல்லாம் எனக்கு விளங்குமாறு செய்கின்றன. பூமியும் தன்னைத்தானே சுற்றிக்கொண்டு தன் உருவ முழுவதையும் எனக்குத்தெரிவிக்கிறது. ஜகத்தில் நடப்பதெல்லாம் என் பொருட்டாகத்தான். சூரியன் ஒளி வீசுவதும் எனக்காகத்தான். சந்திரனும் என் முன்பு எனக்காகவே பிரகாசிக்கிறான். எனது ஆக்ஞையை ஏற்றுக்கொண்டு, நான் இருப்பது காரணமாகவே இந்த உலகில் உள்ள இயக்கங்களெல்லாம் நடைபெறுகின்றன. சூரியன் இருப்பதனாலேயே மரங்கள் வளருகின்றன. மிருகங்களின் தசைகளுக்குச் செயல் உண்டாகின்றது. மனிதர்கள் அறிவதற்குக் காரணமும் சூரியனது இருப்புத்தான். அதுபோல, நான் இருப்பதால்தான் எல்லாம் எழுப்பப்படுகின்றன. எனது இருப்பு—உண்மையான ஆத்மா அல்லது கடவுள் இருப்பினால்தான் இவ்வுலகில் எதுவும் நடக்கிறது. இந்தச் சரீரங்களெல்லாம், வானத்தில் சஞ்சரிக்கும் கிரகங்களும், மனித சரீரங்களும், எல்லாவித பொருள்களும்-பிராணிகளும்-அவைகளின் சக்திகளும் கடவுள்களும், ஆகிய எல்லாம் என்னிடமே (ஆத்மாவிடமே) இருப்பைப் பெறுகின்றன. அவை என்னிடம் வசிக்கின்றன. நானே சூரியர்களுக்கெல்லாம் சூரியன். ஒளிகளுக்கெல்லாம் ஒளி நானே. என்னிடமே அவை இருப்பைப் பெறுகின்றன.

சொப்பன காலத்தில் நாம் ஒரு பொருளைப் பார்ப்

பது விளக்கின் ஒளியாலல்ல; சந்திரனது நிலாவும் அங் கில்லை. சூரியனது ஒளியும் அங்கில்லை. அப்படியிருந்தும் நாம் பார்க்கிறோம். ஒளியின்றி எதையும் பார்க்கமுடி யாதென்று தெரியும். எந்த ஒளியைக்கொண்டு பார்க் கிறோம்? எனது உண்மை யாத்மாவின் ஒளிதான்; ஆத்மப் பிரகாசந்தான். அதுவே எனக்குச் சொந்தமான ஒளி. சொப்பனத்தில் எதுவும் விளங்கும்படி செய்வது எனது ஒளியேயாம். சொப்பனத்தில் ஒரு வைரத்தைப் பார்த் தாலும் அதுவும் எனது ஒளியாலன்றோ விளங்குகிறது. வைரத்திலிருந்து வெளிப்பட்டு ஜொலிக்கின்ற பிரகாச மும் எனது ஒளிக்கடலில் தோன்றுகிற ஒரு கொப்பள மாத்திரமேயாகும். சொப்பனத்தில் பார்க்கப்படும் சந்திர னும் அதன் ஒளியும் சேர்ந்து எனது பிரகாசத்திலிருந்து எழும் அலைகளேயாம். சொப்பனத்தில் சூரியனைக் கண் டாலும் அதுகூடத் தன் ஒளியுடன் சேர்ந்து என் பிர காசத்தின்மே லுண்டாகும் தடித்த அலைகளேயன்றி வேறென்ன? அதேமாதிரிதான் விழித்திருக்கும்போ தும், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகிய ஒவ் வொன்றும் எனது ஒளி யென்ற சமுத்திரத்தில் தோன் றும் அலைகளேயாம். ஜோதிகளை விளக்கும் ஜோதியே நான். உலகத்தையே பிரகாசப்படுத்தும் வெளிச்சம் நான். எனது இருப்பென்ற மகா சமுத்திரத்தில் சூரி யர்களும் நட்சத்திரங்களும் கடவுள்களும்—எல்லாம் —வட்டங்களும் சுழல்களுமேயன்றி வேறென்ன? நானே ராஜாதிராஜன். இவ்வுலகத்து அரசர்களாக நானே தோன்றுகிறேன். பல தோட்டங்களிலும் அழ கிய புஷ்பங்களாகத் தோன்றுவது நானே. அழகிய வனதேவதைகளின் வசீகரமான முகத்தில் நானே புன்

சிரிப்பாகத் தோன்றுகிறேன். யுத்த வீரர்களின் தசைகளிலும் நானே பலமாக நின்று அசையச் செய்கிறேன். சர்வமும் என்னாலேயே நடைபெறுகின்றன.

தீய எண்ணங்களும் உலகப்பற்று சம்பந்தமான ஆசைகளும் மாயாசரீரத்திற்கும் மாயையான மனதிற்கும் சொந்தம். என் சந்நிதியில் அவைகள் நிற்கப் பாத்தியமில்லை. நானே ஒப்பற்ற பொருள். சர்வப்பிரபஞ்சங்களும் எல்லாப் பூதங்களும் என்னிடம் தங்குகின்றன. ஒவ்வொரு அணுவையும் ஊடுருவி நான் வசிக்கிறேன். என்னிடம் இழிந்தவை உயர்ந்தவை என்ற பேதமில்லை. எங்கும் பரவிநிற்பவன் நான். நானே சர்வ கர்மாக்களையும் நடத்துபவன். ஏசுநாதரிடம் நான் தோன்றினேன். முகம்மது நபிக்கும் நான் விளங்கினேன். ஞானம்பெற்றவர்களெல்லோரிடம் இருப்பது நானே. மிகுந்த இழிவு நிலையிலிருப்பவரிடமிருப்பதும் நானே. எல்லாம் நானே. நானே சர்வமும், மின்னலொளியும் நானே. இடியோசையும்நானே. காற்றின்மூலமாக ஹூஸ் என்கிறேன். கடல்களில் அலையாகிறேன். மித்திரர்களும் விரோதிகளும் என்ற பேதம் என்னிடமில்லை. எங்கு மிருப்பவன் நான்தான். தோன்றி மறையக் கூடிய புகழ், செல்வமெல்லாம், அவற்றைப்பற்றிய எண்ணங்களெல்லாம் ஓடிவிடட்டும். சரீரத்தைப்பற்றியது எதுவானாலும் எனக்குச் சம்பந்தமில்லை. எல்லா சரீரங்களும் என்னுடையவைகளே.

இவ்விதமே தானம் செய்யவேண்டும்.

இருப்பது ஒன்றே; மற்றவையெல்லாம் மித்தையே. அந்த ஒரு பொருளும் நானே. சர்வஞானி, சர்வசக்திமான், எங்கும் நிறைந்தவன், எதற்கும் கட்டுப்படாதது அது. நான் சுதந்தரன். பரிசுத்தமே நான். பாபம் என்பது எனக்குச் சம்பந்தமில்லை.

## உ-வது, ஓங்கார தொனி.

ஓம் என்ற மந்திரத்தின் மகிமையைப்பற்றிப் பல புத்தகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இன்னும் எழுதப்படுகின்றன. உண்மையில் வேதங்கள் முழுமையும், வேதாந்தமெல்லாம், மற்றுமுள்ள சாஸ்திரங்களெல்லாம், ஹிந்துக்களைப்பற்றிய வரையில் இந்த ஓம் என்ற தொனியுள் அடங்கியிருக்கின்றன. இந்தியாவில் பல சமயங்கள் இருந்தபோதிலும் எல்லா சமயத்தவரும் "ஓம்" என்ற மந்திரத்தை மனப்பூர்வமாக அங்கீகாரம் செய்கின்றனர். ஹீப்ரு ஜாதியினரும் முகம்மதியரும் கிறிஸ்தவர்களும்கூட பிரார்த்தனைகள் நடத்தும்போது முடிவில் ஆமன் என்று முடிக்கின்றனர். முகம்மதியரும் ஆமன் என்று கூறாமல் ஆமீன் என்கின்றனர். உங்களுடைய (அமெரிகர்கள்) தினசரி பிரார்த்தனையில் ஆமன் என்பதற்குப் பொருள் என்ன? வார்த்தையில் எல்லாம் நிற்குமிடத்தில், பேச்சு ஓய்ந்துபோகுமிடத்தில் வருகிறது. ஆத்மாவானது தெய்வத்தன்மையில் கூடுமிடத்தில் வருகின்றது. உன் ஹிருதயத்திலிருந்து உணர்ச்சிகளையெல்லாம் பொங்கும்படி செய்கையில் சரீர முழுவதும், உன் இருப்பு முழுமையும் உருகித் தெய்வத்துடன் கலக்கப்போகும் தருவாயில் வந்துசேரும்வரையில் சொற்

கள் வந்துகொண்டிருக்கின்றன. பேச்சிற்கப்பாலுள்ள நிலைமை, சொல்லுக்கடங்காத நிலைமையை அடைந்தவுடன் அங்கே ஆமன் வருகிறது. ஆதலால், ஆமன் என்பது ஓம் என்பதைத்தவிர வேறொன்றுமில்லை. தெய்வீக பிரார்த்தனைகளிலெல்லாம் ஆமன் அல்லது ஆமீன் என்பதானது வேதாந்தத்தின் சரியான பொருளையே தருகின்றது. அதாவது, "சொற்கள் முடிவடையுமிடம்" வேதாந்தத்தின் சாரமான ஓம் என்பதையே ஏறக்குறைய உணர்த்திவிடுகிறது.

வேதாந்தம் என்பதற்கு நேர் பொருள் அறிவின் முடிவு அல்லது பூர்த்தி என்பதாகும். பேச்சுக்களெல்லாம், எண்ணங்களெல்லாம் நின்றுவிடுமிடம். ஹிந்துக்களுக்குள் வேதாந்த முழுமையும் ஓம் என்ற மந்திரத்துள் அடங்கிவிடும். வேதங்களில் இந்த வார்த்தை எந்தப்பொருளில் உபயோகிக்கப்பட்டிருக்கின்றது என்று இப்போது உங்களுக்குத் தெரிவிக்கப்படும். ஓம்= அ—உ—ம்.

தந்திர கிரந்தங்கள் ஓம் என்பதைத் தனியே அர்த்தம் செய்துகொள்கின்றன. சைவர்கள் வேறு விதமாகப் பொருள் கூறுகிறார்கள். வைஷ்ணவர்கள் தனி விதமாகக் கொள்கிறார்கள். மற்ற ஹிந்து சமயத்தவர்க்கும் தனித்தனிப் பொருள்கள் உண்டு. இப்போது கொடுக்கப்படும் பொருள் எங்கும் ஒப்புக்கொள்ளக் கூடியது' வேதாந்தத்தின் அடிப்படையான பொருளே குறிப்பிடப்படும்.

அ—உ-ம் என்ற மூன்றும் சேர்ந்து ஓம் என்றாகிறது. அ' என்ற அட்சரம் வேதாந்தசாஸ்திரப்படி ஜடசம்பந்த

மென்று கூறப்படும் பிரபஞ்சத்தைக் குறிக்கிறது! ஜட மாகத் தோன்றும் உலகம், ஜடசம்பந்தமான இந்திரியங்க ளால் அறியப்படும் உலகம் பொருளாகும். நீ விழித் துக்கொண் டிருக்கையில் தெரியக்கூடியதெல்லாம் சொப்பன அவஸ்தையில் அநுபவிப்பதெல்லாம் 'உ' என்ற அட்சரத்தால் குறிப்பிடப்படும். பார்க்கின்றவ ரும் பார்க்கப்படும் பொருள்களும் சேர்ந்து, விஷ யத்தை யறிபவன், அறியப்படும் விஷயம் ஆகிய இரண் டும் சேர்ந்து 'உ' என்ற தொனியால் குறிக்கப்படும். மனோமயகோசம், ஜீவர்களது உலகம், சுவர்க்கம், நரகம், முதலியனவும் 'உ' என்பதால் குறிக்கப்படுகின்றன. 'ம' என்பது அறியப்படாதவைகளைக் குறிக்கிறது; சுழுப்தி யவஸ்தையைக் குறிக்கும்; நல்ல தூக்கம் விழித் திருக்கையிலும் புத்திக்கு எட்டமுடியாதவைகளும் அறிவுக்கு வரக்கூடாதவைகளும் இதற்குள் அடக்க லாம்.

இவ்விதம் 'ஓம்' என்பதனுள் அடங்கிய அ-உ-ம் என்பவை மனிதனுடைய மூன்றுவித அவஸ்தைகளின் அநுபவங்களையும் அடக்கியுள்ளன; மாறிக்கொண் டிருக்கும் உலகங்கள் முழுமையும் அடங்கியுள்ளன. அ-உ-ம என்ற அட்சரங்களுள் சாதாரணமான அமாத் ரை என்ற கொள்கை அடங்கியிருக்கின்றது. அதாவது அழியமுயாத சலித்தலில்லாத வஸ்து; அல்லது மூன்றுவித மாறுதல்களுக்குள்ளும் ஊடுருவிச்செல் கின்ற வஸ்து மாத்திரமேயாகும். இப்படியாக ஓம் என் பது எல்லாம் சேர்ந்த ஒன்றையே குறிக்கின்றது.

ஐரோப்பா, அமெரிகா தேசங்களிலுள்ள தத்துவங் களெல்லாம் விழித்துக்கொண்டிருக்கும் நிலையிலுள்ள

அனுபவத்தை மாத்திரமே ஆதாரமாகக்கொண்டுள்ளனவா யிருக்கின்றன. சொப்பன அவஸ்தைகளையும் சுழுத்தியின் அனுபவத்தையும் மதிக்கவேயில்லை. அதனால் அதைப்பற்றி ஹிந்துவானவன் கூறுவது என்னவென்றால், "பூர்த்தியான விஷயங்களின்றியே ஆரம்பம் செய்கிறாய். அதனால் பிரபஞ்ச தத்துவத்தைப் பற்றி நீ கூறி முடிப்பது எவ்வாறு உண்மையாயிருக்கும்."

* * * *

உனக்கு வேண்டிய விஷயங்கள் மூன்று வகையாகும். உனது உலக அனுபவம் மூன்று வகைப்படும். இவையெல்லாம் கவனிக்கப்படவேண்டும். விழித்துக் கொண்டிருக்கையில் காணப்படும் உலகம் மற்ற இரண்டு காலங்களிலும் முழுமையும் மறைந்துபோகிறது. அப்படியிருந்தும் நீ, அதாவது, உன்னிடமுள்ள ஆத்மன் சொப்பனகாலத்தில் இருக்கின்றாய். நல்ல தூக்கமெனக் கூறப்படும் சுழுத்தி காலத்தில் நீ இறந்தா போய்விட்டாய்? புத்தியும பிரக்ஞையும் அடங்கிப்போகின்றன. அப்படியிருந்தும் உண்மையான ஆத்மன், உண்மையான நீ அப்படியே இருக்கிறாய். மாற்ற முடியாததும் சலிக்காததுமான தத்துவம் இந்த உண்மை நிலை மூன்றுவித உலகங்ளிலும் உனது ஆத்மாவாகவே வியாபித்திருக்கிறது. இதுவே ஓம் என்பது. உனது மனதையோ, புத்தியையோ, அல்லது மூளையையோ நீ என்று கருதிவிட உனக்குப் பாத்தியமில்லை. உலகம் இருக்கிறதென்று எப்படித் தெரியும்? பிரபஞ்சம் இருக்கிறதென்பதற்கு ருஜு என்ன? எப்படியெனில், நீ தொடுகிறாய், பார்க்கிறாய், கேட்கிறாய், ருஜியறிகிறாய்,

முகர்கிருய்; இவ்வளவுதான் ருஜு. மேனாட்டு தத்துவ சாஸ்திரிகளெல்லோரும் இவ்வுலகத்தைப்பற்றி வேண்டிய அளவு எழுதியிருக்கின்றனர். ருஜு என்னவெனில் இந்திரியங்களே. உலகம் இருக்கிறதென்பதற்குப் பிரத்தியட்சமாகவோ அனுமானமாகவோ உங்களுடைய இந்திரியங்களே ருஜுவாகும்.

எல்லா வகையான உணர்ச்சி, அறிவு முதலியவைகள் உண்டாவதற்குக் காரணமாக உள்ளது அனுபவமேயாகும். அனுபவமென்பது விழித்துக்கொண்டிருக்கும் நிலையில் மாத்திரம் ஏற்படுவதாகாது. விழிப்பு நிலையில் உனது இந்திரியங்கள் கனத்தவைகளாக (ஜடமாக) இருக்கின்றன. சொப்பன அவஸ்தையிலும் உனக்கு உணர்ச்சியும் அனுபவமும் ஏற்படவில்லையா? அந்தக் காலத்திற்கேற்ற இந்திரியங்கள், அறிவைக் கொடுக்கும் கருவி கிடையாதா? வெளிக்கண்களும் காதுகளும் அப்போது வேலை செய்யவில்லை. சொப்பன உலகில் அறியப்படும் பொருள்களையும் அவற்றிற்கேற்ப இந்திரிய கருவிகளையும் ஒரே காலத்தில் சிருஷ்டித்துக்கொள்கிருய். அதனால் சொப்பனத்தில் இந்திரியங்களும், இந்திரியங்களுக்கு விஷயமான பொருள்களும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்களைப்போலாகின்றன. சொப்பன காலங்களில் (விஷயத்தை) அறிபவனும் அறியப்படும் விஷயங்களும் ஏககாலத்தில் ஜனிக்கின்றன. இப்படிப்பட்ட சொப்பன அறிபவனும் சொப்பன விஷயங்களும் சேர்ந்து உ என்ற தொனியால் குறிக்கப்படும். இப்படி அறிபவனும் அறிபடுவிஷயமும் எந்த உண்மைப்பொருளின்மேல் எழும் அலைகளோ; அந்த

உண்மைப்பொருளே ஆத்மன் அல்லது ஓம். வேதாந்த சாஸ்திரப்படி உனது விழிப்பும் இவ்வாறானதே. உனது இந்திரியங்களும் (அறியப்படும்) விஷயங்களும் ஒரே சக்தியின் எதிரிடையான அம்சங்களுக்குள் பொருத்தங்களுடன் கூடியவைகளே. (அதாவது, ஒரு பொருளின் இருபக்கங்கள் போன்றவைகளே.) சொப்பனங்களில் பொருள்கள் ஏககாலத்தில் உற்பத்தியானபோதிலும், நீண்டகாலம் இருந்ததுபோல் தோன்றுகின்றன. அவ்விதமே பிரக்ஞையுடனிருக்கும் விழித்த நோத்திலும் உலகத்துப் பொருள்களும் அவற்றைப்பற்றிய சென்ற சரித்திரமும் சேர்ந்து அறிகின்றவன் கிளம்பும் போது கூடவே கிளம்புகின்றன. இந்த உலகம் சத்தியமென்றும், கனமாகவும் அழுத்தமாகவும் இருக்கிறதென்றும் நீ கூறும்போது இந்த வாக்கியமானது நீ உணரும் தன்மையினின்று இந்திரிய உணர்ச்சியினது ருஜுவின்பேரில் மாத்திரமே ஏற்பட்டதாகின்றது. சொப்பன அவஸ்தையை அனுபவிக்கும் அகம் சொப்பனப் பொருள்களைச் சத்தியமென்று கூறுவது போலவும், படுதாவில் வரையப்பட்ட மனிதன் தன் நாயை சத்தியம் (உண்மை) என்று கூறுவதுபோலவுமே போன்றது. உண்மையில் இரண்டும் அசத்தியமே.

இந்திரியங்களை உண்டாக்கியது எவை? பூதங்கள். இந்த (பஞ்ச) பூதங்களை எப்படியறிவது? இந்திரியங்களின் மூலமாகத்தான். இப்படித் தர்க்கிப்பது சுழல்வது ஆகவில்லையா? விழித்துக்கொண்டிருக்கும் நிலையைப்பற்றிய உலகத்தின் மாயையான சொரூபம் இவ்விதமே, விளங்கிவிடுகிறது. சொப்பனகாலத்திலும், நீ

சொப்பனம் காணும்வரையில் பொருள்கள் சத்தியம் தான். விழித்துக்கொண்டதும் அந்தப் பொருள்களைக் காணோம். விழித்துக்கொண்டிருக்கையில் எல்லாப் பொருள்களும் உண்மையாகத் தோன்றுகின்றன. நல்ல தூக்கத்தில் உலகம் எங்கே போய்விட்டது? எங்கும் காணோம்—போயே போயிற்று. இங்கே விழிப்பு நேரத்திலும் சொப்பன காலத்திலும் தோன்றிய சத்திய நிலையைக் காணோம். எப்போதும் விடாமல் தொடர்வது ஒன்றே அதுவே வஸ்துக்களுக்கு சத்தியப்பொருளாகும். ஜலாசயத்தில் தோன்றிச் சாயையைப்போல மற்றொருபுறத்தில் நீங்கிவிடுவது எதுவோ அது மாயையான தோற்றமாத்திரமேயாகும். உண்மை அல்லது சத்தியம் என்பதற்கு ஹெர்பர்ட் ஸ்பென்ஸரும் இதே அடையாளம் தான் வேண்டுமென்கிறார். [இவர் ஐரோப்பிய தத்துவ சாஸ்திரிகளுள் மேலான புகழ் பெற்று விளங்கியவர். விவேகானந்த ஸ்வாமிகளும் மாணக்கராக இருக்கும்போது இந்த ஸ்பென்ஸருக்குத்தான் கடிதம் எழுதி உயர்ந்த அபிப்பிராயங்கொண்ட நன்மதிப்புச் சீட்டு வாங்கினார்.]

சொப்பன உலகம் உண்மையானதல்லவென்று ஏன் கூறுகிறாய்? ஏனெனில், நீ விழித்துக்கொண்டால் அதைக் காணோம் என்ற காரணத்தால் தானே. இதே மாதிரி தான் விழித்தநிலையில் காணப்படும் உலகமும் சொப்பனகாலத்திலும் நல்ல தூக்கத்திலும் அனுபவத்தில் இல்லையல்லவா? ஏன் இதைமாத்திரம் ஒப்புக்கொள்ளவேண்டும்? ஓம் என்பதில் அடங்கிய அகாரம் நாம் விழித்துக்கொண்டிருக்கும் நிலையில் காணப்படும்

பொருளும் பொருளை யறியும் புருஷனும் சேர்ந்த குறிப்பாகிறது. உண்மையான ஆதாரமாக நிற்கும் ஆத்மாவினிடம் தோன்றுகிற தோற்றங்களேயாம் எனத் தெரிவிக்கிறது.

அமெரிகாவிலும் ஐரோப்பாவிலும் எதையும் மெஜாரிடி பார்த்துத் தீர்மானிக்கிறார்கள். மிகச் சரியே; சொப்பன அனுபவமும் சுழுத்தியனுபவமும் சேர்க்கப் படவேண்டும். விழித்த நிலையில் சொப்பன அனுபவம் பொய்யாகின்றது. அதேமாதிரி சொப்பன அனுபவமும் சுழுத்தியும் சேர்ந்து விழித்த நிலையில் அறியப் பட்ட உலகம் உண்மையல்ல என்பதற்கு ருஜுவாகும். மேலும், செடி வர்க்கங்கள் இருக்கின்றன. இடைவிடாத சுழுத்தியவஸ்தையில் இருக்கின்றன. மிருக வர்க்கங்கள் எப்போதும் சொப்பனவஸ்தையை அனுபவித்திருப்பனபோல் விளங்குகின்றன. அவைகளுக்கு இந்த உலகம் உனக்குத் தோன்றுவதுபோலத் தோன்றவில்லையே. அவைகளது அனுபவங்களை ஏன் கணக்கிடக்கூடாது? எறும்பின் திருஷ்டியில், தவளையின் பார்வைக்கு, ஆந்தை யானை முதலிய பலவற்றிற்கும் பொருள்கள் நீ பார்ப்பதனின்றும் வேறாகத் தோன்றும். ஓகோ ! மனிதனது அனுபவம் மாத்திரமே கவனிக்கப்படவேண்டும். விழித்த நிலையில் உள்ள அனுபவ உலகம் மாத்திரம் உண்மையென அங்கீகரிக்வேண்டுமென்பாய். சரி! ஆனால், பரிபூரணத்தன்மை (ஞானியாகிய தன்மை)யை அடைந்த மனிதருடைய அனுபவங்களையும் நியாயமாக ஒப்புக்கொண்டால், அதுவும் ஜடமாகத் தோன்றுகிற இவ்வுலகம், உண்மை அல்லது சத்

தியமல்லவென்று உனக்கு உறுதியாகக் கூறிவிடும். இது எப்படி முடியுமென்று கேட்பாய். சற்று யோசித்துப் பார். உங்கள் தத்துவ சாஸ்திரிகளின் அனுபவத்தையே பாருங்கள். இந்தப் பெரியோரெல்லாம் எப்போதும் மகிமை பொருந்திய நிலையிலிருப்பவர்கள். அவர்கள் கௌரவத்திற்குப் பாத்திரர்களாகும் நிலை எப்போது? அறிவானது அவர்களிடம் உற்பத்தியாகிப் பெருகும்போது, அவர்கள் உன்னத நிலையில் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட நிலையில் அவர்கள் இருக்கும்போது போய்ப் பார். அவர்களது சரீரத்திலுள்ள ஒவ்வொரு மயிர்க்காலும் உலகத்தின் பொய்த்தோற்றத்தையே பிரசங்கிக்கவில்லையா? அபேதத்தையே போதிக்கவில்லையா? அந்த நிலையில் துவைதமில்லை, பன்மையில்லை, தனி மனிதனே கிடையாது, உலகமில்லை. எல்லாத் தோற்றங்களும் சூன்யமாகிவிட்டன. யோசனையிலேயே ஆழ்ந்து நிற்கின்றார்கள். மனோபாவனையான நிலையே அது; அதுவே பூரண நிலை; அங்கிருந்து எல்லா அறிவும் தானே பொங்கிவருகின்றது. சூரியனிடமிருந்து ஒளி வீசுவதுபோலவே (சுயபிரக்ஞையின்றியே) தத்துவ சாஸ்திரியிடமிருந்து அறிவு தானே வெளிப்படுகிறது. அந்த நிலையில் நிற்பதால் அவன் பேசக்கூடவில்லை. அந்த நிலையினின்றும் அவன் கிளம்பிவந்த பிறகுதான் பேச்சு ஆரம்பிக்கின்றது. (அந்த நிலையில்) மேலான எண்ணங்களும் நூதனமாகக் காணப்படுபவைகளும் அவனிடமிருந்து உதிக்கின்றன. இப்படியே எல்லா உயர்ந்த அறிவாளிகளும் உன்னத நிலையில் நிற்கும்போது அவர்கள் அடையும் அனுபவங்களெல்லாம் உலகத்தின் அசத்திய நிலையையே ருஜுப்

படுத்தி நிற்கின்றன. மனோதத்துவ சாஸ்திரத்தில் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய ஒரு விதிப்படி, ஒரு விஷயத்தைப்பற்றி அறிவதற்கு அவ்விஷயத்தை விட்டுத் தனியே மற்றொன்று நம்மிடம் இருக்கவேண்டும் மனதினிடம் பேதநிலை யில்லாமலிருக்கும்போது விஷய பிரக்ஞைகளெல்லாம் அடங்கி நின்றுவிடுகின்றன. அப்போது அருள் அல்லது ஆவேசநிலை அடையப்படுகிறது.

டெனிஸன் என்ற கவி, தான் லார்டு டெனிஸன் என்ற எண்ணத்திற்கு மேலே யிருக்கும்போதுதான் கவியாகிறான். [நாம் காளிதாஸன் என்ற கவியை எடுத்துக்கொள்ளலாம்.] ஹியூம் என்ற தத்துவசாஸ்திரி தன் நினைவு மறந்து, தான் தனிப்பட்டவன் என்ற அறிவுக்கு மேலே யிருந்தபோதுதான் தத்துவசாஸ்திர ஹியூமானார். ஹக்ஸ்லி என்றவர் சரித்திரங்களில் நாம் படிக்கும் ஹக்ஸ்லியாக இல்லாமல் மறைந்து நின்றபோதுதான் பௌதிக சாஸ்திர உண்மைகளைக் கண்ட ஹக்ஸ்லியானார்.

ஏதேனும் மகா மகிமை பொருந்திய ஆச்சர்யமான காரியம் நம்மால் நேரும்போது அதன் கௌரவத்தை நாம் ஏற்றுக்கொள்வது மூடத்தனம். ஏனெனில், அப்படிப்பட்ட காரியம் நடைபெறும்போது (பயனாகிய) கௌரவத்தை யபேட்சிக்கின்ற அகம் (மறைந்து) நீங்கிக் கிடந்தது. அது மறைந்துவிடாவிட்டால் செய்யப்பட்ட காரியத்தின் அழகு கெட்டுப்போயிருக்கும். "நான் செய்கிறேன்" என்று அறியும் பிரக்ஞை முழுமையும்

நீங்கியே இருந்தது. கடவுளிடமிருந்தே நேரில் வந்தது தான். இவ்விதமே பெரிய எண்ணங்களை எண்ணுகின்றவர்களும் பெரிய ஆசிரியர்களும் எவரானபோதிலும் சரியே, நாம் அவர்களுடைய தீர்மானத்தை, அவர்கள் உன்னத நிலையில் இருக்கும்போது கொண்ட அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்வதானால், அவர்கள் தம் செய்கைகளாலும் தம் சரீரங்களின் ஒவ்வொரு அணுவாலும் இவ்வுலகத்து அசத்ய நிலையையே உபதேசிக்கின்றார்கள்; உபந்யசிக்கின்றார்கள். வார்த்தைகளைக் காட்டிலும் திறமாகவே செய்கைகள் பேசிவிடுகின்றன. (நமக்குத் தெரிவித்துவிடுகின்றன.) புத்தகத்தில் பெரிய வீரர்களைப் பார்க்கிறோம், பெரிய தீரர்கள். அவர்களுடைய உன்னதநிலையில் சண்டைபோடுகிறார்கள். அவர்களைச் சுற்றியெல்லாம் அடர்த்தியாகவும் வேகமாகவும் குண்டுகள் பறக்கின்றன. இதோ ஒரு குண்டு, உடனே காயம்; ரத்தம் வெளியாகிக்கொண்டேயிருக்கின்றது; சரீரங்கள் கிழிபடுகின்றன. அப்படியும் மேன்மேலும் செல்கின்றார்கள். அப்படிப்பட்ட சமயம் துன்பம் துன்பமாகவில்லை. ஏன்? அனுபவத்தில சரீரம் சரீரமல்ல; வெளியுலகமும் உலகமல்ல; இவையெல்லாம் பொய்யாகச் செய்துவிடுகிறான். நெபோலியனென்ன, வாஷிங்டனென்ன, வெல்லிங்டனென்ன, இன்னும் மற்றவரும் அவர்களுடைய செய்கைகளால், புத்தியானது குறுகிய போதனைகளைச் செய்தாலும், உண்மை ஆத்மன் அல்லது சர்வசக்தி உறுதியாக நிற்கும்போது இந்த உலகம் நாஸ்தியென்றே கூறுகிறார்கள். உண்மையான ஆத்மனே அகண்ட அறிவும் அகண்ட சக்தியும். அதுவே தனித்த உறுதியான உண்மைப்பொருள். அதன்முன் தோற்றமாத்திர

உண்மையாகிய இவ்வுலகம் மறைந்துவிடுகின்றது. வீரர்களின் புஜங்களுக்குப் பலம் தருவது எது? உறுதியான கடினமுள்ள நிலையுள்ளதாகிய சத்யப்பொருளாகிய ஆத்மாவிடம் நெருங்கி ஒன்றுவதுதான்.

ஓம் என்ற மந்திரத்தில் அகாரம் இந்த உறுதியான உண்மைப் பொருளாகிய உனது ஆத்மாவைக் குறித்து நிற்கிறது. விழிப்புடன் நிற்கும் நிலையில் காணப்படும் மாயாசம்பந்தமான இந்த ஜட உலகைத்தாங்கியும் ஆவிர்ப்பவித்தும் இருக்கிற ஆத்மனைக் குறித்து நிற்கிறது. உகாரம் மனோமயப் பிரபஞ்சத்தைக்குறித்து நிற்கிறது, கடைசி அட்சரமான மகாரம் அறியமுடியாத, மயங்கி நிற்கும் சகலத்திற்கும் ஆதாரமான பிரம்மத்தைக் குறித்து நிற்கிறது.

ஓம் என்பதை உச்சரிக்கும்போது அறிவு நிறைந்தவர்கள் தமது கவன முழுமையும் ஒருங்குசேர்த்து ஆத்மாவே உறுதியான சத்தியப்பொருள் என்றும், அதுவே மூன்று உலகங்களையும் ஆவிர்ப்பவிக்கச் செய்கிறதென்றும், மூன்று உலகங்களையும் அதுவே அழியச்செய்கிறதென்றும் அனுபவித்தறிய வேண்டியவராகின்றார். சூரியனனது விடியற்காலநேரத்தில் கிளம்பும்போது தன்னிடமுள்ள நிறங்களைக் காட்டி நடுப்பகல் நேரத்திற்குள் தன்னிடமே ஒடுக்கிக்கொள்வது போலவேயாகும். இவ்வுலகங்கள் மாறுந் தன்மையன. நீ சொப்பனம் காணும் போது ஒரு ஓநாயைக் கண்டு அது உன்னை விழுங்கிவிடுமென்று பயப்படுகிறாய். நீ பயமுறுத்தப்பட்டாய். ஆனால், நீ பார்த்தது ஓநாயல்ல, உன்னையேதான் பார்த்

துக்கொண்டாய். அப்படியே தான் விழித்த நிலையிலும்; "நீயே விரோதியும் சிநேகிதனும்" என்று வேதாந்தம் உங்களுக்குத் தெரிவிக்கிறது. ஓம் என்பதை உச்சரிக்கும் போது உங்கள் மனதை அவ்வளவு உயரத்தில் நிறுத்தி இவ்விஷயத்தை யனுபவிக்கச் செய்யவேண்டும். பொறுமைக் குணங்களும் கெட்டகுணங்களும் வேரோடுநாசம் செய்யப்படவேண்டும். மனோபலம் (அல்லது அகம் புத்தி) கூட நீங்கவேண்டும். இவ்விதம் தனிமையைக் குறிக்கும் எண்ணத்தைக் களைந்து விடுங்கள்.

சில ஜனங்கள் ஜடப்பொருள்களெல்லாம் மனதிலுதிக்கும எண்ணங்களே யென்பதை யுணராமல் எண்ணங்களை யெல்லாம் ஜடப்பொருளாகப் பிரயத்தனம் செய்கிறார்கள். அவர்கள், எண்ணங்களாலாகிய மனோமய உலகத்தைக்காட்டிலும் இந்த ஜடத்துவ நிலை சத்யமானதென நினைக்கிறார்கள். வேதாந்தத்தின்படி ஜட சம்பந்த உலகமும் மனோமய உலகமும் ஆகிய இரண்டும் அசத்யமானவைகளே. இந்த இரண்டு நிலைக்கும் மேலாக நீங்கள் கிளம்பவேண்டும். ஏனெனில், மூடிக் கொண்டிருக்கும் திரைகளுக்குப் பின்னால் உள்ள உறுதியான உண்மைப் பொருளை அனுபவிக்கும்போது மாத்திரமே ஓரிடத்திருப்பு, உண்மையான அமைதி, ஆநந்தம் என்பவைகளுண்டு. ஓம் என்பதில் அகாரம் சில சமயம் மாத்ரை அல்லது உருவம் என்று சொல்லப்படுகிறது. பல சமயங்களில் மாத்ரை அல்லது உருவமெனப்படுகிறது. மகாரமும் மாத்ரையாகும். ஆனால், ஓம் என்பது உருவத்துடன் நிற்பதில்லை. சத்யப்பொருளையே அது குறிக்கிறது. இந்த உருவங்களிலெல்லாம்

ஊடுருவிச் செல்கின்ற உண்மைப்பொருளையே குறிக்கின்றது. "எங்களுக்குக் கொள்கைகள் வேண்டாம், வாழ்க்கை வேண்டும்" என்கிறார்கள். ஓகோ! அப்படியா! வாழ்க்கையாவதென்ன? சொப்பன நிலையா? நல்ல தூக்க நிலையா, அல்லது விழித்துக்கொண்டிருக்கும் நிலையா? எது வேண்டும்? இவையெல்லாம் தோற்றங்களே! உண்மையான சத்ய வாழ்க்கை உன் ஆத்மா தான். இந்திரியங்களின் மூலமாக எப்போதும் சுகத்தையனுபவிக்க முடியாதபடி தடை செய்கின்ற கடின விதிகள் இருக்கின்றன. இந்திரியங்களுக்கு உன்னை அடிமைப்படுத்திக்கொண்டு உன்னால் சுகத்துடனிருக்க முடியுமா? முடியவே முடியாது. அடக்கமுடியாத விதிகள், கண்டிப்பான விதிகள் உங்களை இந்திரிய சுகங்கள் அனுபவிக்க முடியாமற் செய்துவிடுமாறு நிற்கின்றன.

உண்மையான வாழ்க்கையாகிய ஆத்மாவை அனுபவியுங்கள். அதுவே கெட்டியான பொருள். அனுபவித்தீர்களானால், எரியும் விளக்கில் விட்டில்கள் போலவும், சமுத்திரத்தை நோக்கி நதிகள் போவது போலவும், சிறிய உத்தியோகஸ்தர் சக்ரவர்த்திமுன் மரியாதை செய்வது போலவும், சுக அனுபவங்கள் உங்களைத் தேடிக் கொண்டுவரும். உங்கள் ஆத்மாவை நன்றாகவும் பூரணமாகவும் உணர்ந்தீர்களானால், உங்களது தெய்வீக காம்பீர்யத்தை, உண்மையான பெருமையுடன் கூடிய ஆத்மனை அனுபவித்துவிடுங்கள். இந்த ஆத்மனே ஓம் என்ற மந்திரத்தால் குறிப்பிடப்படுவது.

அ-உ-ம்-என்ற மூன்று மாத்திரைகளால் ஹிந்துக்கள் முக்கியமாக வேதங்கள் உங்களது உண்மையான நிலையை விளக்கிய விதம் தெரிவிக்கப்பட்டது. நித்யமான உண்மைப் பொருளே ஓம். ஆதலால், இந்த மந்திரத்தை உச்சரிக்கும்போது புத்தியையும் சரீரத்தையும் மறந்துவிட்டு, இவைகள் ஆத்மாவிடம் கரைந்துபோகுமாறு செய்துவிடு. அனுபவித்த அனுபவத்தின்பேரிலேயே ஒவ்வொரு மயிர்க்காம்பின்மூலமாகவும், நாடிகளின் மூலமாகவும் நிறைந்து போகட்டும். இரத்தத்தின் ஒவ்வொரு துளியும் இந்த உண்மையைக்கொண்டு நிரம்பட்டும். நீயே சூரியர்களுக்கெல்லாம் சூரியன்; ஒளிகளுக்கெல்லாம் ஒளி; பிரபுக்களுக்கு மேற்பட்ட பிரபுவும் நீயே; சத்தியமான ஆத்மாவே நீயாகிறாய். ஓம்! ஓம்!

---

## ௩-வது, பின்வரும் காரணங்களுக்காக தனியே நடந்து உலாவச்செல்.

"நீ நடக்கும்போது பேச்சுத் துணையாக ஒரு சிநேகிதனை அழைத்துச் செல்" என்று கூறுகிறார்கள். பின்வரும் காரணங்களால் இது தவறு.

முதல் காரணம்:—நாம் தனியே நடந்தால், சுவாசம் இயற்கையாக ஓடுகிறது. ஒழுங்காகவும் சுகத்திற்குவேண்டிய அளவும் சுவாசம் வேகங்கொள்ளும். இதற்காகவே காண்ட் என்ற தத்துவசாஸ்திரி தம் வாழ்நாட்களின் அந்தத்தில் சுவாசம் அமைதியாக நடைபெறவேண்டியதற்

காக எப்போதும் தனியே உலாவச்செல்வது வழக்கம். அவர் நீண்டகாலம் வாழ்ந்தார். நாம் தனியே நடக்கும் போது நாசித்துவாரங்களின் வழியே சுவாசம் விடக் கூடும். பேசிக்கொண்டிருக்கும்போது நமது வாயால் தான் சுவாசம் விடவேண்டியிருக்கும். நாசியின்வழியே சுவாசம் விடும்போது தேகத்திற்கு ஊக்கம் கொடுத்து, சுவாசாசயங்களுக்கு (நுரையீரல்களுக்கு) பலம் கொடுக்கின்றது. கடவுள் சுவாசத்திற்கென்று நாசியை சிருஷ்டித்தாரேயன்றி வாயை அதற்காக ஏற்படுத்தவில்லை. வாயால் சுவாசம் வெளியிடலாம்; ஆனால், உள்ளிழுக்கும் வாயு நாசியால்தான் கொள்ளப்படவேண்டும்.

இரண்டாவது காரணம் :—தனியே உலாவும்போது யோசனைகளைச் செய்யத் திறமான நேரம் அமைகிறது. ஆழ்ந்த எண்ணங்கள் நம்மை வந்து அணுகுகின்றன. லார்டு கிளைவ் எப்படியோ இந்த ரகஸ்யத்தில் இடறிவிழுந்தார். இந்திய ராஜ்ய நிலையில் சிக்கலான விஷயங்களைப்பற்றி யோசிக்கையில் (தனியே) உலாவிக்கொண்டே யிருப்பார். ஆதலால், புத்தியபிவிர்த்திக்கும் தனியே உலாவுதல் அளவற்ற பலன்களைக் கொடுத்துவிடும். பிறருடன் உலாவும்போது அல்லது நடக்கும்போது அவர்களது அபிப்பிராயங்களை நம்மீது பலவந்தம் செய்கிறார்கள். நம்மிடமே தாமே வரக்கூடியதாகவிருக்கும் சிறந்த ஆழ்ந்த எண்ணங்களை நாமே தடைபடுத்திக்கொள்கிறோம்.

மூன்றாவது காரணம் :—ஆத்மப்பயிற்சி மூலமாகப் பார்த்தால் தனியே உலாவும்போது பிரிவுபடுத்தும்

சக்திகள் உதறியெறியப்பட்டு மனமானது ஒரு நிலையில் கூடுகிறது. ஆத்ம சம்பந்தமுள்ளதான மனோவேகம் தன்னைத்தானனுபவிக்கின்றது. மனோமயத்தின் சுகத்தால் சரீரமே உற்சாக மூட்டப்படுகிறது.

நீ ஆநந்தரூபி என்ற எண்ணத்தை உண்டாக்கிக் கொள். ஒளிகளை விளக்கும் ஜோதி நானே. உயர்ந்த பயிற்சிகள் அடைவதற்கு இந்த எண்ணமே தடிக்க வேண்டும். நிலவில் உலாவுதல், விடியற்காலையில் உலாவி வருதல் ஆகிய இவை வர்ணிக்கமுடியாத பலன்களைத் தருகின்றன. அஸ்தமன சூரியனையும் உதயகால சூரியனையும் நோக்கிச் செல்லுங்கள்! நதிக்கரைகளின் மேலும், குளிர்ந்த மெல்லிய காற்று வீசுமிடங்களிலும் உலாவச் செல்லுங்கள்! நீங்கள் பிரகிருதியுடன் ஏகமாக, இந்த ஜகத்துடன் ஒன்றாக இருப்பதாக உணர்வீர்கள்.

---

## ச-வது, ஆநந்தமென்பது எங்கிருக்கிறது?

சைன்யங்களைக்கொண்டு இதரதேசங்களை ஜெயிப்பதற்காக ஐரோப்பியரிடம் எனக்கு மனஸ்தாபமில்லை. ஒரு தேசம் ஆத்மப்பயிற்சி யடையுங்காலத்தில் இதுவும் ஒரு காலத்திற்கு அவசியமாக வேண்டியதுதான். இந்தியாவும் அவ்வித நிலையின் மூலமாகச் செல்லவேண்டியிருந்தது. ஆனால், மிகவும் பழய தேசமாதலால் உலகத்துப் பொருள்களையெல்லாம் சீர் தூக்கிப் பார்த்து அவை பிரயோசன மற்றவையென்று கண்டுகொண்டது. தற்காலம் உலகப்பெருமையும் செல்

வமும் சேகரம் செய்வதிலேயே நோக்கம் கொண்டிருக்கிற தேசங்களும் இவ்விதமே அனுபவித்த பிறகு அறியக்கூடும். இந்தத் தேசங்களெல்லாம் ஏன் மற்றத்தேசங்களின்மேல் ஸைன்யங்களைச் செலுத்துகின்றன? எதைத் தேடிக்கொண்டு செல்கின்றன? தேடப்படும் பொருள் ஒன்றுதான்: சுகம், சந்தோஷம், ஆநந்தம். சிலர், தாம் தேடுவது சுகமல்லவென்றும், அறிவைத் தேடுவதாகவும் கூறுகின்றார்கள். உண்மைதான். மற்றும் சிலர், சுகத்தைத் தேடாமல் உழைப்பையே தேடுவதாகக் கூறுகின்றார்கள்; அதெல்லாம் நல்லதுதான். ஆனால், சாதாரண மனிதருடைய மனதையும் ஹிருதயத்தையும் சோதனை செய்யுங்கள். அவர்கள் எல்லோரும் விரும்புகிற முடிவான நோக்கம், நேராகவோ அல்லது சார்பாகவோ அவர்கள் செய்யும் பிரயத்தனங்களெல்லாம், அறிந்தோ அறியாமலோ சுகத்தை யடைவதற்குத்தான்; சுகத்தைத் தவிர வேறெதையும் நாடவேயில்லை.

ஆதலால், இன்று சுகம் வசிக்குமிடத்தைத் தேடுவோம். அரண்மனையில் சுகம் வசிக்கின்றதா? அல்லது குடிசைகளில் வசிக்கின்றதா? ஸ்திரீகளுடைய மினுக்குகளில் வசிக்கின்றதா? அல்லது பொன்னும் வெள்ளியும் வாங்கித் தரும் வஸ்துக்களில் வசிக்கின்றதா? என்று பார்ப்போம். சுகத்திற்குச் சொந்த இடம் எது? அதற்கும் சொந்தமாக ஒரு சரித்திரம் இருக்கின்றது. தற்காலம் ஜனங்கள் உலக யாத்திரை செய்கின்ற காலம். நீராவியும் மின்சார சக்தியுமாகச் சேர்ந்து காலத்தையும் தூரத்தையும் ஒழித்துவிட்டன. யாத்திரை எட்டிய வரையில் (இலகுவாகவும் சீக்கிரமாகவும்) போகக்கூடிய

காலமாயிருப்பதால் ஒவ்வொருவரும் தம் யாத்திரையைப்பற்றிய சரித்திரத்தை எழுதிவிடுகிறார்கள். (அதே மாதிரி) சுகம் என்பது யாத்திரை செய்கிறது. அந்த யாத்திரையைப்பற்றிக் கொஞ்சம் அனுபவிப்போம்.

குழந்தை மிகவும் இளம்பிராயத்திலிருக்கும் போது எதனிடம் சுகத்தைத் தேடுகிறது? அங்கேதான் முதல்முதல் சுகத்தின் இருப்பு நமக்கு விளங்குகிறது. இவ்வுலகத்திலுள்ள சுகமெல்லாம் குழந்தைக்கு அதன் தாயின் புடவையிலும் மடியிலுமே உள்ளது. இதுதான் சுகம் யாத்திரை செய்யும் ரஸ்தாவில் முதல் இடம்; ஆரம்ப நிலையாகும். தாயின் மடியும் புடவையும் என்று கூறலாம். குழந்தைக்கு இவ்வுலகில் தாயாரின் மடியைப் போல் வேறெதுவும் அவ்வளவு சுகத்தைத் தருவதில்லை, புடவையால் தன் முகத்தை மூடிக்கொண்டு சொல்கிறது:—"இதோ, இதோ, நான் எங்கே? என்னைக் கண்டு பிடி" எனகிறது. இப்படிச் சொல்லிக்கொண்டு முழுமனதுடன் மெய்ம்மறந்து சிரிக்கின்றது. குழந்தைக்குப் புஸ்தகங்களால் பலனில்லை. தனமும் அதற்கு உபயோகமில்லை. பழங்களும் பட்சணங்களுங்கூடக் குழந்தைக்கு அவ்வளவு ருசியாக இராது. ஆசை காட்டிக் கொடுக்காதவரையில் இவைகளை அபேட்சிக்கிறதில்லை. சுகமுழுமையும் குழந்தைக்கு அந்த ஒரே இடத்தில்தானிருக்கின்றது.

ஒரு வருஷம் செல்கிறது; சுகமும் தன் இருப்பிடத்தை மாற்றுகிறது. வேறொரு இடத்துக்குப் போய் விடுகிறது. இப்போது சுகம் வசிக்குமிடம் விளையாட்

டுக் கருவிகளாகும்; அழகிய விளையாட்டுக் கருவிகளும் ரோதைகளும்தான். இரண்டாவது நிலையில் குழந்தையானது தாயாரைக்காட்டிலும் தன் விளையாட்டுக்கருவிகளையே பெரும்பாலும் விரும்புகிறது. இந்த விளையாட்டுச் சாமான்களுக்காகத் தாயாருடன், அருமைத் தாயுடன் சண்டையும்போடுகிறது. மற்றும் சில வருஷங்கள் செல்லவே பொம்மைகளிலிருந்து சுகம் ஓடிவிடுகிறது. மூன்றாவது நிலையில் குழந்தை பையனாகியவுடன் சுகமானது புத்தகங்களின்மீது பாய்ந்துவிடுகிறது. முக்கியமாகக் கதைப் புத்தகங்களிலேயே வசிக்கிறது. சாதாரணமாக புத்திசாலியாக இருக்கும் குழந்தைக்கு இப்படியாகும். சிலருக்கு வேறு சிலவற்றில் இருக்கக்கூடும். ஆனால், நாம் சாதாரணமான நிலைமையைக் கவனிக்க வேண்டும். இப்போது கதைப்புத்தகங்களிலேயே பையனது அன்பும் அபிமானமும் ஆழ்ந்துவிடுகிறது. இப்போது பொம்மைகளும் ரோதைகளும வண்டியும் இன்பத்தை யுண்டாக்கவில்லை. கதைப்புத்தகங்களே சுக சாதனமாகின்றன. புத்தகங்கள் அழகாகவும் வசீகரமாகவு மிருக்கின்றன. ஆனால், சுகம் யாத்திரையிலேயே இருக்கிறது. மாணுக்கன் கலாசாலைக்குப் போகின்றான். பள்ளிக்கூடத்தைத் தாண்டிக் கலாசாலைக்குச் செல்கின்றான். அங்கே பௌதிக சாஸ்திர புத்தகங்களையும் தத்துவ சாஸ்திர புத்தகங்களையும் அன்புடன் போற்றுகின்றான். சில காலம் படிக்கிறான். பிறகு சுகமானது புத்தகங்களினின்றும் சர்வகலாசாலைப் பட்டங்களை அடைவதில் எண்ணங்கொள்வதில் வசிக்க ஆரம்பிக்கிறது. அவனுக்கு எதில் விருப்பமுண்டாகிறதோ அங்கே சுகம் வசிக்கிறதென்று சொல்லப்படுகிறது; ஆநந்தத்தின்

இருப்பிடமே அதுதான். சர்வகலாசாலையில் சிறந்த கியாதியுடன் தேர்ச்சி பெறுகிறான். நல்ல சம்பாத்திய முள்ள உத்தியோகத்தை யடைகிறான். இந்தச் சிறுவனது சுகம் தனம் சேகரிப்பதில் செல்கிறது. இப்போது இவனது ஒரே நோக்கம் தனம் சேகரிப்பதுதான்; தனவந்தனாகவேண்டுமென்ற உணர்ச்சியேதான். ஒரு பெரிய மனிதனாகவேண்டும் என்று விரும்புகிறான். சில மாதங்கள் உத்தியோக சாலையில் உழைத்துச் சிறிது பொருளும் சேகரம் செய்தவுடன், அவன் சுகமானது வேறொன்றுக்குத் தாவிவிடுகின்றது. அது என்னவென்று கூறவும் வேண்டுமோ? ஒரு ஸ்திரீதான்.

இப்போது இந்தச் சிறுவன் விரும்புவது மனைவி. மனைவிக்காகப் பொருளையும் செலவுசெய்யச் சித்தமாயிருக்கிறான். தாயாருடைய புடவையில் மறைந்த சுகமெல்லாம் போய்விட்டது; விளையாட்டுப் பொம்மைகள் இனிப்பைத் தரவேயில்லை; கதைப்புத்தகங்களெல்லாம் விட்டெறியப்படுகின்றன; தன் வாழ்க்கையின் முழு கவனத்தையும் இழுப்பதாக இருக்கின்ற ஸ்திரீயைப் பற்றி ஏதேனும் கூறுவதாக இருந்தால் மாத்திரம் புத்தகங்களைப் படிக்கின்றான். மனைவிக்காகத் தனக்குச் சொந்தமான எதையும் தியாகம் செய்கிறான். தனதுடைய சுகம் வசிக்குமிடமாகிய ஸ்திரீயின் சிறு சாயல்களுக்காக, அன்புக்காக, கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கப் பட்ட தனமெல்லாம் காற்றில் பறக்கவிடப்படுகின்றன. கொஞ்சகாலம் சிறுவன் ஸ்திரீயுடன் வசிக்கின்றான்! பிறகு அந்தோ! சுகம் இன்னமும் எப்படி யோடுகின்றது. ஆரம்பத்தில் மனைவியின் நினைப்பிலேயே அவ

னுக்கு உண்டான சந்தோஷம் இப்போது கிடைக்கவே யில்லை. இந்திய தேசத்துச் சாமான்ய சிறுவனைப்பற்றிக் கூறினால், சுகமானது இப்போது ஸ்திரீயினிடமிருந்து உற்பத்தியாகப்போகும் குழந்தையினிடம் செல்கின்றது. ஒரு குழந்தை வேண்டுமென்பதே அவனது கனவாக இருக்கின்றது. தேஜோமயமான குழந்தை வேண்டுமென்கிறான்; அதுவே கிரகத்திற்கு அழகு; வீடுநிறைந்த பண்டம் அதுதான். இத்தேசத்திய வழக்கம் இராமனுக்குத் தெரியவாது. ஆனால், இந்தியாவில் கலியாணமானபிறகு ஜனங்கள் விரும்புவது, கடவுளைப் பிரார்த்தித்துக்கேட்பது, ஒருகுழந்தை வேண்டுமென்று தான். சத் புருஷர்களுடைய ஆசீர்வாதத்தைத் தேடுகின்றார்கள். தம்மால் செய்யக்கூடியதெல்லாம் செய்து குழந்தையையடைய வழி தேடுகிறார்கள்.

குழந்தையை எதிர்பார்ப்பதிலேயே சிறுவனுடைய சுகமெல்லாம் கூடுகின்றது. எதிர்பார்க்கும் நிலைமையில் சுகம் வசிக்கின்றது. சுகம் யாத்திரைசெய்து வருகையில் குழந்தைதான் ஆறாது நிலை. ஆநந்தம செய்யும் யாத்திரையில் ஒரு இடம். கடவுளனுக்கிரகத்தால் குழந்தை பிறக்கின்றது. அப்போது அவனது ஆநந்தத்திற்கு அளவேயில்லை. உற்சாகம் நிரம்பியவனாகிக் குதிக்கிறான்; தூக்கிப்போடுகிறது; பூமியினின்றும் ஆகாயத்தில் கிளம்பியவனாகிறான்; அவன் நடப்பதில்லை; ஆகாயத்திலேயே நீந்துகிறான் என்றுதான் கூறவேண்டும். ஆத்மபூர்த்தியான சுகம் அடைந்தவனாகிறான். குழந்தையினால் இவ்வளவு சுகம் அடைகிறான். ஆறாவது நிலையில் மதிமுகத்துடன் கூடிய குழந்தையுடன்

வயது வந்த குழந்தையுடன் சுகமும் பூர்த்தியாகிவிடு கிறது. தன் குழந்தையினது முகத்தைப் பார்க்கும் போதுதான் மிகவும் ஆழ்ந்த சுகமுண்டாகிறது. சாதா ரண மனிதனுடைய சுகம் இங்கே உன்னதஸ்தானம் அடைந்துவிட்டது. பிறகு இந்தச் சிறுவனுக்கு உற் சாகம் குறைகிறது; குழந்தை வயதான பையனாகிய வுடன் தேஜஸ் போய்விடுகிறது. பிறகு சுகமானது இந்த மனிதனைப்பற்றியவரையில் ஒவ்வொரு வஸ்துவாக மாறிமாறிப் பிடித்துக்கொண்டே செல்கிறது.

இனி நாம் ஆராய்ந்து பார்ப்போம். உண்மையில் சுகம் என்பது இந்த வஸ்துக்களில் வசித்து வந்தனவா வென்று பார்ப்போம். தாயாரது புடவையிலும், பொம் மைகளிலும், புத்தகங்களிலும், தனத்திலும், ஸ்திரீயி னிடமும், குழந்தையினிடமும், இன்னம் இவ்வுலகத்தி லுள்ள எந்த வஸ்துவிலாவது இருக்கின்றதாவென்று பார்ப்போம். மேலே சொல்லப் புகுவதற்குமுன் யாத் திரைசெய்யும் சுகத்தை சூரிய கிரணத்திற்கு—சூரிய கிர ணங்கள் யாத்திரை செய்வதற்கு—ஒப்பிடுவோம். சூரிய கிரணமும் இடம் விட்டு இடம் போய்க்கொண்டிருக் கிறது. ஒரு சமயம் இந்தியாவில் பிரகாசிக்கிறது; மற் றொரு சமயம் ஐரோப்பாவில் பிரகாசிக்கின்றது. இப் படியே யாத்திரை செய்கிறது. மாலை வெயில் நீங்கும் போது எவ்வளவு வேகமாக இடத்துக்கிடம் செல்கின் றது பாருங்கள். கிழக்கு அமெரிக்காவில் பிரகாசித்து அங்கிருந்து மேற்கில் போய்க்கொண்டிருக்கிறது. சூரிய வெளிச்சம் எப்படித் தத்தித்தத்திப் போய்க்கொண் டிருக்கின்றது பாருங்கள். மேற்கே போய்க்கொண்டே

போய் ஜப்பானுக்குச் சென்று ஒளி வீசுகிறது. இடம் விட்டு இடம் யாத்திரை செய்கின்றது. இந்த இடங்களெல்லாம், சூரிய கிரணங்கள் காணப்படும் இடங்களெல்லாம், சூரியனது ஒளியை உண்டாக்குமிடங்களல்ல; சூரிய ஒளி வசிக்குமிடங்களல்ல; சூரிய ஒளி உண்டாகுமிடம் வேறு எங்கேயோ இருக்கின்றது. அது சூரியனிட முண்டாகின்றது. அதேமாதிரி, சுகம் என்பதும் பொருள்களின்மீது தாவித்தாவிச் செல்கின்றது. சூரிய ஒளிபோலவே இதுவும் இடம்விட்டு இடம் பெயருகின்றது. எங்கிருந்து உற்பத்தியாகின்றது? அதன் உற்பத்தி ஸ்தானமாகிய வீடு எங்கே இருக்கிறது? சுகம் என்ற சொரூபமாகிய சூரியனையே பார்ப்போம்.

(முன் சொல்லியபடி) குழந்தையை அடைந்த பாக்கியம் பெற்ற மனிதனை எடுத்துக்கொள்வோம். இந்தக் கனவான் உத்தியோகசாலையில் உட்கார்ந்திருக்கிறான். உத்தியோகத்திற்கு வேண்டிய வேலைகளைச் செய்கிறான். திடீரென்று மணிச்சத்தம் கேட்கிறது. எந்த மணி? டெலிபோன் மணி. குதித்துக்கொண்டு ஓடுகிறான். என்ன சமாசாரமாக இருக்கலாமென்று யோசிக்கையிலே ஹிருதயம் துடிக்கிறது. வரப் போகும் துக்கம் முன்பே சாயை வீசுமென்கிறார்களே! அவனது ஹிருதயம் துடிக்கிறது. இவ்வளவு எப்போதும் இருந்ததில்லை. டெலிபோனுக்குச் சமீபத்தில் போய் சமாசாரத்தைக் கேட்கிறான். அந்தோ! எவ்வளவு துக்கமான சமாசாரம் அது. இந்தக் கனவான் பெருமூச்சு விடுகிறார். மெய்ம்மறந்து போய்விட்டார். முகம் வெளுத்துப்போய்விட்டது. துக்காக்கிராந்தனாக இடத்

திற்கு வந்து சட்டையையும் தொப்பியையும் போட்டுக் கொண்டு ஆபீஸிலிருந்து நேரே, துப்பாக்கியிலிருந்து வெளியான குண்டுபோலப் போகின்றார். தமது எஜமானரை உத்தரவுகூடக் கேட்கவில்லை. வேலைக்காரரிடம் ஒரு வார்த்தைகூடக் கூறவில்லை. மேஜைமேல் இருந்த காகிதங்களைக்கூட உள்ளே வைத்துப் பூட்டவில்லை. மெய்ம்மறந்து ஆபீஸிலிருந்து வெளியிலே போய்விட்டார். மற்ற உத்தியோகஸ்தர்கள் ஆச்சர்ய மடைந்தனர். தெருவுக்கு வந்ததும் எதிரில் வண்டியொன்றைக் கண்டார். அங்கே ஒரு தபாற்காரன் ஒரு கடிதம் கொடுக்கிறான். இந்தக் கடிதம் சந்தோஷ சமாசாரம் தெரிவித்தது. உலகப் பற்றுடையவர்க்குச் சந்தோஷ சமாசாரம். பெரிய நிதியொன்று அவர் பாகத்திற்குக் கிடைத்தது. லாட்டரி சீட்டில் ஒரு பங்கு எடுத்திருந்தார். பத்தாயிர ரூபாய் இவருக்குக் கிடைத்தது. இந்தச் செய்தி இவருக்கு உற்சாக மூட்டியிருக்கவேண்டும். சந்தோஷத்தைக் கொடுத்திருக்கவேண்டும். ஆனால், அப்படி யொன்றையும் செய்யவில்லை. டெலிபோனில் கிடைத்த சமாசாரம் மனதில் கனமாகத் தங்கி நிற்கிறது. இந்தச் செய்திகூட உற்சாகத்தை யூட்டவில்லை. அதே வண்டியில் அவனுக்கெதிரில் பெரியபெரிய உத்தியோகம் வகிக்கும் கனவானொருவர் உட்கார்ந்திருக்கிறார். அவரது வாழ்நாளில் இந்த உத்தியோகஸ்தரைப் பேட்டிகாணப் பெரிய அவா கொண்டிருந்தவர் இவர். ஆனால் இவர் இப்போது கண்ணால்கூடப் பார்க்கவில்லை. ஒரு ஸ்திரீயின் இனிய முகம் காணப்பட்டது. இந்த ஸ்திரீயின்முன் நின்று சில வார்த்தைகளாவது பேசவேண்டுமென்பது இவரது அவாவாக இருந்தது. ஆனால், இப்

போது அம்மாதின் இனிய புன்சிரிப்புகள் இவரை இழுக்கவேயில்லை. இவரது ஆவல்தானென்ன ? கவலை யென்னவென்று கேட்பீர்கள் ? தன் வீடிருக்கும் தெரு வுக்கு வந்தார். பெருத்த சப்தமும் கூக்குரலும் கேட்டன. அளவற்ற புகை கிளம்பி மேலே சூரியனை மறைத்துக்கொண்டது. நெருப்பு ஜுவாலைகள் மேலே கிளம்புவதைக் கண்டான். தன் மனைவியும், பாட்டியும், தாயாரும், மற்ற உறவினர்களும் அழுதுகொண்டிருக்கக் கண்டான். நெருப்பு வீட்டைச் சூழ்ந்துகொண்டதற்காக வருந்தினார்கள். தன் சிநேகிதர்களை யெல்லாம் பார்த்தான். ஒரே வஸ்துவைக்காணோம். அவனது சுகத்தின் தற்கால வாசஸ்தலத்தைக் காணோம். அருமைக் குழந்தையைக் காணோம். இனிய முகத்துடன் கூடிய குழந்தையைக் காணோம். அது ! அது ! அதைக் காணோம். "குழந்தை யெங்கே" என்று கேட்டான். மனைவி பதில் சொல்லவில்லை. அவள் விம்மிவிம்மி யழுதாள் ; வாயைத் திறக்க முடியவில்லை. உண்மையை யறிந்தான். குழந்தை வீட்டிற்குள் அகப்பட்டுக்கொண்டது. நெருப்பு ஆரம்பித்தபோது தாதியிடம் குழந்தை யிருந்தது ; தொட்டியில் படுக்கவைத்திருந்தாள் ; தூங்கிற்று தாதி வெளியே வந்துவிட்டாள். வீட்டிலிருந்தவர்கள் வீடு நெருப்பினால் சூழப்படுவதைக் கண்டு பாபரப்பினால் ஓடிவிட்டார்கள். ஒவ்வொருவரும் 'குழந்தை அவரிடமிருக்கிறது ; இவரிடமிருக்கிறது' என்று நினைத்துக்கொண்டு வெளியே வந்துவிட்டனர். எல்லோரும் வந்தபிறகு பார்த்ததும் குழந்தை யிருந்த அறை நெருப்பினால் சூழப்பட்டிருப்பது தெரியவந்தது. பிறகு அழுகையும், பல்லைக் கடிப்பதும், உதடுகளைக் கடிப்பதும், மாரடிப்

பும்தான் நிரம்பின. உதவி கிடையாது. இங்கே இந்தக் கனவான் இவனது மனைவியும் தாயும் மற்றவர்களும் தாதியும்கூட ஜனங்களைப் பார்த்து உரக்கக் கதறிக்கொண்டு நிற்கிறார்கள். வழியில் நிற்கிறவர்களையும் போலீஸாரையும் குழந்தையைக் காப்பாற்றக் கூப்பிடுகிறார்கள். அன்புடன் வளர்த்துவந்த சிறிய குழந்தையைக் காப்பாற்றக் கூப்பிடுகிறார்கள். "எப்படியாவது எங்கள் சிறிய இனிய குழந்தையைக் காப்பாற்றுங்கள் ! எங்கள் சொத்து முழுமையும் கொடுத்துவிடுகிறோம். இன்றுமுதல் பத்து வருஷகாலம் வரையில் சம்பாதிக்கும் பொருள்களையும் கொடுத்துவிடுகிறோம் எல்லாம் தருகிறோம். எங்களுக்குச் சொந்தமான எதையும் கொடுக்கின்றோம். எங்களுடைய குழந்தையைக் காப்பாற்றிக் கொடுங்கள் ! குழந்தையைமாத்திரம் காப்பாற்றுங்கள்!" குழந்தைக்காக எதை வேண்டுமானாலும் கொடுக்கச் சித்தமாக இருக்கின்றார்கள். குழந்தை உண்மையில் அருமையானதுதான். அன்பு மிக்க சிறுகுழந்தை இனிமையான வஸ்துதான். நமது சொத்துக்கள் முழுமையும், எல்லாத் தனத்தையும், எல்லாப் பொறுப்புகளையும் குழந்தைக்காக விட்டுவிடலாம். ஆனால், ராமன் ஒரு விஷயம் கேட்கிறான். குழந்தையானது உண்மையில் சுகத்திற்கு மூலஸ்தானமா ? உலகத்து வஸ்துக்களுக்குள் மிகச் சிறந்த வஸ்து அதுதானோ ? உண்மைதானா ? அல்லது சுகசாதனம் வேறெங்காவது இருக்கிறதா ? சற்று நிதானமாக யோசியுங்கள். குழந்தை எல்லாவற்றையும் தியாகம் செய்யத் தயார்தான். ஆனால், குழந்தையைக்கூட வேறொன்றை இன்னம் உயர்வாகக் கருதித் தியாகம் செய்துவிடவில்லையா ? பொருள், தனம்,

சகலசொத்துக்களும் குழந்தைக்காகத் தியாகம் செய்யப் படுகிறது; உண்மைதான். ஆனால், அந்தக் குழந்தையும் மற்றொன்றிற்காகத் தியாகம் செய்யப்படுகிறது. நெருப் பில் குதிக்கத் தயாராக இருக்கும் மனிதர்களின் உயிரும் போய்விடலாம். அப்படி அருமையாகக் கருதப்படும் சிறு குழந்தைகூட வேறு ஒன்றுக்காக, வேறு ஏதோ மேலான பொருளுக்காகத் தியாகம் செய்யப்படுகிறது. அந்த வேறொன்று குழந்தையைக்காட்டிலும் இனிமை யாக இருக்கவேண்டும். அந்த வஸ்துவே உண்மையில் சுகம் என்ற ஆநந்தத்திற்கு உண்மையான இருப்பிட மாக இருக்கவேண்டும் அது என்ன? அந்த உயர்ந்த வஸ்து எது? பார்த்துக்கொள். நெருப்பில் அவர்கள் ஏன் குதிக்கவில்லை. அந்த உயர்ந்த வஸ்து ஆத்மாதான். அவர்கள் நெருப்பில் குதித்திருந்தால் அவர்கள் தங்க ளையே தியாகம் செய்துகொள்வார்கள். அவ்விதம செய்யச் சித்தமாயில்லை குழந்தைக்காக மற்றவையெல் லாம் விட்டுவிடப்படுகின்றன. அந்தக் குழந்தையும் தனக்காக, ஆத்மாவுக்காக, விடப்படுகின்றது.

ஆதலால், சுகம் யாத்திரை செய்து முடிந்த இட மாகிய குழந்தையும் தன்னிடம் சுகத்தை வைத்திருக்க வில்லையென்று அறிந்தோம். அந்தக் குழந்தையானது அழகாயிருக்கிறது; வசீகரமாயிருக்கிறது; சுகசாதனமா யிருக்கிறது; ஏனெனில் குழந்தையினிடம் ஆத்மாவி லிருந்து வெளிக்கிளம்பிய ஒளியின் சாயல், சூர்யகிரணம், போய்ச்சேர்ந்து விளங்குகின்றது. அந்த ஒளி குழந்தைக் குச் சொந்தமல்ல. அந்த ஒளியாகிய சுகம் குழந்தையி னிடமே உற்பத்தியாவதாயிருந்தால் குழந்தையினிடம்

எப்போதும் விளங்கவேண்டும். குழந்தையின் முகத்தை விளக்கிய அந்த ஒளி உள்ளே யிருக்கும் உற்பத்தி ஸ்தானத்திலிருந்து கிளம்பி யிருக்கிறது. ஆத்மாவி லேயே ஆநந்தம் உற்பத்தியாகிறது. இப்போது ஆநந்தம் ஜனிக்குமிடத்தை யடைகிறோம். உற்பத்தி ஸ்தானத்திற் குச் சமீபம் செல்கிறோம். குழந்தையின் க்ஷேமத்திற் காகக் குழந்தையை அருமையாகப் பாராட்டவில்லை. ஆத்ம சுகத்திற்காகவே குழந்தை அருமையாகியது. மனைவியின் நன்மையை நாடி மனைவி அருமையல்ல. கணவனது நன்மைக்காகவும் கணவன் அருமையல்ல. தன்னைத்தான் விரும்பியதனாலேயே கணவனும் மனைவி யும் அருமையாவது இதுதான் உண்மை. ஜனங்கள் வஸ்துக்களை விரும்புவதாகக் கூறுகிறார்கள். வஸ்துவின் பேரில் ஆசை வைக்கிறார்கள். வஸ்துவை அப்படியே விரும்புவது என்பது தவறு. இப்படி யிருக்கமுடியாது. முடியவே முடியாது. தனத்திற்காகத் தனம் அருமை யல்ல; ஆத்மாவாகிய தனக்காகவே தனம் அருமை யாகிறது. அருமையாக இருந்த மனைவி புருஷனது சௌகர்யத்தைக் கவனிக்காத காலம் வந்ததானால் அவளை நீக்கிவிடுகிறான். புருஷன் ஒருகாலத்தில் அருமையாக இருந்தாலும் பிறகு மனைவியின் சௌகர்யத்திற்கு உதவா விட்டால் அவனையும் விலக்கிவிடுகிறாள். (வெள்ளைக் காரர் நாகரிகமிது.) தனமும் காரியத்தை செய்ய உத வாதபோது நீக்கப்படுகிறது. நீரோ என்றவர், அழகிய ரோமாபுரிநகரம், அவரது தலைமை நகரம் அதிகமாக உப யோகப்படவில்லையென்று அறிந்தார். பெரிய நகரம் தீப்பிடித்தால் எப்படியிருக்குமென்று பார்ப்பது அதிக அவசியமாகப்பட்டது. உடனே என்ன செய்தார்?

பக்கத்திலுள்ள மலையுச்சிக்குச் சென்று கிரேகிதர்களைக் கொண்டு நகரமுழுதிலும் தீ வைக்கச் சொன்னார். தான் பெரிய நெருப்பைக் கண்டு ஆநந்திப்பதற்காக இப்படிச் செய்தார். ரோமபுரி எரியும்போது மலையுச்சியினின்றும் பிடில் வாசித்தார். தனமும் தனக்குத் தேவையில்லாத போது விடப்படுகிறது. இராமன் ஒரு விநோதக்காட்சியைப் பார்க்க நேர்ந்தது; விசித்திரமான காரியம் அது. கங்காநதியில் பெரிய வெள்ளம்; பெருத்த வெள்ளமாகக் கங்காநதியில் பெருகுகின்றது. நதி பெருகிக்கொண்டே போகிறது. ஒரு மரக்கிளையில் பல குரங்குகள் உட்கார்ந்திருந்தன ஒரு பெண் குரங்கும் அதன குட்டிகளும் இருந்தன. இந்தக் குட்டிகளெல்லாம் குரங்கினிடம் வந்தது. குரங்கு இருக்குமிடத்திற்குத் தண்ணீர் நெருங்கிற்று. பெண்குரங்கு உயரத்தில் உள்ள கிளைக்குத் தாவி விட்டது. தண்ணீர் அதற்குச் சமீபம வந்தது. பெண் குரங்கு உச்சிக்கிளைக்குச் சென்றது. அதுவரைக்கும் கூடத் தண்ணீர் பெருகிற்று. குட்டிகளெல்லாம் இந்தக் குரங்கின் உடலைப் பற்றிக்கொண்டிருக்கின்றன. தண்ணீர் அதன் காலடிகளில் பட்டது. உடனே ஒரு குட்டியைப் பிடித்துத் தன் காலின்கீழ்ப் போட்டுக்கொண்டது. தண்ணீர் பெருகிற்று. மறுபடியும் மற்றொரு குட்டியையும் பிடித்துக் காலின் கீழ்ப் போட்டுக்கொண்டது. மறுபடியும் தண்ணீர் பெருகியது. மூன்றாவது குட்டியையும் இரக்கமின்றிக் கீழேபோட்டு மிதித்துக்கொண்டு தன் உயிரைக்காக்கப் பிரயத்தனம் செய்தது. அப்படியே தான் எல்லாம். ஜனங்களும் பொருள்களும் நமக்கு நன்மை செய்யும் வரையில் அருமையானவர்களே. நமது காரியம் சந்தேகமாகிவிட்டால் நாம் எதையும் தியா

கம் செய்துவிடுகிறோம். ஆகவே, நாம் சுகத்தின் இருப்பிடம் உள்ளேயே தனக்குள்ளேயே எங்கேயோ இருக்க வேண்டும் என்று அறிகிறோம். தனக்குச் சமீபம் எங்கேயோ இருக்கிறது. எங்கே என்று அறிவோம். கால்கள் சரீர முழுமையும் தாங்குகின்றனவே; அவற்றில் வசிக்கின்றனவா? இல்லை, இல்லை. கால்களில் வசிக்கவில்லை. கால்களில் வசித்தால் உலகில் கால்களே சிறந்த பொருள்களாக மதிக்கப்படவேண்டும். வெளியிலுள்ள பொருள்களைக்காட்டிலும் கால்கள் சிறப்பாக மதிக்கப்பட்டாலும் கைகளைவிடச் சிறப்பாகக் கால்கள் மதிக்கப்படுவதில்லை. சுகம் வசிக்கும் வீடு கைகளோவென்றால் இல்லை. கால்களைக்காட்டிலும் கைகள் சிறப்புடையனவேயாயினும் சுகஸ்தானம் அவையல்ல. மூக்கும் கண்களும் வாசஸ்தலமென்று குறிப்பிடலாமோ? கண்கள் கைகளைக் காட்டிலும் மூக்கைக்காட்டிலும் சிறந்தவைதாம். ஆனால், சுகம் என்பது அங்கேயில்லை. கண்களைக் காட்டிலும் அருமையாக வேறொன்றை யோசித்துப் பாருங்கள். உயிர் என்று கூறுவீர்கள். சரீரமுழுமையும் சேர்த்து எடுத்துக்கொள்ளுங்கள் என்று கூறுவேன். சரீர முழுமையும் சேர்ந்துகூட சுகஸ்தானமல்ல. நாம் இந்தச் சரீர முழுமையும் செலவு செய்துகொண்டிருக்கிறோம். ஒவ்வொரு நிமிஷமும் நாம் மாறிக்கொண்டிருக்கிறோம். சரீரம் மாறியபடியே இருக்கின்றது. பல வருஷங்களில் தேகத்தில் ஒவ்வொரு அணுவும் மாற்றப்பட்டுப் புதிய சரீரமாகிவிடுகின்றது. சரீரம்தான் இந்தக் கதியென்றால், புத்தியினிடமிருக்கிறதென்போமா? மூளையிலாவது மனத்திலாவது இருக்கிறதென்று கூறுவோமா? இருக்கலாம். ஆனால், புத்தியைக்காட்டிலும்

அருமையான வஸ்து கிடையாதா என்று பார்த்துவிடுவோம். பரிசோதனை செய்வோம். புத்தியைக் காட்டிலும் இனிமையாக அருமைபொருந்தியதாக மற்றொன்று இருந்தால், அதுவே சுகத்தின் இருப்பிடமாக இருக்கலாம். உயிர் அல்லது ஹிந்துக்கள் கூறும்வண்ணம் பிராணன் சுகத்திற்கு உற்பத்திஸ்தான மென்கின்றோம். ஏனெனில், ஜனங்கள் பகுத்தறிவின்றியும் ஜீவிக்கிறதற்கு விரும்புகிறபடியாலே அவ்வாறு கூறுகிறோம் இறந்துபோகவேண்டும், அல்லது மூளை கலங்கி பைத்தியமாக இருக்கவேண்டும், என்ற நிர்ப்பந்தம் நேர்ந்தால், ஒவ்வொருவரும் பைத்தியம் பிடித்தாலும் உயிர் வேண்டுமென்பார். ஆதலால், புத்திகூட உயிர் வாழ்வதற்காக விடப்படுகிறது; இழக்கப்படுகிறது. ஆகையால், உயிர்தான், ஜீவ வாழ்க்கைதான் சுகம் வசிக்குமிடம் என்னலாம். சகல சுகங்களும் உற்பத்தியாகி வெளியே பிரகாசிக்கக் காரணமாகும் சூரியன். அப்படியா? சற்று யோசித்துப்பார். உயிர் என்பது உண்மையில் சுகஸ்தானம் தானே? கவனித்துப் பாருங்கள். உயிர் அல்லது ஜீவன் சுகஸ்தானம் அல்லவென்று வேதாந்தம் கூறுகின்றது. ஜீவன்கூட ஆநந்தம் பிறக்குமிடம் அல்ல. சுகஸ்தானம், ஆநந்தம் வசிக்குமிடம். உள்ளே யிருக்கும் சுவர்க்கலோகம் இன்னம் எட்டியுள்ளது. ஜீவனைக்காட்டிலும் அதிக தூரத்தே இருக்கின்றது. பின் எதுதான் அது?

ஒரு சிறுவன் மரணதருவாயில் இருக்கையில் ராமன் பார்க்கநேர்ந்தது. ஒரு கொடிய வியாதியால் அவன் அவஸ்தைப்படுகிறான்; சரீரத்தில் சகிக்கமுடியாத வலியுடன்

அவஸ்தைப்பட்டான். கால்களில் கட்டைவிரல்களில் வலி ஆரம்பம். முதலில் அது அவ்வளவு பெரியதா யில்லை. சற்றுநேரம் சென்றதும் மேலே வந்தது. பிறகு அவனது சரீரமே மிகுந்த வேதனைக்குள்ளாகியது. வலி மேலே மேலே சென்று வயிறுவரைக்கும் எட்டி யது. சகிக்க முடியாத ஸ்திதியில் ஹிருதய ஸ்தானம் ஏறியதும் இறந்துவிட்டான்.

இறக்கும்போது அவன் "இந்தப் பிராணன் எப்போது போகும்?" என்று கதறினான். இந்தத் தேசத்தில் நீங்கள் ஒருவன் இறக்கும்போது அவன் "ஜீவனை இழந்தான்" என்கிறீர்கள். இந்தியாவில் நாங்கள் அவன் "உடல் நீத்தான்" என்கிறோம். இது வித்தியாச பாவனையைக் காட்டிநிற்கிறது. நீங்கள் சரீரத்தையே தான் என்று பாவித்து ஜீவனை அந்நிய மாகக் கருதுகின்றீர்கள். இந்தியாவில், ஜீவனுக்கு அந் நியமாகச் சரீரம் வெளியேயிருந்து கிடைத்ததென மதிக் கப்படுகிறது. சரீரம் இறக்கும்போது மனிதன் இறப்ப தாக எவரும் நினைப்பதில்லை. சரீரம் மாறுகிறது. அவன் மாறாதவனாகிறான்.

பிராணனைக் காட்டிலும் வேறாக உயர்ந்ததாக ஏதோ ஒன்று இருக்கிறதென்று கருதுகிறோம். அது தான் 'எனது வாழ்க்கை' என்றும், 'எனது பிராணன்' என்றும் கூறுகின்றது. இந்த ஜீவ வாழ்க்கையைக் காட்டிலும், பிராணனைக் காட்டிலும் இனிமையானதாக மேலானதாக மற்றொன்று இருக்கிறது. இந்தப்பிராணன் அந்த உயர் வஸ்துவுக்கு இனிமையாக இராதபோது

பிராணனைவிடத் தயாராகிறோம். பிராணன் எப்போது நீங்குமென்று அந்தப் பையன் கூறினான். அந்த உயர்ந்த வஸ்துவிற்காகப் பிராணனையும் தியாகம் செய்கிறோம். அந்த உயர்ந்த வஸ்துவே ஆநந்தத்திற்கு ஜனன ஸ்தானம். அதுவே உண்மையாக சுகம் உற்பத்தியாகுமிடம். புத்தியைக்காட்டிலும் பிராணன் இனியது. ஏனெனில், பிராணன் உண்மையான ஆத்மனுக்குச் சமீபமாக இருப்பவன். கண்களைக்காட்டிலும் புத்தியானது ஆத்மாவுக்குச் சமீபத்தேயுள்ளது. அதனால் கண்களைவிட புத்தி இனியது. இதே காரணத்தால் கால்களைவிடக் கண்கள் இனியவை. ஒவ்வொருவனும் தன் குழந்தையை ஏன் மற்றக் குழந்தைகளைவிட இனியதாகப் பாவிக்கிறான்? வேதாந்தம் பதில் கூறுகின்றது: "உனது என்று சொல்லிக்கொள்கின்ற இந்தக் குழந்தையினிடம் நீ உன்னுடைய உண்மையான ஆத்ம சுபாவமாகிற தங்கம் வைத்து இழைத்திருக்கிறாய்." உன் கையால் ஒரு வரியாவது எழுதப்பட்ட புத்தகம், அல்லது உன் கையெழுத்துடன் கூடிய எந்தப் புத்தகமும் உனக்கு உயர்வாகவே தோன்றுகிறது. மற்றப் புத்தகங்கள் பெரிய கிரந்த கர்த்தாக்களால் எழுதப்பட்டதானாலும் அவ்வளவு உயர்வாகத் தோன்றவில்லை. ஏனப்படித் தோன்றுகிறது? 'எனது' என்று உன்னால் போற்றப்படும் புத்தகத்தில் உனது ஆத்ம ஜோதி விளங்குகிறது. உனக்குள்ளிருக்கும் சுவர்க்கலோகப் பிரகாசம் அங்கு வீசுகிறது. அதனால் உண்மையான ஆநந்தம் ஜனிக்குமிடம், சுகத்திற்கு முக்கிய ஸ்தலம் உனக்குள் இருக்கிறதென்று ஹிந்துவானவன் கூறுவான். எல்லா சுவர்க்கலோகமும் உனக்குள்ளேயே இருக்கின்றது. சந்தோஷத்

திற்கெல்லாம் பிறப்பிடம் உன்னுள்ளேயே இருக்கின்றது. அப்படியிருக்கும்போது சுகத்தைத் தேடிக் கொண்டு வெளியே செல்வது எவ்வளவு புத்தியீனமாகிறது பாருங்கள்.

இந்தியாவில் ஒரு அன்பனைப்பற்றிய கதையுண்டு: தன்னால் நேசிக்கப்பட்ட ஒரு ஸ்திரீயை நினைந்து அவன் உருகிப்போய்விட்டான். சரீரமெல்லாம் என்புமயமாகி விட்டது. தேகத்தில் சதையே கிடையாது. அந்தத் தேசத்து அரசன் இவனை ஒருநாள் அரண்மனைக்கு அழைத்துவந்து இவனால் விரும்பப்பட்ட ஸ்திரீயையும் கொண்டுவந்தான். அரசன் கண்களுக்கு அந்த ஸ்திரீ மிகவும் விகார ரூபமாகத் தோன்றினாள். பிறகு அரசன் இந்தக் காமனுக்கெதிரில் தன் அரண்மனையை அலங்கரித்து வந்தவர்களான அழகிய மாதர்களையெல்லாம் அழைத்துவந்து நிறுத்தி வேண்டியவளைத் தெரிந்தெடுக்கச் சொன்னான். அதற்கு இந்த மனிதன் கூறியதாவது :—“ஆ! அரசனே! நீ ஒரு மூடனாக ஆகி விடாதே! அரசனே! காமத்திற்குக் கண்ணில்லையென்று உனக்குத் தெரியாதா? உன்னிடம் கண்கள் இல்லை பார்ப்பதற்கு. அவளை என் கண்களைக் கொண்டு பார். பிறகு அவள் ரூபவதியா, அல்லவா என்று கூறு. என் கண்களால் பார்த்துக் கூறு.” இவ்வுலக இன்பங்களின் ரகஸ்யமெல்லாம் அவ்வளவுதான். உலகத்து வசீகரமெல்லாம், பொருள்களின் வசீகரத்தன்மை யெல்லாம் இவ்வளவுதான். ஓ! மானிடனே! உனது திருஷ்டியினாலேயே, எல்லாப் பொருள்களையும் வசீகரமுள்ளதாகச் செய்து கொள்கிறாய். பொருளை அந்தக் கண்களால் பார்க்கும்

போது, அப்பொருளின்பேரில் நீயே பிரகாசத்தையும் பொழிந்துவிட்டுப் பிறகு அதனிடம் நீயே இச்சையைச் செலுத்துகிறாய். கிரீஸ் தேச சரித்திரத்தில் ஒரு கதை உங்களுக்குத் தெரியும். எக்கோ (எதிரொலி) என்ற பெண் தன் பிரதிபிம்பத்தினிடம் மோகம் கொண்டாள். இதே மாதிரிதான் எல்லா வசீகரத்தன்மையும். அவை யெல்லாம் உன்னிடமிருக்கும் ஆத்மாவின் பிரதிபிம்பமே; உனது சாயை மாத்திரமேயாம். வேறொன்று மில்லை. அப்படியிருக்கையில் உன் சாயலையே துரத்திச் செல்வது என்ன நியாயத்தில் சேர்ந்தது?

தவழ்ந்து செல்லக் கற்றுக்கொண்ட ஒரு குழந்தையை ராமன் கவனித்ததுண்டு. குழந்தை தன் நிழலைப் பார்த்து அது ஏதோ விநோதமானதென்று நினைத்தது. பெயர்போன ஏதோ ஒரு வஸ்துவென்று கருதியது. நிழலின் தலையைப் பிடிக்கச் சென்றது. நிழலின் தலையிருக்குமிடத்திற்குத் தவழ்ந்து சென்றது. நிழலின் தலையும் கூட ஓடிற்று. குழந்தை ஓட, நிழல் ஓட, குழந்தை அழ ஆரம்பித்தது. 'நிழலில் தலை யகப்படவில்லையே' என்று அழுதது. குழந்தை கீழே விழுந்ததும் நிழலும் அதுவும் ஒன்றாகியது. மறுபடியும் எழுந்து நிழலை வேட்டையாடியது. தாயாருக்குக் குழந்தையிடம் கருணை வந்து குழந்தையைப் பார்த்துத் தன் தலையைப் பிடிக்கச் செய்தாள். உடனே நிழலின் தலையும் கைவசப் பட்டது. நிழலால் பிடிபட்டது. உன் தலையைப் பிடித்துக்கொள். நிழலையும் பிடித்தாகிவிட்டது. சுவர்க்கமும் நகரமும் உனக்குள்ளேயே இருக்கின்றது. சக்திக்கு உற்பத்திஸ்தானம் ஆநந்தத்திற்கு இருப்பிடம் உள்ளுள்

ளேயே இருக்கின்றது. மனிதர்களுக்குக் கடவுளும், பிரகிருதியின் கடவுளும், சர்வதேசங்களுக்கும் கடவுளும் உனக்குள்ளேயே இருக்கின்றது. உலகப்பற்றுடையோரே! கேளுங்கள்! கவனியுங்கள்! நாடெங்கும் பறை சாற்றி விளம்பரம் செய்யவேண்டிய பாடம் இது; தெருத் தெருவாகப் பகிரங்கம் செய்யவேண்டிய பாடம் இது; மிக்க உரத்தகுரலுடன் வெளியிடவேண்டிய பாடம் இது. ஒரு பொருளை யடையவேண்டி நிழலைத் தொடராதே. உனக்குள்ளேயே ஆராய்ந்து பார்த்துக்கொள். பிறகு வெளியே பிரகாசிப்பவை யெல்லாம் உன் ஜோதியைப்பெற்று விளங்குபவையென்று அறிந்துகொள்வாய்.

தெருவில் ஊசிதேடிய ஒரு ஸ்திரீயின் கதை யுண்டு. வீட்டில் ஊசி கெட்டுப்போய்விட்டது. வீட்டில் விளக்குக்கூட ஏற்ற முடியாத அவ்வளவு ஏழை. ஆகையால், தெருவில் போய் ஊசி தேடினாள். 'தெருவில் என்னதேடுகிறாய்?' என்று ஒருவர் கேட்டார். தன் ஊசியைத் தேடுவதாகக் கூறினாள். அந்தச் கனவான் 'நீ எவ்விடத்தில் ஊசியைப் போட்டாய்?' என்றார். 'வீட்டில் போட்டேன்' என்று கூறினாள். உடனே அவர் 'வீட்டில் கெட்டுப்போன ஒரு வஸ்துவைத் தெருவில் தேடுவது எவ்வளவு மூடத்தனம்' என்றார். அதற்கு அவள், 'வீட்டில் விளக்கு ஏற்ற முடியவில்லை. தெருவில் லாந்தர் வெளிச்சம் இருப்பதால் தேடுகிறேன்' என்றாள். வீட்டில் தேட முடியவில்லை ஏதேனும் செய்யவேண்டும். அதனால் தெருவில் வந்து தேடுகிறாள்.

இப்படியே ஜனங்கள் நடந்துகொள்கிறார்கள். உனக்குள்ளேயே சுவர்க்கலோகம் இருக்கின்றது. ஆநந்த

யிருப்பிடம் உள்ளேயே இருக்கின்றது. அப்படியிருக்கத் தெருவில் உள்ள வஸ்துக்களின்மேல் 'அந்த ஆநந்த ஸ்தானம் எங்கே?' என்று தேடுகிறீர்கள். என்ன விந்தை பாருங்கள்! "உங்களுக்குள்ளே யிருக்கும் சுவர்க்கத்தை யறிந்துவிடுங்கள். உடனே சகல ஆசைகளும், சகல துக்கங்களும் ஒழிந்துபோகும்."

---

## ரு-வது, உண்மையான சுகம் எது ?

---

சுகமடையும் இரகஸ்யம் தனச் சேர்க்கையல்ல. இரகஸ்ய மென்னவெனில், எவ்வளவுக் கெவ்வளவு நீ பொருள்களைத் தேடிச் செல்கின்றாயோ அவ்வளவுக் கவ்வளவு அவைகள் உன்னைவிட்டு நீங்கும்; உனக்குச் சொந்தமாகாது. ஆசையின்றி எவ்வளவுக் கெவ்வளவு மேலாக நீ நிற்கமுடியுமோ, தேவைகளுக்குமேல் எவ்வளவு உயர்வாக உன்னால் நிற்கமுடியுமோ அவ்வளவுக் கவ்வளவு விஷயங்கள் அல்லது பொருள்கள் உன்னை வந்து சேரும். தற்காலத்திய இந்தியர்களுக்குக் கூட, உலகவிஷய அறிவு நிறைந்தவர்களாதலால் இந்த இரகஸ்யம் தெரியவில்லை. கூர்மையான ஆழ்ந்த நோக்கம் இல்லாதபடியால் உண்மையில் காரணமாகாத சில இயக்கங்களே காரணங்களாகுமென்று கூறுகிறார்கள்.

இராஜீய நிலையில் இந்தியா இழிந்ததற்குக் காரணம் என்ன ? இகலோக வாழ்க்கைச் சாதனங்களிலும் இந்தியாவானது ஏன் அவ்வளவு தணிந்த நிலைக்கு வந்திருக்

கிறது. ஏனெனில், இந்தியா தேசம் தாழ்ந்த நிலைக்கு வர ஆரம்பித்தகாலத்தில் இருந்த இந்தியர்களைப்போன்ற வரே இப்போதும் இருக்கிறார்கள்; வேதாந்த அனுபவம் தெரியாதவர்கள். உங்களுக்கே ஆச்சர்யத்தை யுண்டாக்கும். வேதாந்தத்திற்குப் பிறப்பிடம், ஆத்மப் பயிற்சிக்கு உறைவிடம், இந்தியாதேசம், ஏகத்துவ தத்துவத்தின் ஊற்றுக்கண், சர்வமும் ஒன்று என்ற கொள்கையே உற்பத்தியான இடம், கடவுளைப்பற்றிய அறிவு, ஆத்மஞானம், தத்துவஞானம், தன்மதிப்பு, பக்தி, சிரத்தை முதலியன நிறைந்ததான கங்காநதிபெருகி வரும் குன்றம், அவ்வித பெருமைகளை யுடையதான இந்தியா தற்காலம் அனுபவ வேதாந்தத்தை யறியவில்லை யென்றால் ஆச்சர்யமல்லவா? இதுதான் இந்தியா தாழ்ந்துபோனதற்குக் காரணம். உங்களுக்கு ஆச்சர்ய மாக இருக்கலாம். ஆனால், இப்போது அவ்விஷயத்தைப் பற்றிக்கூறச் சாவகாசமில்லை. ஆனால், ஒன்றை மாத்திரம் உறுதியாகக் கொள்ளுங்கள். எந்தத்தேச சமூகமும் முத லில் ஆத்மப்பயிற்சி குறையாமல் மற்ற அம்சங்களில் குறைந்துவிடாது. வேறு இந்தியர்கள் இவ்விஷயத்தில் இராமனுடைய சொற்களை அங்கீகரிக்காமலிருந்தாலும் இருக்கலாம்; ஆனால், இராமனுக்கு வேறு பிரமாணம் தேவையில்லை; தன் பிரமாணத்தாலேயே தானே கூறு கிறான்; தனது கூர்மையான விஷய ஆராய்ச்சியே தனக் குப் பிரமாணமென்று கருதுகிறான். தற்காலம் அமெ ரிக்கா எதனால் வேகமாக முன்னேறுகிறது? ஏன் அபூர்வ மான நிலையில் விர்த்தியாகிக்கொண்டு வருகிறது? உலக விஷய சாதனங்களிலும் அமெரிக்கா விர்த்தியாவதற்குக் காரணம் என்ன? அறியாமலே அமெரிக்கர்கள் உலக

விஷயங்களில் வேதாந்த அனுபவம்பெற்று நிற்கிறார்கள். உண்மைக்கு எப்போதும் ஒளியுண்டு; ஜோதியுண்டு. சத்தியமே தலைகாக்கும். உண்மையான குணம், சத்திய நெறி, அழுத்தமான யோக்கியதை இவைகளுக்கே பிரகாசமுண்டு; இவைகளுக்கே ஜெயமுண்டு; வேறெதற்கும் ஜெயம் கிடையாது. இவ்விஷய ஆராய்ச்சிக்கு இது சமயமல்ல. இதைவிட்டு எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு வருவோம்.

"கேளுங்கள்; கொடுக்கப்படுவீர்கள். தட்டுங்கள்; உங்களுக்குத் திறந்துவிடப்படும்," என்று பைபிள் கூறுகிறது. ஹிந்துக்களிடமும் கர்மாவைப்பற்றிய விதியுண்டு. இதன் பொருள் என்னவெனில், ஒவ்வொரு ஆசையும் நிறைவேற்றப்படும் என்பதே கருத்து. ஒரு சமய மில்லாவிட்டாலும் மற்றொரு சமயம் எப்பொழுதேனும், ஒவ்வொரு அவாவும் ஒவ்வொரு எண்ணமும் முடிவாகியே தீரும். அவ்விஷயத்தைப்பற்றி இப்போது உபந்நியாசம் செய்யவாவில்லை. சாதாரணமாகக் குறிப்பிட்டுவிடுகிறேன். செடிகளில் உற்பத்தியாகும் ஒவ்வொருமொக்குகளும் எப்போதாவது புஷ்பித்து மலர்ந்துவிடுகின்றன. இவ்வுலகத்தில் எந்த சக்தியும் வீணாகிறதில்லையென்று நாம் படிக்கிறோம். சக்திகளும் காரியங்களும் வீணாகிறதில்லை. ஜடப்பொருள்களும் அழிகிறதில்லை. அதுபோலவே, மனோசக்திகளும் ஆசைகளும் என்ற மனோசக்திகள் எப்படி அழிந்துபோம்? அவை பலன் தந்தே தீரும். இதுதான் கர்மாவைப்பற்றிய விதி; இவ்விதிப்படியே ஹிந்துக்களும் சொல்கிறார்கள். "கேளுங்கள்; நீங்கள் கண்டுகொள்வீர்கள். தட்டுங்

கள்; உங்களுக்குத் திறக்கப்படும்," என்கிறார்கள். ஆனால், இவ்விதி உண்மைதானோ? நமது நித்தியப்படி ...ந்த உண்மை விளங்குகிறதோ? சாமான்ய ஜனங்கள் இவ்விதியைப்பற்றிய (மேற்கூறிய) வாசகங்களை எப்படிப் பொருள் கொள்வார்களோ அவ்விதம் ருஜு செய்யச்சொன்னால் நிச்சயம் தவறிப் போவாய். அவ்விதி சரியல்ல என்பதையே அறிவாய். அநுபவத்திற்குச் சரியல்லவென்றுதான் காண்பாய். (மேலே குறிப்பிட்ட விதியைப்பற்றிய) வாக்கியம் பூர்ண உண்மையை விளக்கவில்லை. உண்மையின் ஒரு பாக மாத்திரமேயாகும். இந்த வாக்கியம் பைபிளில் முதலில் கூறப்பட்ட காலத்தில் அதன் கருத்து என்னவாகக் கொண்டார்கள் என்று ஜனங்கள் இப்போது அறியவில்லை. "கேட்டதும் கிடைத்துவிடும்; தட்டியதும் திறக்கப்படும்." ஆனால், தன் விலையைக் கொடுத்தாகவேண்டும். அதற்காகக் கிரயம் உண்டு என்பதை மறத்தலாகாது. என்ன விலை அல்லது கிரயம் என்பதற்குப் பைபிள் கூறுகிறது: "வாழ்க்கையைக் காப்பாற்றவேண்டுமென்று பிரியப்படுகிறவன். வாழ்க்கையை இழக்கச் சித்தமாயிருக்கவேண்டும்." என்ன அர்த்தம் இதற்கு? கெஞ்சுகின்றவனும், விரும்புகின்றவனும், ஆசைப்படுகின்றவனும் பொருளை யடையமாட்டான். கெஞ்சுவதாலும் ஆசைப்படுவதாலுமே உன் வாழ்க்கையைப் பூர்த்தி செய்யப் பார்க்கிறாய்? "வாழ்க்கையைக் காப்பாற்ற அதை இழக்கவும் சித்தமாயிருக்கவேண்டும்."

கவனியுங்கள்; கடவுளைப் பிரார்த்திக்கும்போது நாம் கூறுகிறோம்: "எங்களுக்கு இன்று . வேண்டிய

உணவைக் கொடு" என்கிறோம். இதற்கு நாம் கடவுளைக் கெஞ்சிக் கேட்கவேண்டும் என்றாவது, அவ்விதம் நாம் விரும்பவேண்டுமென்றாவது பொருளல்ல; அதன் கருத்து அவ்விதம் இல்லவேயில்லை. ஒரு அரசனும் சக்ரவர்த்தியாயினும் சரியே, தினசரி போஜனம் தடைப்படவே படாது என்ற நிச்சயமிருக்கும் சக்கரவர்த்தியாயினும் இவ்விதம் பிரார்த்திக்க வேண்டுமென்கிறார்கள். ஏன்? உணவுமுதலிய இகலோக சாதனப் பொருள்களைக் கொடு என்று இரங்கிக் கேட்கவேண்டுமென்பது ஒருக்காலும் இதன் பொருளல்ல. மற்றும் இதன் பொருளென்னவெனில், ஒவ்வொருவனும், அரசனாயினும் சரி; சன்னியாசியாயினும் சரியே; எவனாயினும் சரிதான்; தன்னைச் சுற்றியிருக்கும் பொருள்களையெல்லாம், தனம் முழுமையும், அழகிய வசீகரமான விஷயங்களெல்லாம் தனககுச் சொந்தமல்லவென்று பாவிக்க வேண்டும்; கடவுளுக்குச் சொந்தமாகக் கருதவேண்டும்; 'எனக்குச் சொந்தமல்ல, எனக்குச்சொந்தமல்ல' என்றே நினைக்கவேண்டும். ஆதலால், யாசிப்பது பொருளல்ல; தியாகம் செய்யப்படுவதான். கடவுளுக்குச் சகலமும் சொந்தமென்று கருதுவதுதான். இப்படிப்பட்ட கருத்தில் மேற்குறிப்பிட்ட வாக்கியத்தை அமைத்தார்கள். [கிறிஸ்தவர்களது பிரார்த்தனை வாக்கியம்] அதன் சாதாரண பொருளில் எடுத்துக்கொண்டால் அரசன் அவ்விதம் பிரார்த்திப்பது எவ்வளவு தகுதியற்றதாகி விடும் பாருங்கள்! இவ்விதம் பிரார்த்தனை செய்யும்போது, அரசன் தன் கஜானாவிலுள்ள பொக்கிஷமனைத்தும், நகைகளெல்லாம், வீட்டிலுள்ள பொருள்களெல்லாம், அரண்மனை யுள்பட சகலமும் தனக்குச் சொந்

மல்லவென்று கருதக்கூடிய நிலையில் மனதை வைத்துக் கொள்ள முடியுமானால், நியாயமான பிரார்த்தனையாக முடிகிறது. அவைகளை விட்டுவிடுகிறான். தனக்கு உரியதாக்கவில்லை. அவற்றினின்றும் விலகி தனியே நிற்கிறானென்று கூறலாம். அவனே சிறந்த தியாகியாவான். உண்மையான சந்யாசி. இது கடவுளுக்குச் சொந்தம்; இந்த மேஜையிலுள்ள சகல பொருள்களும் கடவுளுக்குச் சொந்தமேயன்றி என்னுடையவையல்லவென்கிறான். எனக்கு யாதொன்றும் சொந்தமல்ல; எது கிடைத்தாலும் 'அது என்மீது அன்பைச் செலுத்தும் கடவுள் கொடுப்பது' என்றுதான் அவன் கருதுகிறான். இப்போது இராமன் கூறிய பொருளைக்கொண்டு பார்த்தால் உங்களுக்கு இதன் பொருள் நன்றாக விளங்கும்.

மற்றுமொரு பைபிள் வாக்கியமுண்டு: "சுவர்க்கம் (அல்லது கடவுளது) ராஜ்யத்தை அடைந்தாயானால், உனக்குச் சகல பொருள்களும் கிடைக்கும்." இதுதான் இரகஸ்யம். பிரார்த்தனையின் பலன் முழுதும் இங்கே இருக்கிறது. கடவுளைப் பிரார்த்தித்ததற்கு இதுதான் ஆசார்யர் உபதேசம் செய்தது. "முதலில் சுவர்க்கத்தைச் சேரப் பிரயத்தனம் செய். எல்லா வஸ்துக்களும் உங்களுக்குக் கிடைத்துவிடும்". மற்றுமொரு வாக்கியம்: "துக்கத்துடன்தான் பிள்ளை பெறவேண்டும்." இதுவும் தொடர்ச்சியைப் பூர்த்தியாக்குகிறது. குழந்தை என்ற பாக்கியமுண்டு. ஆனால், அதற்காகத் துக்கம் என்ற விலை கொடுத்தாக வேண்டியதவசியம்.

ஆசைகளுக்குப்பலன் உண்டு ; நீ கேட்பதெல்லாம் நடக்கும். உன் விருப்பமெல்லாம் ஈடேறுவது நிச்சயம். ஆனால், துக்கமென்ற விலை கொடுத்தாகவேண்டியது. துக்கம் என்ற வார்த்தைக்குப் பொருள் என்ன? சிறிது விளக்கவேண்டும். தியாகம் என்பதே அதன் பொருள். ஆசைகளையே தியாகம் செய்யவேண்டும் ; விட்டுவிட வேண்டும். ஆசைகளை விட்டுவிட்டால் மாத்திரமே அவை பூர்த்தி செய்யப்படும்.

பிரார்த்தனைகள் நிறைவேறும் என்று கூறுகிறார்கள். பிரார்த்தனையாவது என்ன ? கேட்பதென்றும் விரும்புவதென்றும் பொருள் கொண்டால் ஒருக்காலும் நிறைவேறாது. சாதாரணமாகப் பிரார்த்தனை என்பது மேலான ஒரு நிலைமை. அதாவது என்ன ? விருப்பம் என்ற நிலைமைக்கு மேலாகக் கிளம்புவதுதான். 'எல்லாம் உன் செயலே' என்ற வாக்கியத்தின் கருத்துடன் நீயும் ஒன்றுவதுதான். பிச்சைகேட்பது பிரார்த்தனையாகாது. சாதாரணமான ஜனங்கள் என்ன பொருள் கொள்கிறார்கள். பிரார்த்தனை என்றால் தமது எண்ணம் நிறைவேறுவது என்றும், தான் என்பது இந்தச் சிறிய அகம் என்றும், கெஞ்சிக் கேட்கின்ற சிறிய அகமென்றும் கருதுகின்றார்கள். ஆனால், பிரார்த்தனையின் கருத்து முழுதும் "உன் செயல் ஈடேறவேண்டியது" என்ற கருத்துடன் ஒன்றுபடலேயாம். சரீரம் வியாதியால் அவஸ்தைப்படும் போதும், எல்லா சந்தர்ப்பங்களும் உன்னைச் சுற்றிலும் கெடுதலாகவே யிருக்கும்போதும், உனக்கு விரோதமாகவே எல்லாம் போய்விட்டாலும், உன் ஹிருதயத்தினின்றும் "உனது எண்ணம் நிறைவேறட்டும் ; எனக்கு

யாதொன்றும் சொந்தமல்ல" என்ற நினைவு கிளம்ப வேண்டும். அதுதான் தியாகம்; தன் மறுப்பு நீங்குவது அப்போதுதான். பிரார்த்தனைகளின் சாரமே அந்த நிலைமைதான். சுயநலம் பொருந்திய எண்ணங்களோடும் வெளியாகும் பிரார்த்தனைகள் கேட்கப் படமாட்டா. மனோவாக்குக் காயங்களுக்கப்பால் மனம் எழும்பி இந்த உலகப் பிரக்ஞை சம்பந்தமின்றி மறந்து நின்றால், அவ்வித சமாதிநிலையில் சிறிது நேரம் மனதைச் செலுத்த முடிந்தால், ஒரு விநாடி நிறுத்த முடிந்தாலும் போதும்; பிறகு அந்த நிலையிலிருந்தும் நீங்க விழித்துக் கொண்டால்---விழித்துக்கொள்வதல்ல, சிறிது அந்த நிலையினின்றும் கீழிறங்கினால்—அப்போது உண்டாகும் ஆசைகள், உன் முன்பு தோன்றும் அவாக்கள் அவசியம் பூர்த்தியாகிவிடும். இவ்விதமான பிரார்த்தனைகளே நிறைவேறும். தன் மறுப்பு என்ற நிலைக்குச் சரீரப் பிரக்ஞைக்கு அப்பால் எழும்பிய பிறகு எதையும் மறந்த பிறகுதான் நிறைவேறும்.

* * * *

நாம் ஒரு கனவானிடம் செல்லவேண்டுமானால், தக்க உடை உடுத்திக்கொண்டு போகவேண்டும். கடவுள் எல்லாப் பெரியோர்களுக்கும் மேலான பெரியோராவர்; எல்லோருக்கும் மேலானவர்; எல்லாத் தேவைகளும் நீங்கப்பெற்றவர்; அவருக்கு யாதொன்றும் தேவையில்லை. அப்படிப்பட்ட கடவுளிடம் செல்லவேண்டுமானால் அவருக்குத் தக்க உடையுடன் செல்லவேண்டும். தேவைகளே யின்றி விளங்கும் பரம்பொருளிடம் நெருங்கத்தக்க விதமாகச் செல்லவேண்டும். அங்கே

நீயும் பிச்சை கேட்பதை விட்டுவிடவேண்டும்; வர்த்தக உடை கூடாது; யாசகர் வேஷம் தகாது. எவரும் யாசகரல்லர். இந்தத் தேசத்தில் (அமெரிக்காவில்) பிச்சைக்காரர் தேவையில்லை; சோம்பித்திரிபவர் தேவையில்லை. கடவுளிடம் செல்லவேண்டுமானால் கடவுளுடையில் செல். கடவுளுடையாவது எது? யாசகக் குறிகள் நீங்கப்பெற்று யாதொரு தேவையும் கிடையாதென்ற நிலைமையேயாகும். விருப்பங்களை இல்லாத நிலையை நீ உணரவேண்டும். அப்போது மாத்திரமே கடவுளால் அழைக்கப்படுவாய். அப்போது மாத்திரமேயன்றி மற்றொருபோது மாகாது.

---

## கூவது, மதப்பயிற்சியின் பூர்த்தி

---

ஹிந்துக்கள் கூறுவதுபோல ஒவ்வொருவரும் கடவுளே. மிகவும உயர்ந்த ரத்நமே. சகல சுகங்களுக்கும் உற்பத்தி ஸ்தானம் தன்னுள்ளேயே வைத்திருக்கிறான். சர்வமும் தானேயாகிறான். அப்படியானால் ஜனங்கள் துக்கப்படுவானேன்? உள்ளே ஆநந்தம் இல்லாததால் கஷ்டப்படுவதில்லை. தம்முள்ளே உத்தம ரத்நம் இல்லாமலில்லை. ஆனால், இந்த பொக்கிஷம் வைக்கப்பட்டிருக்கும் பெட்டியைத் திறக்கத் தெரியாதபடியால் தான்; முடிச்சு அவிழ்க்க முடியவில்லை யாதலால் கஷ்டப்படுகிறார்கள். அதாவது: ஆத்ம அநுபவமில்லை யாதலால்தான் கஷ்டப்படுகிறார்கள். மதப்பயிற்சியெல்லாம் நம்மை அவிழ்த்துவிடுவதுதான்; நமது

ஆத்மாவைத் தெளிவாக்குவதுதான். நமக்குள்ளிருக்கும் பொக்கிஷத்தைத் திரைபோட்டு மறைத்திருக்கிறோம். நமது கர்மாவினாலேயே, நமது கைகளாலேயே மறைத்து விட்டோம். அதனால் நம்மை நாமே துக்கிகளாக்கிக் கொண்டோம். எமர்சன் கூறுவதுபோல "ஒவ்வொரு மனிதனும் கடவுளே மூடவேஷம் போட்டுக்கொண்டதற்குச் சமமாகிறான்."

எல்லா மதக் கொள்கைகளும் நமது கண்களை மூடிக்கொண்டிருக்கும் திரையைக் கிழிப்பதற்கு, விலக்குவதற்குச் செய்யப்படும் பிரயத்தனங்களே. சில கொள்கைகள் மற்ற மதங்களைவிட திரைகளை மெல்லியதாகச் செய்திருக்கின்றன. ஆனால், எல்லா மதக் கொள்கைகளிலும் உண்மையான ஆத்ம தரிசனம் செய்தவர்கள் இருக்கிறார்கள். உண்மையான ஆத்மன் அறியப்படும் போதெல்லாம், திரை கனமாக இருந்த போதிலும் மெல்லியதாக இருந்தபோதிலும், தற்சமயம் ஒதுக்கப்பட்டு உள்ளே யிருக்கும் உண்மைப்பொருளின் சாயை விளங்குகிறது. இந்த உதாரணத்தால் விளக்குவோம். இதோ படுதா மறைத்துக்கொள்கிறது. [ஒரு கைக்குட்டையைப் பல மடிப்புகளாகப் போட்டு கண்களை மறைத்துக்கொண்டார்.] கண்களுக்கு முன்னால் நிற்கிறது. படுதாவை ஒதுக்கிவிட்டுப் பார்க்கலாம். ஆனால், மறுபடியும் கண்களுக் கெதிரில் வந்துவிடுகிறது. படுதாவைக் கனம் குறைக்கலாம். மெல்லியதாகப் படுதா இருக்கும்பொழுதுகூட ஒதுக்கிப் பார்க்கிறோம். மறுபடியும் எதிரில் வந்துவிடுகிறது. மிகவும் மெல்லியதாகச் செய்கிறோம். அப்போது திரையை ஒதுக்காவிட்டா

லும் பார்வையை மறைக்கவில்லை. அதன் மூலமாகப் பார்க்கிறோம். ஆனால், இப்போதுங்கூட சில சமயம் திரையை விலக்கமுடியும். படுதாவானது மிகவும் மெல்லியதாகச் செய்தால், திரையை யில்லையென்று கூற லாம். பாதகமேயாகவில்லை. அது இருந்தும் உயர்ந்த அநுப வம் ஏற்படுகிறது. கடவுளுடன் எதிரில் நிற்கிறோம் நாமே கடவுள். இவ்வுலகிலுள்ள எதுவும் நம்மைக் கெடுக்காது; நம சுகத்தை அகற்றாது. இதிலேதான் மற்ற மதக்கொள்கைகளைவிட வேதாந்தம் உயர்ந்ததா கிறது. மாயை என்ற திரையை மிகவும மெல்லிதாக்கி ஞானியை இந்த வாழ்க்கையுடன் இருக்கும்போதே ஆநந்தக் காட்சி யடையுமாறு செய்கின்றது.

எல்லா மதக் கொள்கைகளின்படி அனுஷ்டிப்பவர் களும் சில சமயங்களில் தெய்வத்துடன் ஒன்றுபடக் கூடும். திரையை விலக்கிப் பார்க்க முடியும். திரை கனமாயிருந்தாலும் சரியே, மெல்லியதாக இருந்தாலும் சரியே, பரம்பொருளுடன் சேர்ந்து அனுபவிக்கும்வரை யில் கண்களுக்குத் தடையாகாமல் ஒதுங்கியே நிற் கிறது. வேதாந்தியும் ஆநந்த சமாதி நிலைக்கு வரமுடி யும். ஆனால், சாமான்ய நிலையிலும் திவ்ய காட்சி யையே தரிசிக்கிறான். கனமான மாயையுடன் கூடிய மதங்களை அனுஷடிப்பவர்க்கு இது முடியாது.

இந்தியாவிலுள்ள சமயங்களைப்போலவே உலகத்து மதங்களையும் மூன்று முக்கிய பிரிவுகளாகச் செய்யலாம். ஸம்ஸ்கிருதத்தில் இவற்றிற்கு தஸ்ஸியைவகம், தவை வகம், துவமேவகம் என்று பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்

ின்றன. முதல் வாக்கியம் "நான் அவனுக்கு அடிமை" என்று பொருள்படும். இவ்வித கொள்கையானது நிரையைக் கனமாகவே வைத்திருக்கிறது. மதப் பயிற்சியில் இரண்டாவது படியென்று கூறப்படுவது தவை யகம்; அதாவது, "நான் உனக்கு அடிமை." முதலில் கூறப்படும் மதக்கொள்கைக ளடங்கிய தன்மைக்கும் இரண்டாவது கூறப்பட்ட தன்மைக்கும் வித்தியாசம் பாருங்கள். மதப்பயிற்சியின் முதற் பிரயத்தனங்கள் செய்யும்போது, பக்தனானவன் கடவுள் எங்கேயோ கண்ணுக்கெட்டாத இடத்தில் இருப்பதாகக் கருதுகிறான்; அதனால் கடவுளைப் படர்க்கையிடத்தில் வைத்து 'அவனுக்கு நான் உரிமை' என்கிறான். இதுவே மதப்பயிற்சியின் ஆரம்ப நிலையாகும். மதப் பயிற்சியில் ஆரம்பிக்கும் குழந்தைப் பருவத்திற்குத் தாய்ப்பால் போன்ற நிலையாகும். இந்தப் பாலைச் சாப்பிடாமலே மதப்பயிற்சியில் எவனும் முன்னேற முடியாது. இந்த நிலையைக் கூட பூரணமாக அனுபவித்தால் ருசியாகத்தானிருக்கும். அதிகாலையில் எழுந்திருந்து "எனது கடவுள் எழுப்பினர்" என்று நினைக்கிறான். உத்தியோக சாலைக்குப் போகிறான். அந்தக் கடமைகளும் தனக்குக் கடவுளால் கொடுக்கப்பட்டதென நினைக்கிறான். உலகம் முழுவதும், தன் வீடும், பந்துக்களும், சிநேகிதர்களும் தன்னிடம் கடவுளால் ஒப்புவிக்கப்பட்டதென நினைக்கிறான். இந்த நினைப்பால் உலகமே சுவர்க்கலோகம் போல் மாறவில்லையா? அழகிய பூந்தோட்டம்போலாக வில்லையா? சிரத்தையுடன் முழுமனதுடன் தன்னைச் சுற்றியுள்ளன வெல்லாம், தன் சரீரமும்கூட, கடவுளுடையது என்று மதிக்கட்டும். பரிபூரணமாக இவ்

விதம் நினைத்து அனுபவித்தால் ஆனந்தமுண்டு. கம்பீரமாகவே யிருக்கும். அனுபவத்திற்கு வந்துவிட்டால் இதுவே ருசியுள்ளதாக இருக்கும். ஆனால், இந்தக் கொள்கை ஆரம்பமாத்திரமேயாகும்.

இரண்டாவது வகுப்பில் சேர்ந்த கொள்கைகளுடன் இதை ஒப்பிட்டுப் பாருங்கள். மதப்பயிற்சியில், பக்தியில் இரண்டாவது படியான தலைவகம் அல்லது "நான் உனக்கு அடிமை" என்ற தன்மையேயாகும். ஒவ்வொரு விநாடியிலும் நீ எனக்குத் தேவையாயிருக்கிறாய். முதல்படியிலுள்ள நிலைமை ருசியுள்ளதுதான். ஆனால், இது அதிக ருசியுள்ளதாக இருக்கும். முதல் நோக்கம் அருமையும் அழகும் பொருந்தியதுதான். ஆனால், அதனிலும் அதிக அருமையும் அழகும் பொருந்தியது இது. வித்தியாசத்தைக் கவனியுங்கள். திரை மெல்லியதாக நிற்பதுதான் வித்தியாசம். "நானே உனக்கு அடிமை"; இதில் கடவுளைப் படர்க்கையிடமாக்காமல் முன்னிலைப்படுத்தி யிருக்கிறீர்கள். எங்கேயோ மறைந்து கிடந்த கடவுள் நம்முடன் எதிரில் வந்து நிற்கிறார். நமக்குச் சமீபத்தில்வந்து அருமையுடன் விளங்குகிறார். மிகச் சமீபத்தில் நிற்கிறார். கடவுளிடம் நமக்கு அதிக பழக்கமும் உண்டாகிறது. கொள்கையிலும் இது உயர்ந்ததுதான். அநேகமாக ஜனங்கள் இந்தக் கொள்கையில் நம்பிக்கை வைத்து கடவுளைச் சமீபத்திலிருப்பவர்போலவே அழைக்கின்றார்கள். ஆனால், அவர்களுக்கு உண்மையான சிரத்தையுடன் கூடிய பக்தி ஏற்படுவதில்லை. அனுபவமாகிற பக்தி இவர்களுக்கு உண்டாவதில்லை. அனுபவமாகிற பக்தி மதப்பயிற்சியின் முதற்

படியிலுள்ளவர்களுக்கு ஏற்பட்டால் அவர்களிடம் நிரந்தரமாக நின்றுவரும் தற்சமயம் விலகிவிடுகிறது. 'நான் கடவுளுக்குச் சொந்தமானவன்' என்ற எண்ணத்தை ஒருவன் பூரண ஹிருதயத்துடன் ஆத்ம பூர்த்தியாக அனுபவித்துணர்ந்தால், ரத்த முழுமையும் இந்த உணர்ச்சியே குடிகொண்டால், சரீரத்தின் ஒவ்வொரு மயிர்க்கால் மூலமாகவும் இந்த உணர்ச்சியே வெளிப்பட்டால், தற்சமயமுள்ள சிரத்தை, ஊக்கம், விடாமுயற்சி, அல்லது பிடிவாதம் என்பது அவனது கண்களின் முன் நிற்கும் திரையை நீக்கிவிடுகிறது. அவன் தன்னை இழந்துவிடுகிறான்; கடவுளிடம ஒன்றுபடுகிறான்; சர்வத்துடன் ஏகமாகிறான்; தற்சமயம் கடவுளாகவே ஆகிறான். இரண்டாவது படியிலிருப்பவன், உயர்ந்த கொள்கையைப் பின்பற்றுகிறவனுகிய "நானே உனக்கு அடிமை" என்று கூறுகிறவன் சில சமயம் அனுபவ பக்தி யில்லாதவனுக இருக்கலாம். கடவுள் சந்நிதானத்தின் இனிமையை அநுபவிக்க முடியாதவனுக இருக்கலாம். ஆனுல், மதப்பயிற்சியில் இந்த இரண்டாவது படியிலுள்ளவர்களும் சிரத்தையும் அனுபவ பக்தியும் அடையலாம்.

மதக்கொள்கையின் மூன்றாவது உருவம் "நானும் நீயும் ஒன்று" என்பதேயாம். இது நம்மைக் கடவுளுக்கு எவ்வளவு சமீபததில் நிருத்துகிறது பாருங்கள். 'நான் அவனுக்கு அடிமை' என்ற பாவனையில் கடவுள் தூரத்தில் நிற்கிறார். இரண்டாவது உருவமாகிற "நான் உனக்கு அடிமை" என்பதில் கடவுள் நமக்கு எதிரில் நிற்கிறார். நம்மிடம் நெருங்கிவிட்டார். ஆனுல், மதப்பயிற்சியின்

பூர்த்தியாகிற முடிவான காலத்தில் இருவரும் ஒன்றாகி விட்டனர். பக்தனும் பக்தி செலுத்தப்பட்ட பரம் பொருளும் பக்தி அல்லது அன்பில் முழுகிக் கலந்து கொண்டனர். இப்படித்தான் வேதாந்தம் அனுபவிக்கப்படுகிறது. பூச்சியானது விளக்கினிடம் நெருங்கி நெருங்கி முடிவில் தன் சரீரத்தைக் கொளுத்திவிட்டு ஜோதிமயமாகிவிட்டது. வேதாந்தம் என்று பொருள் கொள்ளத்தக்க உபநிஷத்து என்ற வார்த்தையின் தாதுப் பொருள் இதுதான்; ஜோதிகளுக்கெல்லாம் ஜோதியாகிய (பரம்பொருளை) நெருங்கி (உப) நாநாவாகப் பிரித்து பிரக்ஞையுடன் வேறாக்கும் தன்மையாகிய பூச்சியை, (நி) நிச்சயமாகவே, (ஷத்) அழித்துவிடுதல் கடவுளின் உண்மையான பக்தன் அவருடன் ஏகமாகிறான். அப்போது மெய்ம்மறந்து தற்செயலாகவே தன்னை யறியாமலே (சிவோகம், சிவோகம்) 'நானே அவன்', 'நானே அவன்' என்று கூறிவிடுகிறான். 'நீயும் நானும் ஏகம்', நானே கடவுள். அதற்குக் குறைந்து நான் இருக்க முடியாது என்கிறான். மதப் பயிற்சியின் பூரண முடிவு இதுதான். உன்னதமான பக்தி இதுதான். இதுவே வேதாந்தம் எனப்படும்; அறிவின் முடிவு அல்லது பூர்த்தி. இங்கே எல்லாவித அறிவும் பூர்ணமாகிறது; முடிவான நோக்கமே அடையப்படுகிறது. இந்த மதக் கொள்கைகளைப் பின்பற்றுகிறவர்கூட, திரை மிகவும் மெல்லியதாக அதன் வழியே முழு உண்மைப்பொருளும் விளங்குமாறு இருந்தபோதிலும், சிலர் சிரத்தை இல்லாதவர்களாய்த் தியான பலம் இல்லாதவர்களாக முழு அனுபவத்தையும் அடையவேண்டியபடி திரையை விலக்கப் பிரியமில்லாம லிருக்கிறார்கள். மற்றும் சிலர்

7

புத்தி பூர்வமாக இந்த நிலையின் தெளிவை யறிந்த பிறகு உணர்ச்சியைப் பலப்படுத்திக்கொண்டு மேலெழும்பி பூர்ண அனுபவமும் அடைந்து திரையை நீக்கிவிடு கிறார்கள். பரமானந்த பிராப்தியை அடைகிறார்கள். இதுவே சுவர்க்கானுபவம். இந்த நிலையை அடைந்த வர்கள் இப்பிறவியில், இந்த வாழ்க்கையுடன் கூடிய முக் தர்கள் எனப்படுவார்கள், ஜீவன் முக்தர்களாவார். மதக் கொள்கையின் நுட்பம் கண்டுபிடித்தல் அல்லது திரையை மெல்லிய தாக்குதல் என்பது முக்கியமாக புத்தியினால் ஆகக்கூடியது. திரையை நீக்குதல் என்ற காரியம் உணர்ச்சியினால் ஆகக்கூடியது. மதக்கொள் கைகளின் மூன்று ரூபங்கள் தெளிவாக்கப்பட்டன. இனி ஒவ்வொரு நிலையிலுள்ளவர்களும் சிலசில சமயங்க ளில் எவ்வாறு திரையை நீக்கமுடியுமென்று பார்ப் போம். ஹிந்துக்கள் கூறும் சில கதைகள் உதாரணங்க ளாகி விளக்கிவிடும்.

முற்காலங்களில் ஹிந்துக்கள் அகல் விளக்குக ளில் எண்ணெயின் உதவியினால் விளக்கேற்றுவது வழக் கம். ஒரு வீட்டில் விளக்குகள் ஏற்றியவுடன் மற்ற வீட்டாரும் வந்து அந்த வீட்டில் தங்கள் விளக்குகளை ஏற்றிக்கொண்டு செல்வார்கள். ஒருநாள் அந்திப் பொழுது கிருஷ்ணனிடம் அன்பு முதிர்ந்த ஒரு பெண் கிருஷ்ணனது தகப்பனார் வசிக்கும் வீட்டிற்கு விளக் கேற்றப் போவதுபோல் சென்றாள். உண்மையான காரணம் சொல்லவேண்டியதில்லை யென நினைக்கிறேன். விளக்குப் பூச்சியானது பிரகாசத்துடன் ஒன்றுபட இச் சிப்பது போல் இந்தப் பெண் கிருஷ்ணனது முகதேஜ

ஸில் சிறிதளவாவது கலந்துகொள்ள வேண்டியே (கண் காட்சியினால்) அங்குச் சென்றாள். இல்லாவிட்டால் மற்ற வீடுகளில் ஒன்றுக்குச் சென்றிருக்கலாம். கிருஷ்ணனைப் பார்ப்பதற்காகவே செல்ல நினைத்துத் தாயாரிடம் விளக்கேற்றச் செல்வதாகக் கூறினாள். விளக்கிலிருக்கும் திரியை மற்றொரு விளக்கின் ஜுவாலையில் நீட்ட வேண்டும். அவளுடைய கண்களோ விளக்குகளிடம் செல்லவில்லை. மாயவலையினால் வசீகரம் செய்கின்ற அழகிய கிருஷ்ண முகத்தில் அன்புடன் செலுத்தப் பட்டன. அங்கேயே கண்களும் (மனமும்) ஒன்றுபட்டு விட்டன. தன் விளக்கின் திரிஜுவாலையில் செலுத்தப் படாமல் தனது விரல்களே அதில் எரிந்து வந்தன. விரல்கள் எரிந்துகொண்டு போகும்போது அவள் கவனிக்கவேயில்லை. காலம் சென்றது; வீட்டிற்குத் திரும்ப வில்லை, தாயார் பொறுக்கமுடியாமல் பக்கத்து வீட்டிற்கு வந்து பார்த்தாள். தன் பெண்ணின் விரல்கள் எரிந்து கொண்டிருப்பதையும் இந்தப் பிரக்ஞைகூட இல்லாமல் பெண் நிற்பதையும் கவனித்தாள். தசைகள் எரிந்து விரல்கள் சுருங்கி எலும்புகளும் கருகின. தாயார் மூச்சுத் திணறிப்போய்ப் பெருமூச்சு விட்டு அழுது கொண்டு உரக்கக் கதறினாள். "ஐயோ! குழந்தாய்! என்ன காரியம் செய்கிறாய். அடே பாவி! என்ன செய்கிறாய்". அப்போதுதான் பெண்ணுக்கு பிரக்ஞை வந்தது. மேலான அறிவிலிருந்து இழுக்கப்பட்டாள் என்போமா? இப்படிப்பட்ட தெய்வத்தன்மை பொருந்திய அன்பில், பூர்ணபக்தியில் அன்பைச் செலுத்துகிறவரும் செலுத்தப்படுகிறவரும் ஒன்றாகிக் கலக்கிறார்கள். "நானே அவன்"; "நானே நீயும்." இதுதான் மூன்றாவ

தான உன்னத நிலைமை. இதற்கு மேலே இந்த வார்த்தைகளும் கிளம்பமுடியாத நிலையுண்டு.

மதப்பயிற்சியில் இரண்டாவது படியிலுள்ளதான "நானே உனக்கடிமை" என்ற நிலையைப் பின்வரும் கதை விளக்கும். ஒரு உத்தமமான முனிவர் சிறுவயதிலேயே ஒரு பொதுக்காரியத்தில் ஊழியம் செய்துகொண்டிருந்தார். இவரது கடமை ஜனங்களுக்குப் பொருளும் உணவும் அளந்து கொடுக்கவேண்டியது. இவரது எஜமானின் கட்டளைப்படி சில ஏழைகளை இவரிடம் அழைத்து வந்தனர். தானியம் அளந்து கொடுக்கும்போது ஒன்று இரண்டு என்று அளந்துகொண்டே போகையில் பதின்மூன்ருவது அளவு வந்தது. அந்தப் பாஷையில் தீரா என்ற வார்த்தைக்கு இரண்டு பொருள்கள் உண்டு. பதின்மூன்று என்பது ஒருபொருள். மற்ருெருபொருள் "நானே உனக்கடிமை" என்பதாகும். கடவுளின் ஒரு பாகமே நான். கடவுளின் அம்சமே நான் என்பதாகும். பன்னிரண்டு என்று எண்ணிவிட்டு தீரா என்று கூறவரும்போது தெய்வீக நினைவுகளெல்லாம் இவரிடம் குவிந்து வந்து சேர்ந்தன. தன் சரீரமும் மற்றெல்லாமும் கடவுளுக்கே அர்ப்பணம் செய்துவிட்டார். ஆத்மாவிடமே லயித்துவிட்டார். இந்த உன்னத நிலையில் இந்தப் பதத்தைக் கூறிக்கொண்டே மெய்ம்மறந்து தீரா தீரா என்றே ஜனங்களிடம் தானியங்களை அளந்து கொடுத்துக்கொண்டே வந்தார். முடிவில் இப்படிக் கூறியபடியே சமாதி நிலையாகிற பேரானந்த நிலையில் முழுகிக் கீழே விழுந்தார். இதனால் தெரிவதென்னவெனில், அடிப்படியில் நிற்கும் ஜனங்களும் தமது சொற்படி உறுதியாக

நின்றூர்களானுல் மேலான நிலைக்குக் கிளம்பமுடியும். சிரத்தையும் ஊக்கமும் வேண்டும், மதப்பயிற்சியென்பதைப் பரிகாசமாகப் பாவிக்கலாகாது, கடவுள் கண்களில் மண்ணைத்தூவ எண்ணக்கூடாது. கடவுளிடம் ஒன்று கூறிவிட்டு பிறகு அதைச் செய்யாதொழியக்கூடாது. ஒருதடவை கோவிலில் நின்று "நான் உனக்கு அடிமை" என்று கூறுகிறவர்கள் உணர்ச்சியினுல் அறியட்டும். அந்த "நான் உனக்கடிமை" என்ற நிலையில் நிற்கட்டும்; அதை அனுபவத்தில் அறியட்டும். அது தான் உண்மையான மதம். உலகிலுள்ள பல மதங்களையும் இந்த மூன்று பிரிவுகளுக்குள் அடக்கலாம். "நான் அவனுக்குச் சொந்தம்". "நான் உனக்கு அடிமை". "நானே அவன் அல்லது சிவோகம்" ரூபங்களைப்பற்றிய வரையில் "நான் உனக்கடிமை" என்ற இரண்டாவது நிலை முதல் நிலையைக் காட்டிலும் உயர்ந்தது. "நானே அவன்" என்ற மூன்ருவது நிலை எல்லாவற்றுள்ளும் உயர்ந்தது. இந்த மூன்றனுள் எந்த உருவத்தின் மூலமாகவும் நாம் உண்மையான மதப்பயிற்சியைச் செலுத்தலாம். ஹிந்துமத தத்துவத்தின்படி முதல் நிலையில் உள்ள மதக்கொள்கையில் ஒருவன் மதப்பயிற்சியை அனுபவித்தானுல் இப்பிறவியிலோ அல்லது மறு பிறவியிலோ உயர்ந்த மதக்கொள்கைக்கு எழும்புகிருன். அவன் இரண்டாவது நிலைக்குக் கிளம்புவான். இந்த இரண்டாவது நிலையில் உண்மையான மதப்பயிற்சியை அப்பியசித்தால், இப்பிறவியிலேனும் அல்லது மறு பிறவியிலேனும் படிப்படியாக அடுத்த உயர்பதவியாகிய "நானே அவன்", "நானே நீ" என்ற நிலைக்குக் கிளம்புவான். இந்த நிலைக்குக் கிளம்பியதும்

வேறு பிறவியே கிடையாது. மனிதன் இந்த நிலையில் முக்தனாகிறான்; விடுபடுகிறான்; சுதந்தரனாகிறான். மனிதனே கடவுள். முடிவான நோக்கத்தில் சேர்ந்துகொண்டான். ஓம்.

---

## எ-வது, கிருஷ்ண பரமாத்மா.

---

கோபிகாஸ்திரீகளது வீட்டில் புகுந்து வெண்ணெயைத் திருடிக்கொண்ட பிறகு பாலகிருஷ்ணன் கன்றுகளது உடலில் வெண்ணெயைப் பூசிவிட்டுப் போய்விடுவான். பிறகு கிருஷ்ணன் குழந்தையாகவே ஒன்றுமறியாதவனாகக் கருதப்படுகிறான். கன்றுகள் கஷ்டப்படுகின்றன. குற்றங் கபடமறியாத திருடன் தப்புகிறான். ஜீவர்களுக்குள்ளெல்லாம் அடங்கிக்கிடக்கும் பரமாத்ம புருஷன் தன் இஷ்டப்படி செய்கைகளை நடத்துகிறான். உண்மையில் அந்த ஜாலவித்தைக்காரன் மாயாவிராமனே. ஒவ்வொன்றையும் நடைபெறச் செய்கிறான்; ஆனால் தனது விசித்திர மாயையால் பொய்யான அகங்காரத்தைக் காட்டிக்கொடுத்துவிடுகிறான். அந்த வெண்ணெய் தின்னும் கிருஷ்ணன் சாதுவானாலும் சரி, கர்வியானாலும் சரியே, எல்லாம் ஒன்றுதான். அந்த இராமனே உன்னிடமுள்ள ஆத்மா. எது இருக்கின்றதென நினைக்கிறாயோ அதெல்லாம் உன்னிடமே விளங்குகின்றன. தனியே நிற்கின்ற இந்தச் சிறிய உடலில் காவல் போடப்பட்டவன் நீயல்ல; குற்றஞ்சாட்டப்பட்ட பொய்யான அகங்காரம் நீயல்ல. நீ எளிய சிறு துளியல்ல; கம்பீரமான மகத்தான சமுத்திரமே நீயாவாய்.

இதுவரையில் ஸ்வாமி இராமதீர்த்தரது அத்வைத ரசம் ததும்பப்பெற்ற மொழிகளைக் கூடியவரையில் ஸ்வாமிகளது மொழிகளாலேயே கூறினோம். பல இடங்களில் ஸ்வாமிகள் தம்மைப்பற்றிக் கூறும்போது 'நான்' என்று கூறாமல் 'ராமன்' என்றே மூன்றாமவராகப் பாவித்து உபந்யசித்திருப்பதைக் கவனித்திருக்கலாம். எப்போதும் தம்மை ஆத்ம சொரூபத்திலேயே லயிக்குமாறு செய்து கொண்டுவிடுவார். மேலும், அடிக்கடி அந்நியருக்கு உபந்நியஸிக்கும் மனிதனுக்குத் தெளிவாகக் கூறிவரும்போது திடீரென ஆத்மநிலைக்கு எழும்பி ஜோதிமயமாக நின்று தாம் கூறுவது இன்னதென்றே அறியாதவர்போலாகிவிடுவார். அதனால், புத்தியினால் மாத்திரம் கிரகிக்க விரும்பும் சில அந்நியருக்குத் தெளிவுபடாமல் உபந்நியாச மத்தியில் வீட்டிற்குப் போய்விடுவதுமுண்டு, ஆனால், அத்வைத சாஸ்திரம் அறிந்த ஒருவருக்கு இவ்வார்த்தைகள் ருசியுள்ளவைகளாகவேயிருக்கும். இவ்வளவு திடங்கொண்ட ஒரு மகா புருஷர் எவ்விதமான ஆபத்துக்களையும் இலேசாகத் தாங்கவல்ல சக்திபொருந்தியவராயிருப்பார். இப்படிப்பட்ட திடம்கொண்ட ஸ்ரீ இராமதீர்த்த ஸ்வாமிகள் இமாசலப் பிரதேசங்களில் சஞ்சாரம் செய்தபோது தமக்கு நேர்ந்த அனுபவங்களைபபற்றியும் கூறியிருக்கிறார். ஸ்ரீ ராமதீர்த்த ஸ்வாமிகள் கூறிய மொழிகளைப் பின்பற்றியே அவர் செய்திருக்கும் ஹிமாசல யாத்திரையை வர்ணிப்போம்.

கங்கோத்ரி என்ற ஸ்தலத்திலிருந்து தமது ஹிமாசல யாத்திரையை வர்ணித்திருக்கிறார். ஆகா ! இவரது

மனோவலிமை அத்வைத தத்துவ அனுபவம் பெற்றவர்க்கே கிடைக்கக்கூடியதென்று இந்தியர்களாயுள்ளவர்கள் அறிவார்கள். கங்கா நதியின் திருவிளையாடல்களும், இருகரைகளிலும் செங்குத்தாக ஓங்கி வளர்ந்து நிற்கும் தேவதாரு விருட்சங்களின் கம்பீரத் தோற்றமும், எங்கும் நிறைந்துள்ள கற்பாறைகளின் அமைதியும் சேர்ந்து எவ்வித தோற்றமாகுமோ பார்த்தவரே அனுபவிக்கத்தக்க காட்சி. ஜம்னோத்தரியிலிருந்து கங்கோத்ரிக்கு ஜனங்கள் சாதாரணமாக பத்து நாட்களில் மலை மார்க்கமாகப் போவார்கள். ஸ்ரீ ராமதீர்த்தரோ மூன்றே நாட்களில் போய்ச் சேர்ந்தார். குறுக்கு மார்க்கமாகப் பிரயாணம் செய்தார். தனியான பாறையிலும் குகைபோன்ற மார்க்கமாகவும் மூன்று நாள் இரவு பகல் யாத்திரை செய்தார். பயங்கரமான மலைப்பிரதேசங்களின் தனிப் பாட்டைகளில் தனியே மனித உருவம் காண முடியாத நிலையில் இவ்வாறு யாத்திரை செய்தால் இவரது அஞ்சாமையை என்னென்று கூறுவோம்? ஒரு சிறிய குடிசையில் பலநாள் வசித்தனராம். நாள் ஒன்றுக்கு ஒருவேளை மாத்திரமே உணவு கிடைக்கும். அதுவும் கிழங்குகள் தான். அஜீரணத்தின்பேரில் மூன்றுநாள் வரையில் தினம் ஏழுதடவை போக்குக் கண்டது. இப்படிப்பட்ட அசௌக்கிய நிலையில் தானே நான்காம்நாள் காலையில், அதிகாலையில், சுகமாக ஊற்று நீரில் ஸ்நானம் செய்துவிட்டு, ஒரு கௌபீன மாத்திரமே ஆடையாகவும், கால்களுக்கும், தலைக்கும் யாதொன்று மில்லாமலேதானே மிகக் குளிர்ந்த பிரதேசங்களில் மலைமீதேறி சுமேரு பர்வதத்திற்குக் கிளம்பினார். மிகப் பலம் பொருந்திய ஐந்து மலைப்பிரதேச வாசிகள்

சிறந்த போர்வைகளால் மூடிக்கொண்டு அவருடன் சென்றார்களாம். இவரது சகாக்களான நாராயணன், துளாராம் என்பவர்கள் திருப்பி யனுப்பப்பட்டனர். நாலு ஐந்து இடங்களில் யமுனா நதியைக் கடந்து செல்ல நேர்ந்தது. பிறகு ஒரு பெரிய பனிக்கட்டி மலை 45 கஜம் உயரமும் ஒன்றரை பர்லாங்கு நீளமும் கொண்டதாகப் பாதையில் தோன்றியது. இரண்டு பக்கங்களிலும் செங்குத்தான இரு பாறைகள் சுவர்கள் போலக் கிளம்பிக் கட்டுப்படுத்தி நின்றன. இந்தப் பனி சூழ்ந்த—பனிக்கட்டி நிறைந்த—குளிர்ந்த தேசத்தில் கௌபீன தாரியாக மாத்திரம் மேற்குத்திக்கில் இருந்த மலைமீது ஏறிப்போகத் துணிந்தார். முட்கள் நிறைந்த ரோஜாச்செடிகளையே பிடித்துக்கொண்டு ஏற நேர்ந்தது. மலைவாசிகளும் கூடவே செல்கின்றனர். பல தடவைகளில் இறப்பது நிச்சயமென்றே தோன்றிற்றும். மலைப் பள்ளங்கள் பல குளிர்ந்த பனி நிறைந்து தவறியவர்களுக்குத் தயாராக நிற்கும் பிணக்குழிபோல் விளங்கின. கீழே யமுனா நதியின் சப்தம் பயங்கரத்தை விளைவிக்கும் சிறிய சூல்களாகக் காதில் விழுந்தன. இப்படியே மரணத்தின் வாயிலேயே சென்றுகொண் டிருந்தோம். இப்படியே சுற்றிவந்து பனிக்கட்டி மலையைத் தாண்டிச் சென்றோம். பிறகு யமுனா நதியைவிட்டு செங்குத்தானதோர் மலையை ஏறினார்கள். மார்க்கமெதுவுமே காணப்படவில்லையாம். காடுகளுக்கு மத்தியில் செல்ல நேர்ந்தது. பல இடங்களில் ஸ்ரீ ராமதீர்த்தரது சரீரம் கிறப்பட்டது. இப்படியே ஒரு மணி நேரம் அவஸ்தைப் பட்டனர். பிறகு சமவெளியைக் கண்டார்கள். இங்கே வாசனைகள் வீசும செடிகொடிகள் நிறைந்திருந்தன.

மலையேறுவதற்குள் பின்தொடர்ந்து சென்ற மலைவாசிகள் களைத்து மூர்ச்சித்துப்போயினர். ஸ்ரீ ராமதீர்த்தருக்கும் இது மிகக் கடுமையாக இருந்ததாம். செங்குத்தான பாறைகளில் சறுக்கி விழக்கூடிய பாதைகளின் மூலமாகப் போகவேண்டுமானால் யாருக்குத்தான் கஷ்டமிராது. ஆனால், அழகிய காட்சிகளே நிரம்பியிருந்தன. ஐரோப்பிய தோட்டக்காரர்கள் இந்தப் பிரதேசங்களிலிருந்துதான் புஷ்ப விதைகள் எடுத்துச் செல்வார்கள். ஆனால், மற்ற இடங்களில் அவைகளுக்கு வாசனையுண்டாவதில்லை. அழகு மாத்திரமிருக்கும். உடம்பு சிக்குடன் ஸ்நானம் செய்துவிட்டுக் கிளம்பிய இராமதீர்த்தருக்கு இந்த யாத்திரையின் பிறகு உடம்பு சௌகர்யமாகிவிட்டதாம். மலைவாசிகள் கூட இவருக்குமுன் வேகமாகப் போக முடியவில்லையாம். அவர்கள் பசியால் வருந்த நேரிட்டது. இதற்கு இவர்கள் மழைவிழும் பிரதேசங்களுக்கு மேலேகிளம்பி எப்போதும் பனிசூழ்ந்து நிற்கக்கூடிய இடத்தை யடைந்தார்கள். மிகவும் உன்னத மலைகளில் மழை பொழிய இடமில்லை. மேக மண்டலத்திற்குமேல் மலைகள் கிளம்பியிருக்கும். முதனாள் பக்குவம் செய்யப்பட்ட கிழங்குகளையே உணவாகக் கொண்டார்களாம். அங்கு விழுந்து உறைந்து கிடக்கும் பனியே ஜலமாக உபயோகப்பட்டது. மிகக் குளிர்ந்த ஆகாயத்தில் ஜலமே பனியாகி உறைந்து போகும் இடத்தில் முதனாள் பக்குவம் செய்த உணவு என்றால் யோசித்துப்பாருங்கள். இப்படியும் களைக்காமல் இன்னும் மேலே சென்றார்கள். ஒருவன் களைப்பாகவே விழுந்துவிட்டான். இன்னும் சற்று தூரம் சென்றதும் மற்றொருவனும் விழுந்தான். மூன்றாமவனுக்கு மூக்கால் இரத்

தம் சிந்தியது. இப்படியே நால்வர் களைத்துப்போயும் கூட விடாமல் இராமதீர்த்தர் மற்றொருவரை மாத்திரம் உற்சாக மூட்டிக்கொண்டு பனிக்கட்டியில் பாதைகள் வெட்டமுடியாமல் தவித்துக்கொண்டு மெள்ள மெள்ள ஊன்றுகோல் பலத்துடன் மலைபுச்சிக்குச் சென்றனர். அங்கே விசாலமான சமபூமி தெரியவந்தது. எங்குப் பார்த்தாலும் பளபளவென்று மின்னுகின்ற பனித்துளி கள். ஆகா! இங்கே பாற்கடலுக்கு வந்து சேர்ந்தது போலத் தோன்றியதாம். இங்கே ஓடியாடித் திரிந்த பிறகு தனியே இராமதீர்த்தர் கம்பளியை பனிக்கட்டி யின்மீது விரித்துக்கொண்டு உட்கார்ந்தார். என்ன காந்தி யுடன் விளங்கினார் என்று சொல்லவும முடியுமோ? தனியே ஆநந்தமயமாக யாதொரு துணையுமின்றி உட் கார்ந்தார். சூரியனது பிரகாசம் பனித்துளிகளின்மீது வீசியபோது பொன்மயமாக்கிவிட்டது. பொன்மலை யென்று நல்ல பெயர் வைத்தார்கள். இந்த இடத்தின் ஆநந்தத்தை யனுபவிக்கும்போது இராமதீர்த்தர் கூறு வது கவனிக்கத்தக்கது:—"ஓ மானிடர்களே! ஸ்திரீக ளின் முகவிலாசத்திலும், மின்னுகின்ற ஆபரணத்திலும், கம்பீரமான மாளிகைகளிலும் என்ன சுகமுண்டு; இந்த சுமேருவின் மேலான வசீகர காட்சியில் இருக்கும் ஆநந் தத்தில் சிறிதும் அவற்றில் காணப்படா. ஆனால், ஆத்ம ஞானமடைந்தீரானால் எணக்கி லடங்காத சுமேருக்களை உங்களிடமே அனுபவிப்பீர்கள்." இந்த யாத்திரையில் மற்றொரு உண்மையையும் படிப்பவர்கள் அறியலாம். ஸ்ரீ ராமதீர்த்தர் தம்மைப் பின்தொடரும் ஐவர்—பலம் பொருந்தியவர்கள்—களைத்துப்போகத் தாம் மட்டில் உன்னத பர்வதத்தின்மீது ஏறினார். இதைப்போல்

உண்மையான ஆத்மபல முள்ளவர்கள் பஞ்சேந்திரியங்களின் சேஷ்டைகளையும் களைக்கச்செய்து ஆநந்தத்தையடையலாம். மாயா பந்தங்கள் பிறகு ஏற்படாது. இங்கே மாயையைப்பற்றி இராமதீர்த்தர் கூறுவதைச் சொல்வது பொருந்தும்.

---

## அ-வது, மாயை.

---

பந்தம் சுழற்றுதல் என்று ஒரு வேடிக்கையுண்டு. கொழுந்துவிட்டெரியும் ஜ்வாலை ஜோதி வட்டமாகத் தோன்றும். ஒரு சமயம் வட்டமாகவும், ஒருசமயம் வேறு உருவத்துடனும், இப்படிப் பலவிதமாகத் தோன்றும். இந்தத் தோற்றங்கள் ஜ்வாலைக்குச் சொந்தமோ? பந்தத்தினின்றும் தோற்றங்கள் வெளியாகின்றனவோ? அல்லது இவற்றிற்குச் சம்பந்தமில்லாமல் வேறு எங்கிருந்தாவது தோன்றுகிறதோ? பந்தத்தைச் சுழற்றுவிட்டால் இவ்வுருவங்கள் காணப்படுகின்றனவோ? உருவங்கள் அச்சமயம் வேறெங்கேயாவது ஓடிவிட்டனவோ? இவற்றிற் கெல்லாம் பதிலும் கூறவேண்டுமோ? பந்தம் இயங்கும்போது பல உருவங்கள் தோன்றுகின்றன. சலனம் நின்றுபோனால் அவ்வுருவங்களின் அடையாளம் கூட இல்லை. மிக்கவேகமாகச் சுழலும்போது தென்பட்ட உருவங்கள் உண்மையில் வட்டங்களும் கோடுகளுமாக இருந்தனவோ? இல்லை, இல்லை. இதேமாதிரிதான் பிரம்மாநுபவமும், பந்தம் சலிக்காமலிருக்கும்போது இருக்

தது போல நாமரூபங்களாகிய இந்த ஜகத்தின் அடை யாளமின்றி நிற்கும். நாம ரூபங்கள் தோன்றும்போது கூட ஜுவாலையிடம் தோன்றிய உருவங்களைப்போல் மாயா சம்பந்தமானதேயன்றி உண்மையல்ல; சத்தியப் பொரு ளல்ல. நிஷ்டையானது, உயர்ந்த நிலையானது இவற்றால் பாதிக்கப்படாதபடி நிற்கின்றது. தோற்றங்களிலெல் லாம் ஏகத்துவமான ஜோதி எப்போது மிருந்து கொண்டே யிருக்கிறது. பந்தம் சுழலும்போது தோன்றிய உருவங்களுக்குப் பந்தத்தின் ஜுவாலையே ஆதாரமா யிருப்பதுடன் எப்போதும் இருந்துகொண்டும் இருக்க வில்லையா? இந்தத் தோற்றங்கள் மாத்திரம் ஜுவாலையிட மில்லை. அதே மாதிரி நாம ரூபங்களிலெல்லாம் ஆத்மா வியாபகம்; ஆத்மாவில் நாமரூபங்களில்லை. பந்தத்தி னின்று தோன்றிய தோற்றங்களுக்குக் காரணம் சலனம். அதேமாதிரி நாம ரூபத் தோற்றங்களுக்குக் காரணம் மாயா சக்தியே. சக்தி என்பது தனியே எங்கும் இருப்ப தல்ல. அது ஆவிர்ப்பத்திருக்கலாம்; அல்லது அடங் கியதாக இருக்கலாம். தனியே இருக்க முடியாது. இந்த சக்தியானது தனிமனிதரிடம் பிரக்ஞை என்றும்; சலனம் என்றும்; உழைப்பு என்றும், மனஸ் என்றும் தோன்றுகிறது. மனது இயங்குதலும் தோன்றுகிற ஜகத்தும் ஒரே வஸ்துவின் இருபக்கங்கள் போல வென்றே கூறலாம். மனது அடங்குவதும் பிரம்ம நிலையும் ஒரு நிலை. அழுக்குகளாகிய பாசங்கள் நீங்கிய மனது சலிப்பதில்லை; உறுதிப்படுகிறது. பூர்ணமான உறுதியை அடைந்ததும் மனது பிரம்மத்துடன் ஒன்று கிறது. இவ்வித சாட்சாத்கார தரிசனத்தால் மாயை ஜெயிக்கப்படுகிறது. இதனால் உலகமே சுவர்க்கமாக

மாற்றப்பட்டதாகிறது. இழந்துபோன ஆநந்தம் திரும்பவும் அடையப்படுகிறது. எங்கு பார்த்தாலும் அழகு வெளியாகின்றது. தான் தனி யென்ற உணர்ச்சி நசித்த பிறகு கவலைகளெல்லாம் உன்னதமான ஆழ்ந்த சத்தியிலும் ஆநந்தத்திலும் எப்போதும் ஸ்திரமாகக் கலந்து கொள்கின்றன.

இராமனுடைய சன்னிதானத்தில் ஒரு பையன் அழகிய ரோஜா புஷ்பத்தைப் பறித்து வாசனை பார்ப்பதற்காக மூக்கினிடம் கொண்டுசென்றான். மூக்கிற்குச் சமீபம் கொண்டுபோனதும் ஒரு வண்டு மூக்கு நுனியில் கொட்டிவிட்டது, பையன் வலி பொறுக்காது கதறினான். ரோஜா மலர் கீழே விழுந்தது. ஒவ்வொரு ரோஜாவின் இதழுக்குள்ளும் வண்டு இருக்கின்றதோ? நிச்சயமாகவே யிருக்கும். இந்திரிய சுகங்களாகிய ரோஜா மலர்களுக்குள் துக்கமாகிய வண்டுகள் ஒளிந்து கொண்டிருக்கும். கட்டுப்படுத்தப் படாமல் விடப்பட்ட ஆசைகளெல்லாம் தீராத வருத்தத்தாலேயே தண்டிக்கப்படவேண்டும். பயங்கரமான நிலையில் ஒதுக்கப்பட்ட எளியோர்களே! உங்கள் ஆத்மாவை மறக்காதீர்கள். கம்பீரமாகத் தோன்றுகிற ரோஜா மலரைப் பறித்துவிடாதீர்கள்; முழு மலர்ச்சி பெற்ற ரோஜா உங்கள் அம்சமேயாகும்; அதன் சுகந்தமும் உங்களது சுகந்தமாகும். அரசர் ஆட்சி செலுத்துகிறார்; அவரது ஆணைகள் உங்கள் ஆணைகளே. அழகு விளங்குகிறது; அதன் வசீகர சக்தியெல்லாம் உங்களதேயாம். கிருஷ்ண பரமாத்மன் நூறு கோபிகளுடன் ஒரே காலத்தில் லீலை செய்யவில்லை; அந்தக் கிருஷ்ணன் நீங்களே.

அப்படி யிருக்கும்போது எதற்காக வீணில் ஆசை கொள்ளவேண்டும்? கடவுளுடன் நீங்கள் ஒன்றென் பதை உணருங்கள்.

உன்னத நிலையிலிருந்து இராமன் உங்களுக்குப் பகி ரங்கமாகக் கூறுகிறான். உங்கள் மனமென்னும் சிறு எண்ணத்திற்குள் உங்களை அடக்கிவிடாதீர்கள்; எழு மின், எழுந்திருங்கள். உங்கள் நித்திரையை உதறி யெறியுங்கள். இவ்வுலகப் பற்றாகிய சொப்பனம் நீங் கட்டும். ஆத்ம பிரக்ஞையை அடையுங்கள். எல்லா துக்கங்களும் ஒழிந்துபோகும். ஆநந்தம் உற்பத்தி யாகுமிடமே நீங்களல்லவா? எதுவும் உங்களை அழிக்க வல்லதல்ல இராப்பகலாக இடைவிடாத ஊக்கத்துட னும் விடாமுயற்சியுடனும் சுகத்தைத் தேடியலைவதினால் என்னவாகிறது பாருங்கள்; தவறு என்பது தவறாமலே கிடைக்கின்றது. இந்திரியங்களின் மூலமாக, இந்திரிய விஷயங்களில் சுகத்தைத் தேடாதீர்கள்; ஏமாந்து போவீர்கள் என்பது நிச்சயம், நிச்சயம். வெளியே தேடுவதை விட்டொழியுங்கள். அழியாத் தன்மை யுடன் கூடிய சமுத்திரம் உங்களுக்குள்ளேயே இருக் கின்றது. கருணைப் பிரவாகம் என்ற வெளியில் முழு குங்கள். மெய்ம்மறந்துபோங்கள். மனதும் உலக மும் சமாதி நிலையில் கரைந்துவிடட்டும். சமஷ்டியி னின்றும் பிரிந்து சிதறுண்டிருக்கும் அழியக்கூடிய உடலிடம் ஏன் அவ்வளவு பற்று உங்களுக்கு? உண்மைச் சொரூபத்தில் தங்கி நில்லுங்கள்! அங்குப் புகழ்ச்சியும் இகழ்ச்சியும் கிடையா. சிற்றின்பங்களும் துக்கங் களும் அங்கே வந்து சேஷ்டையை உண்டாக்கா. கடவு

நுக்கு இடம் கொடுத்துவிட்டுச் சகல உரிமைகளையும் ழுந்துவிடுங்கள். மனித சரீரமென்ற பலஹீனத் ன்மை வாய்ந்த கப்பலைச் செலுத்திவரும் பாய் ரத்தை பக்தி என்ற புசல்காற்று ஒடித்துவிட்டுக் கப்பலைச் மாதி என்ற சமுத்திரத்தினிடம் ஆழ்ந்துவிடும்படி செய்துவிடட்டும். பாரிலை வெறிகொண்டு முழுகுகிறவன் சுகமடைவான். கடவுளைப்பற்றிப் பிடிக்கும் பைத்தியங் கொண்டவன் ஆசிர்வதிக்கப்படுவான். ஆத்மாநந்த சமாதி யினிடம் முழுகி உலகிலிருந்து நீங்கியவன் வணங்கப்பெறு ான். இராமா, இராமா, ஓம்.

## கூ-வது, சமாதி நிலை கலையாத குடும்ப வாழ்க்கை.

"குடும்ப வாழ்க்கையி லுள்ளவன் ஆத்மஞான மடையலாமா ?" என்று கேட்டுவிடுகிறார்கள். இதற்குப் பதில் "ஒரு வாளால் எதிரியைக் கொல்லலாமா"? என்று கேட்கிறோம். வாளை உபயோகிப்பதில் இருக்கிறது. அது போலவே குடும்பப்பற்றை உபயோகிக்கும்விதத்தி லிருக் கிறது. குடும்பவாழ்க்கையில் கஷ்டங்களிருந்தால் அவற்றை நிவர்த்திசெய்ய வழிதேடவேண்டும். எல்லோருடைய நோக்கமும் ஆத்மஞான மடைவதுதான். சூரியனைச் சுற்றி பூமி ஓடியே தீரவேண்டியிருக்கிறது. சந்திரனோ பூமியை விடவில்லை. என்ன செய்வது? பூமியானது சந்திரனையும் சேர்த்துக்கொண்டு அவற்றுடன்கூட சூரி

பனைச் சுற்ற முடியும். சூரியர்களுக்கெல்லாம் சூரியனாக விளங்கும் சக்தியினிடம் நீ இழுக்கப்பட விரும்பினால் உன்னுடைய கூட்டாளியையும் அழைத்துச் செல். ஜோதியைச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிரு. ஒரு சிறிய சரீரத்திற்கு ஜோதி விளங்குவது மாத்திரமின்றி இரண்டு அல்லது அதிகம் சரீரங்களுக்கும் ஜோதி விளங்கும். ஒரு சரீரத்தின் மூலமாக வேலை செய்வதற்குப் பதில் பல சரீரங்கள் மூலமாகவும் வேலை நடக்கும். அவைகளும் உனக்குச் சொந்தமே, உனக்கு ஒரு சரீரம் சொந்தமாவதுபோலக் கடவுளிடம் இந்த எல்லாச் சரீரங்களும் விளங்குகின்றனவல்லவா? இந்த சமஷ்டி சரீரம் கடவுளின் பெருமையை விளக்கும். ஆதலால், கடவுளுடன் நீ ஒன்று என்று அறிவதற்கு முன் உன் குடும்பத்துடன் நீ ஒன்று என அறிந்துகொள். மனைவி மக்களுடன் தான் ஒன்று என்று அறிய முடியாதவன் எப்படி சர்வமும் ஒன்று என அறிய முடியும்?

வேதாந்தம் இப்படித் தான் கூறுகிறது; இது தான் இயற்கை. உன்னுடன் சம்பந்தப்பட்டவர்களிடம் ஆரம்பம் செய்யவேண்டும். சமீபத்தில் உனக்கு அருமையாக இருக்கப்பட்டவரிடம் நீ கலந்துகொள்; ஒன்றாகிவிடு. உன் காரியமும் அவர்கள் காரியமும் ஒன்றாகட்டும். சரீரங்களெல்லாம் ஒன்றுபடட்டும். ஒரே நதியின் பிரவாகம்போலாகி ஓடிக்கொண்டு போகட்டும். அனுபவ மார்க்கத்தில் பிரவேசிக்கட்டும். பிறகு மற்றக் குடும்பங்களும் சேரட்டும். இப்படியே படிப்படியாக விர்த்தியாகட்டும். கடவுளிடம் பக்தியைச் செலுத்தி கடவுள் நிலையை அடையவேண்டும். தன் சரீர முழுவ

தும் அன்பு மயமாகவே நிறைந்திருந்தால் மாத்திரம் கடவுளைப்பற்றிய அனுபவம் கிடைக்குமென்று வேதாந் தம் கூறுகின்றது. ஜகத் முழுதும் தன் உடலெனப் பாவிக்கவேண்டும். ஆத்மஞானத்திற்கு இது முதற் படியாக வேண்டியது. பிறகு மேலான நிலைக்கு எழும்ப வேண்டும்.

இரண்டு விதமான மயக்கங்களை நீக்கவேண்டும். பிறர் வேறு, உலகம் வேறு, தான் வேறு என்ற எண்ணம் நீங்கி உலகம் நமது சரீரம் என்ற உணர்ச்சி பெறவேண் டும். பிறகு வெளி மாயையாகிய நாமரூபங்களை நீக்க வேண்டும். உலகப் பற்றுள்ள மனிதரிடம் இருவித மயக்கங்களும் தீரவேண்டும். முதலில் ஒவ்வொருவ ரிடம் தான் வசிப்பதாக உணரவேண்டும்; மனிதவர்க்கம் மாத்திரமல்ல; மரஞ் செடி வர்க்கங்கள், நதிகள், புழுக் கள் முதலியவற்றுடன் தான் ஒன்று என்ற எண்ணம் வேண்டும். அதை உணரவேண்டும். இது அனுபவ மார்க்கத்தில் ஒரு நிலை. இம்மனிதன்தான் ஆரம்பத் தில் தன் மனைவி மக்களுடன் தான் ஒன்று என்பதை அனுபவித்தவன். முழு உலகத்துடனும் தான் ஒன்று என்பதை யறிந்தவுடன் ஒருநிலையை யடைகிறான். அடுத்தபடியாக எந்த நிலையென்றால், வெளித் தோற்றங்க ளும் நாமங்களும் மறையும்போது உண்டாகும் நிலை. உலகமே மாயை யென்று தள்ளப்படுகிறது. எல்லாம் ஆத்மமயம்.

குடும்பமெல்லாம், தேசமெல்லாம், உலக முழு தும் ஒன்று என உணர்வது கஷ்டம்போல் தோன்றும்.

ஆனால், உண்மையில் அவ்வளவு கஷ்டமல்ல. ஆரம் பித்துவிடுவதுதான் கஷ்டம்; ஆனால், ஆரம்பம் செய்துவிட்டால் சிறிது காலத்திற்குள் அபிவிர்த்தி வேகமாகப் பெருகிவிடும். மற்றொரு மனிதனிடம் ஒற் றுமை பாவனையை உண்டாக்க முடிந்துவிட்டால், மற் றொருவருடன் கலந்துகொள்ள முடியுமானால் எல்லா ருடனும் ஒன்று என்பதைச் சீக்கிரமே உணர்ந்துவிடு கிறான். அனுபவத்தில் நாம் அறிவது ஒன்றுண்டு. உல கில் உள்ள அன்பெல்லாம் இயற்கையாகவே நம்முள் ஒருவித உண்மையைத் தெளிவிக்கின்றது. நமது அன் பிற்குப் பாத்திரமாக உள்ளது வெளியில் உள்ள எதுவும் அல்ல என்று தெரியவரும். வெளியில் தோன்றும் நிறத்திலல்ல, உருவத்திலல்ல, அடையாளங்களிலல்ல. உள்ளே யிருக்கும் ஜீவனிடத்தில்தான் அன்பிற்கு ஆதாரமாயுள்ள வஸ்து இருக்கிறது. வரவர ஆதாரமா யுள்ளது எதுவோ அதுவேயாம், ஒவ்வொருவரும் தம் அனுபவத்திற்குத் தகுந்தபடி இந்த உண்மையில் சிறிது பாகத்தைக் கூறலாம். நமக்கு வயது ஏறஏற நமது அன்பு செலுத்தப்படுமிடம் வரவா மிருதுவாகவும் பிடி படாததாகவும் போகின்றது. வரவர நுட்பமாகப் போகின்றது. உலகிலுள்ளவர்க ளெல்லோரும் ஏறக் குறைய இவ்விஷயத்தைக் கவனித்திருக்கிறார்களல்லவா? எல்லோரும் இதைக் கவனித்தோ, அல்லது அனுப வித்தோ இருக்கிறார்கள். அன்பைச் செலுத்திய இடத் தில் வெளியேயுள்ள குற்றங்குறைகளைப் பார்க்கிறதில்லை; சரீரத்தில் குற்றங் குறைகள் தென்படுவதில்லை. அவ லட்சணங்களைப் பற்றியவரையில் குருடாகிவிடுகிறோம். அழகையே கவனிக்கிறோம். இவ்விதம் செலுத்துகிற

அன்பில் செலுத்தப்படும் மனிதரிடம் உண்மையான அன்பு இருந்தால் நமது இருதயம் உருகிப்போகிறது; நன்கு இழுக்கப்பட்டுவிடுகிறது. அப்போது நமது அன்புக்குப் பாத்திரமான இடம் நுட்பமாகும் காலம் வருகிறது. ஜடப் பொருள்களைக்காட்டிலும் மிருதுத் தன்மை கொண்டது வெளித் தோற்றத்திலடங்கிய நிறம் முதலியவைகளுக்குச் சம்பந்தமில்லை. இது ஒரு படி முன்னேறிய நிலைதான். இன்னும் கொஞ்சம் முன் னேறுங்கள். ஸ்தூல சரீரங்களைத் தாண்டி சூட்சும உணர்ச்சிகளிடம் வந்து சேர்ந்தீர்கள். இதையும் தாண்டி உயர்ந்த நிலையுண்டு. அங்குப் பிரீதிக்குப் பாத்திரமான வஸ்து உணர்ச்சியிலாவது, மனோ எழுச்சியிலாவது, பரிசுத்தத் தன்மையிலாவது வசிக்கவில்லை. உண்மை யில் உள்ளேயிருக்கும் கடவுள் அல்லது ஆத்மன் என்ற நிலையைப் பார்க்கிறோம். அதனிடம் அன்பைச் செலுத்த முடிந்தால் உண்மையில் ஆத்மாவையே பார்க் கிறோம். இவ்விதம் பொருள்களைக் காணுந்தோறும் அவற்றிலுள்ள உண்மையான தெய்வத்தன்மையைப் பார்க்க முடிந்தால், அந்த நிலைக்கு மனிதன் கிளம்பிவிட் டால், உலகத்துடன் தான் ஒன்று என்ற நிலையை அறி வது இலகுவாகும். இதுவே கிறிஸ்துவின் நிலை. [அமெ ரிக்காவில் கிறிஸ்துவர்களுக்குச் செய்த உபந்யாசமாத லால் கிறிஸ்துவின் நிலையென்றார். பௌத்தர்களிடம் கூறும்போது புத்தரது நிலை யென்னலாம்.] இந்த நிலை யில் சிறிது காலம் நின்ற பிறகு அதற்கும் மேலாக உள்ள நிலை யென்னவெனில், கடவுளுடன் கலப்பதுதான். சமாதி நிலையில் இருப்போமானால், ஒன்றுபட்ட கலந்த நிலையில் நிற்போமானால், அதுவே கடவுளது நிலையாகும்.

அதை நிர்வாணம் அல்லது சமாதி யென்கிறோம். அந் நிலையில் மனதின் சலனமென்பதில்லை. சலசலப்புச் சிறிதும் கிடையாது; யாதொரு சேஷ்டையு மில்லை.

இந்த நிலைக்குக் கொண்டுவர உலக சம்பந்த விஷயங்களும் பந்துக்களும் எவ்வாறு உதவி செய்யக்கூடும்? ரோமன் காதலிக்குகளைப்போல விக்கிரகங்களின் மூலமாகக் கடவுளை வணங்குகிறவர்கள் இருக்கிறார்கள். இராமன், கிருஷ்ணன் என்ற உருவங்களை ஆராதிப்பவர்கள் இருக்கிறார்கள். அந்த விக்கிரகங்களை ஆராதிப்பது போலக் குழந்தைகளிடமும் தெய்வத் தன்மையைக் கண்டு ஆராதிக்கலாம்; பக்தியுடன் வசிக்கலாம். (தன்னுடைய பந்து என்ற நிலைமையில் பார்த்த பிறகு மேலான நிலைக்கு எழும்பி) தன்னிடம் இன்ன சம்பந்தமென்று கருதாமல் கடவுளாகவே கருதி, எல்லாவித உலகப்பற்றையும் தெறிக்கச் செய்யவேண்டும். தெய்வத்தன்மை யென்ற பந்தம் மாத்திரம் பாக்கியாக நிற்க வேண்டும். தியாகம் என்பது சன்யாசமல்ல; ஆனால், ஒவ்வொன்றையும் தெய்வீகமாக்குதல்தான். குடும்பத் தியாகம் என்றால் குழந்தை முதலியவர்களை விட்டுவிடுதல் அல்ல; ஆனால், குழந்தையைக் கடவுளுக்குச் சமமாகப் பாவிப்பதுதான். ஒவ்வொருவரிடமும் இருக்கும் தெய்வத்தன்மையை நேரில் காணுதல்; இதுதான் தியாகத்துக்கு மார்க்கம் என்று வேதாந்தத்தின் கருத்து. மனைவி மக்களை விட்டுவிடு என்று வேதாந்தம் கூறும் போது அதன் பொருள் விட்டு ஓடுவது அல்ல; மனைவியை மனைவியென்ற சம்பந்தத்தில் உறவாடாதே யென்றும், உண்மையான ஆத்மசொரூபமென்று அறு

பிப்பா யென்றும் அர்த்தமாகும். எதிரியையும் எதிரி ாகக் கருதாதே; சிநேகிதரையும் சிநேகிதர் என்ற றையில் கருதாதே; அவர்களிடமுள்ள தெய்வீகத் ன்மையை மாத்திரம் அறிந்துகொள்.

இவ்விதம் புருஷனும் மனைவியும் ஒருவரையொரு ர் பார்த்துக்கொள்ள முடியுமானால் அவர்களது சம்பந் ம் முழு ஆத்ம சொரூப சம்பந்த முள்ளதாக இருக் ும். ஒருவர்க்கொருவர் சுகத்தை விர்த்தி செய்து கொள்ள உதவும். எங்கே பார்த்தாலும் புருஷன் தன் னைவியின் சுகத்தை விர்த்தி செய்ய விரும்புகிறான் ன்றும், அவள் சுகமாக இருப்பதற்கு வேண்டிய எது ும் கொடுக்கிறான் என்றும் கூறுகிறார்கள். அறிவீனத் ால் ஜனங்கள் தாம் ஒழுங்கான நிலையில் நிற்பதாகவே ருதுகிறார்கள். சரியான மார்க்கம் பிறரைத் திருப்தி செய்வதுதானென்று கருதுகிறார்கள்; இது சரியல்ல. இம்மாதிரி செய்வதால் உங்களையும் மற்றவர்களையும் இழிவடையச் செய்கிறீர்கள். எனக்கு எது சுகமோ அதுவே உனக்கும் சுகமென்பது பிரகிருதி தர்மமாகும். அந்நியருடைய இந்திரியங்களைத் திருப்தி செய்வதால் சுகம் உண்டாகாது. பொறாமையும் பொச்சாப்புமே உண்டாகும். இருவருக்கும் துக்கம்தான்.

'இருவருக்கும் உண்மையில் எது சுகம்?' என்ற மார்க்கத்தை யறியாத குறையால்தான் இந்தப் பயமெல் லாம், துன்பங்களெல்லாம் உண்டாகின்றன. இருவரும் சுகமடைய வேண்டுமானால் இந்தச் சிறியதன்னயம் குடி கொண்ட அகம் என்பதை முன் செலுத்தி நேசருடைய

ண்மையான ஆத்மனை உணருமாறு செய்யவேண்டும். யளவற்ற பலத்தை மனைவியிடம் உண்டாக்கவேண்டும். கவும் ஆழ்ந்த (ஆத்ம) பலம் அங்குப் பிரதிபலிக்க வண்டும். ஒருவர்க்கொருவர் அறிவை விர்த்திசெய்து கொள்ளவேண்டும். உண்மையில் எது சுகம் தருமோ துதையே அதிகம் கொடுக்கவேண்டும்; அவை அறி பும் ஆத்ம சுதந்தரமுமேயாம். இவ்விதம் செய்து கொள்ள முடியாத மனைவியும் புருஷனும் சுகத்தை அனு பவிக்க முடியாது.

[இங்கே ஏசுகிறிஸ்துவின் பெற்றோர்களைப்பற்றிய கதைக்கு விசித்திரமாகப் பொருள் கூறுகிறார். ஏசு கிறிஸ்துவின் தாயார் கன்னிகையென்பது கதை. புருஷ னில்லையாம். புருஷர் சேர்க்கையே இல்லாமல் குழந்தை பிறந்ததாகக் கதை.]

ஏசுகிறிஸ்துவைப் பற்றிய பரிசுத்தமான கர்ப்ப நிலையைப்பற்றி இராமன் கூறும் விபரம் இதுதான்:— கிறிஸ்துவின் தயாராகிய மேரி பரிசுத்தம் பொருந்திய வள்; பக்தி நிறைந்தவள்; தெய்வானுபவம் என்ற நிலை யில் ஒரு வித நிலைக்கு எழும்பியவள்; தெய்வத்தன்மை யுடன் கலந்தவள். ஸெக்கேரியஸ் அல்லது ஜோஸப் என்றவரும் மிகுந்த பரிசுத்தகுணம் நிறைந்த தெய்வீக புருஷன். சர்வமும் கடவுள் மயமென்ற அனுபவம் பெற்றவர். (இவர் மேரி பக்கம் பிறகு நின்று மானத்தை ரட்சித்தவர்). இருவரும் யௌவனப் பிராயத்தில் சரி யான வயதுடன் இருந்தவர்கள். மேரியின் சரீர முழு மையும் தியானத்தில் அமர்ந்தபோது, புருஷனும் அவ்

விதமே தியானத்தில் அமர்ந்தபோது, இருவரும் நிஷ்டா சுகத்தில் கலந்து நிற்கும்போது, முழுகிக் கிடந்தபோது என்று கூறலாம். அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் மேரி கர்ப்பவதியானாள். பிறகு அவ்விதம் எதுவும் நடந்ததாக அவள் நினைப்பில்கூட இல்லை; இராத்திரி நேரத்தில் குழந்தையை அடிக்கடி எழுப்பிப் பாலோ சர்க்கண்டோ கொடுக்கிறார்கள். மறுநாட் காலையில் அக்குழந்தையை நோக்கி "இரவு ஏதேனும் சாப்பிட்டாயா?" என்று கேட்டால், அக்குழந்தை யநேகமாகப் பதில் கூறுவது என்னவெனில்; "எனக்கு ஒன்றும் கிடைக்கவில்லை; நீ எனக்குத் தரவில்லை. எல்லாவற்றையும் அக்காளுக்குக் கொடுத்துவிட்டாய்" என்று கூறிவிடும். இரவில் குழந்தை பாலோ சர்க்கண்டோ சாப்பிட்டது உண்மை; காலையில் நினைப்பே கிடையாது என்பதும் உண்மை. தூங்கும்போது குழந்தையின் மனது பிரக்ஞையுடன் கூடி நிற்கவில்லை. எங்கேயோ போய் நின்றது. அந்நேரம் செய்யும் காரியங்கள் ஞாபகத்தில் இருக்கமுடியாது. அதுபோலவேதான் பரிசுத்த கர்ப்பத்தைப் பற்றிய இராமனது கருத்தும். ஸெக்கேரியஸ் என்பவருக்கோ ஜோஸப் என்பவருக்கோ மேரியென்பவள் கர்ப்பம் தரித்தாள். இருவரும் தெய்வ அருள் என்ற மேலான நிலையில் முழுகிக்கிடந்தபோது உண்டானது. இந்தச் சிறிய சரீரத்தை மறந்து தெய்வ நிலையில் நிற்கும் நிலையது. அப்படிப்பட்ட நிலையில் கர்ப்பவதியானாள். பிறகு குழந்தை யுண்டானதற்குக் காரணம் கேட்டபோது காரணம் கூற முடியவில்லை. கிறிஸ்தவர்கள் கிறிஸ்துவைத் தெய்வ அருள் மூலமாக உண்டான குழந்தை யென்கிறார்ககள். அதாவது,

கடவுள் நிலையில் முழுகிக் கிடக்கும்போது, கடவுள் அறிவில் ஆழ்ந்திருந்தபோது கர்ப்பவதியானாள். அதனால் கடவுள் அவளுக்குப் பிறந்தவர் என்கிறார்கள். பிரகிருதிதர்மம் இக்காலத்தைப்போல்தான் அப்போதும் இருந்தது. ஆனாலும், கிறிஸ்து கடவுளருள் பெற்ற குழந்தையென்றும் கூறிவிடலாம். இவ்விதமே உலகில் நடைபெறவேண்டு மென்பது இராமனது வார்த்தைகள். ஏசுகிறிஸ்துக்கள் உண்டாகலாம். ஹிருதயங்களைப் பரிசுத்தப்படுத்துங்கள். நீழே தள்ளிவிடாதீர்கள். அப்போதுதான் மில்டனைப்போன்ற கவிகளும், ஷேக்ஸ்பியரைப் போன்ற நாடகாசிரியர்களும், கிறிஸ்துவைப்போன்ற பரிசுத்த ஹிருதயம் வாய்ந்தவர்களும் உண்டாகக்கூடும். மனைவி மக்களுடன் சிறிய தன்னய சம்பந்தமான வாழ்க்கையை விட்டு மேலான வாழ்க்கையில் நில்லுங்கள். தெய்வத்தினிடம், தெய்வத்தன்மையில், பரிசுத்தநிலையில், சமஷ்டியுடன் ஒன்றாக உங்களை நிறுத்தக்கூடிய வாழ்க்கையில் நில்லுங்கள். புருஷனும் மனைவியும் இவ்வித தெய்விக எண்ணங்கள் நிறைந்தவராகவும், ஆழ்ந்த சக்தி வாய்ந்தவராகவும், கௌரவ உணர்ச்சிகள நிறைந்தவர்களாகவும் இருந்தார்களானால் அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளும் ஏசுகிறிஸ்துவைப்போன்ற பரிசுத்த குணம் படைத்தவர்களாக இருப்பார்கள்.

இதுவரையில் இராமதீர்த்த ஸ்வாமிகள் அத்வைத தத்துவத்தை விளக்கிக்கூறிய உபந்நியாசங்களில் சிலவற்றைக் கூறினோம். 'எப்போதும் ஆத்மானுபவத்தையும் சமஷ்டி சம்பந்தமான ஜகத்தைக் கடவுளாக ஒற்றுமைப்

படுத்தி மேலான நிலையைப்பார்க்கப் பழகுவதே மானிட வாழ்க்கைக்குப் பயன்' என்பதை அடிக்கடி இடை விடாமல் வற்புறுத்திப் பேசியிருப்பதைக் கவனிக்க லாம். 'உலக சம்பந்தத்தை விடவேண்டிய அவசியமே யில்லை' என்றும், 'ஆனால், ஒருபோதும் உலகப்பற்றை மாத்திரம் வைத்துக்கொள்ளக்கூடாது' என்றும் எடுத் துரைக்கிறார். 'குடும்பவாழ்க்கையை நீக்குவது உண்மை யான தியாகமல்ல' என்றும், 'மனைவி மக்களிடம் சரீர சம்பந்தமான பற்று நீங்கி உள்ளே யிருக்கும் தெய்வத் தன்மை மாத்திரம் மேலோங்கி விளங்குமாறு செய்து கொள்வதே உண்மைத் தியாகம்' என்றும் தெரிவிக்கிறார். 'உலகப் பொருள்களின்மேல் வைக்கும் ஆசையை வர வர உண்மையான வஸ்துவினிடம் படிப்படியாக மாற்றிக் கொண்டே போனால் முடிவில் சர்வ ஜகத்தையும் தாங்கி நிற்கும் ஆதாரமான சத்தியப் பொருளைப்பற்றி அதுவே நாமென்று கண்டு உலகமே என்னிடம் தோன்றும் சிருஷ்டியென்று அறிவோம்' என்பதே இராமதீர்த்த ஸ்வாமிகள் போதிக்கும் தத்துவ உண்மை. 'இதுதான் வேதாந்தம்' என்கிறார். இராமதீர்த்தர் கிருகஸ்தராக மனைவியுடன் வாழ்ந்தவரென்று தெரிகிறது. ஆனால், தமது தியான பலத்தால் மனைவியையும் பரிசுத்தமேலான நிலைக்கு எழுப்பி அவ்வம்மையின் ஹிருதயத்திலும் பரி சுத்த நிலையை உண்டாக்கிவிட்டார். ஆஹா! இப்படிப் பட்ட மகா புருஷனுக்கு வாழ்க்கைப்பட நேர்ந்த புண் ணியவதியின் பாக்கியமே பாக்கியம். புருஷன் நிஷ்டை யில் சமாதிநிலையை அனுபவிக்கும்போது மனைவி புருஷ னையே கடவுளென மதித்து, சமீபத்தில் வந்து அவரது திருமுக மண்டலத்தில் நெற்றியை உற்று நோக்கிய

படியே ஹிருதயஸ்தானத்தில் கடவுளை—புருஷனிட முள்ள தெய்வத்தன்மையை—தியானிப்பாள். இவ்வித பழக்கத்தால் சிற்றின்பத்தில் ஏற்படும் சுகம் மிகவும் அற்பமென்றும் துச்சம் என்றும், இந்தப் பேரா நந்த அநுபவத்தால் சிற்றின்பத்தில் ஏற்படும் இச்சை யெல்லாம் ஒழிந்துபோய்விட, அறிந்தவளானாள். சமாதி சுகத்தில் புருஷனுடன் கலந்து கொண்டாள். 'இவ்வித வாழ்க்கையில் எல்லோரும் இருக்கவேண்டும்' என்ற ஆவல் ஸ்வாமிகளுக்கு இருந்தது என்பது அவர் ஏசு கிறிஸ்துவின் பெற்றோரைப்பற்றிக் கூறுவதால் ஒருவாறு புலப்படும். 'ஏசுவின் பெற்றோரைக்காட்டிலும் ஸ்வாமிக ளின் கிருகஸ்த ஆசிரமம் மேலானது' என்று நாம் கூற லாம். ஏனெனில், சமாதிநிலைக்கு எழும்புகிறவர் சரீர சேர்க்கையாகிய சம்பந்தம் வைத்துக் கொள்ளக்கூடாது. இவ்வித காரியம் மறந்தும் நேராமலிருப்பதுதான் உயர்ந்த நிலை. ஏசுகிறிஸ்துவின் பெற்றோர் மெய்ம்மறந்து மேலான நிலையில் நிற்கும்போது கர்ப்பம் மறதியினால் உண்டாகியதுபோல் ஸ்வாமிகளது வாழ்க்கையில் நேர்ந் ததே கிடையாதென்பது சரித்திர உண்மை. மறந்தும் சரீரப்பற்று சம்பவிக்காத நிலைக்கு எழும்பிவிட்டார். இத னால் கிறிஸ்தவர்கள் மனஸ்தாபப்படுதல் தகாது. ஏசு கிறிஸ்துவின் பரிசுத்தநிலையை எவரும் ஆட்சேபிக்க முடி யாது. அத்வைத தத்துவத்தை அநுபவ உண்மையா கக் கண்டவருடைய ஆத்மபலத்திற்குச் சமமாக வேறெதையும் கூற முடியாதென்பது வேதாந்த உண்மை. இவ்வித பலம் கிருகஸ்தனுக்கும் சன்னியாசிக்கும் சம மாகவே கிடைக்கக்கூடியது என்பது தற்காலம் தெரிய வேண்டிய மகத்தான உண்மையாம். இந்த உண்மையை

அறிய இராமதீர்த்த ஸ்வாமிகளது வாழ்க்கையை மேன் மேலும் அறியப் பிரயத்தனம் செய்யுங்கள். இனிவரும் அத்தியாயங்களில் படிப்படியாக ஸ்வாமிகளின் அத்வைத தத்துவம் தேச பக்தியில் எவ்வாறு உபயோகப் பட்டு வரக்கூடும் என்பது விளங்கும். அந்த அத்தியாயங்களிலும் ஞானபாகம் எங்கும் பின்னப்பட்டே இடக்கின்றதை அறிவீர்கள்.

---

## கo-வது, தேசபக்தி.

---

அமெரிக்காவிலிருந்தவாறே ராமதீர்த்த ஸ்வாமிகள் கூறிய வார்த்தைகள் இவை:—அஸ்தமிக்கும் சூரியனே! நீ இந்தியாவில் உதயமாகப்போகிறாய். அந்தக் கௌரவம் பொருந்திய பூமிக்கு இராமனது இந்தச் செய்தியையும் தயவுசெய்து கொண்டு செல்வாயா? அன்பின் பெருக்கத்தால் என் கண்களினின்றும் விழுகிற நீர்த்துளிகளே இந்திய பூமியில் விழும் அதிகாலைப் பனித்துளிக ளாகட்டும். சைவன் சிவனை வணங்குவது போலவும், வைஷ்ணவன் விஷ்ணுவை வணங்குவதுபோலவும், கிறிஸ்தவன் கிறிஸ்துவை வணங்குவது போலவும், முகம்மதியன் முகம்மது நபியை வணங்குவது போலவும், இவர்க ளெல்லோரும் ஹிருதயத்தினின்றும் எழும் அன்பு அல்லது பக்தி மேலீட்டால் பிரகாசத்துடன் விளங்கி வணங்குவதுபோலவே நானும் இந்தியாவை சைவனிடத்

திலும், வைஷ்ணவனிடத்திலும், கிறிஸ்தவன்-முகம்மதியன்-பார்ஸி-சீக்கியர், சன்யாசி, பறையன் முதலிய எல்லோரிடத்திலுமே இந்திய மாதாவின் எந்தக் குழந்தைகளிடத்திலும் சமமாகவே பார்த்து (இந்திய மாதாவை) வணங்குகிறேன். பாரதமாதாவே! உன்னை எல்லாவிதமான உருவங்களிலும் கொண்டாடி வணங்குகிறேன். எனது கங்காதேவியே! எனது காளி! என் இஷ்டதேவ! என் சாலிக்கிராமமே! வணங்கவேண்டிய முறையைப்பற்றிப் பேசும்போது இந்திய பூமியின் மண்ணைக்கூடத் தின்பதற்குப் பிரியங்கொண்ட கடவுள் (கிருஷ்ணன்) கூறுவதாவது.—ஆவிர்ப்பவித்திராத நிலைக்கு மனதைச் செலுத்திவிட்டவர்களின் மார்க்கம் கடினமானது. ஏனெனில், அந்த நிலையின் மார்க்கத்தில் செல்வது சரீரத்தைக் கொண்டவர்களுக்குக் கஷ்டம்.” என்பதேயாம். சரி, மிகவும் சரியே. இன்பத்தைத் தரும் கிருஷ்ணே! நான் வணங்குவது எதையென்றாலோ, எந்தத் தெய்வமூர்த்தியைப்பற்றி “அவருடைய தனமெல்லாம் வேலை செய்து களைத்துப்போன எருதும், ஒரு ஒடிந்த படுக்கையும், ஒரு பழைய சிறு கோடரியும், விபூதியும், சர்ப்பங்களும், மண்டையோடும்” என்று கூறப்பட்டிருக்கிறதோ அந்தத் தெய்வமாக இருக்கட்டும். அதுவே மகாதேவன் என்றும் கூறப்படும். இல்லையில்லை. உயிருடனிருக்கும் நாராயணனே, - பசியுடன் வதங்கித் திரியும் எளிய ஹிந்துஸ்தானியே, இந்துவேயாவான். இது தான் எனது மதம். இந்தியாவில் வசிப்பவருக்கு இதுவே தர்மப் பொது மார்க்கமாக இருக்கவேண்டும்; அனுபவ வேதாந்தம், தெய்வபக்தியே அதுவாகவேண்டும். ஒப்புக்காகச் சரியென்பதும், தாராளக் கொள்கை

களைக் கூறுவதும் கூடாது. இவ்வித தேசிய உணர்ச்சி ஊற்றுப்போல் பெருகுமாறு பாரதமாதாவின் ஒவ்வொரு குழந்தையும், பரவச் செய்வதற்கு உதவி செய்ய வேண்டும்.

ஒரு குழந்தை பையனாவதற்கு முன் யௌவனத்தை அடைய முடியாது. ஒரு மனிதனிடம் தேச ஜனசமூகமே தன்னுடன் சேர்ந்த ஒற்றுமைப் பட்டதென்ற உணர்ச்சி, சரீரத்தின் ஒவ்வொரு நாடியிலும் கலந்தாலன்றி, அவன் தான் சமஷ்டி அல்லாது கடவுளுடன் ஒன்று என்பதை அறிய முடியாதவனாவான். இந்தியனுள்ள ஒவ்வொருவனும் தேச பக்திக்கு முந்தட்டும். பாரத தேசம் முழுவதும் ஒவ்வொருவரிடமும் விளங்குகிறதென்ற உணர்ச்சி உறைக்கட்டும். இந்தியாவின் ஒவ்வொரு பட்டணமும், நதியும், மலையும், மிருகங்களும் உருவகம் செய்யப்பட்டுத் தெய்வமாகக் கருதப்படுகிறது. இப்போது தாய்நாடு முழுமையுமே தெய்வமெனக் கொண்டாட வேண்டிய காலம் கிட்டிவிட்டது. ஒவ்வொரு அம்சமும் நமக்கு முழு பூமியினிடமும் பக்தியை உண்டாக்கட்டும். துர்க்கா தேவியைப் போன்ற விக்கிரகத்திற்குப் பிராணப் பிரதிஷ்டை செய்கிறார்கள். அதாவது, தசையும் இரத்தமும் கொண்ட உடலை யுண்டாக்குகிறார்கள். அப்படியானால் உருவத்தைக் காட்டிலும் அதிக உண்மையான துர்க்கையாகிய இந்திய மாதாவின் அந்தர்க்கதமான பெருமையை வெளிப்படுத்திச் சக்தியையும் ஜீவனையும் உண்டாக்குவது மேலானதல்லவா? நமது இருதயங்களை ஒன்று சேர்ப்போம்; புத்தியும் கைகளும்

தாமே வந்து கூடும். உலக ரட்சகவீரரான கிருஷ்ணன் கூறுகிறார்:— "தனது சிரத்தையிருக்குமிடத்தில் மனிதன் வசிக்கிறான்." "எது ஒருவனது பக்தியை இழுத்துவிடுகிறதோ அதுவே அவன் ஆகிறான்; அவன் அதுவாகிறான்." என் அன்புமிக்க வைதீக இந்தியர்களே! சாஸ்திரங்களை ஒழுங்காக அனுஷ்டியுங்கள். தேசத்திய தர்மம் உங்களைக் கேட்கின்றது. ஜாதி விதிகள் இவ்வளவு கடுமையாக இருக்கவேண்டாமென்றும் தேசிய உணர்ச்சிக்கு அடுத்த படியாகவே கூறிய வகுப்புப் பிரிவுகள் வைக்கப்பட வேண்டுமென்றும் கேட்கின்றது. பாருங்கள்! தஞ்சமென்று புகுந்தவர்களுக்கெல்லாம் தாராளமாக இடம் கொடுத்துப் பல தேசங்களிலிருந்தும் வந்த பல ஜாதியினர்களையும் காப்பாற்றிய இந்தியாவானது இப்போது தன் குழந்தைகளுக்கே உணவைக் கொடுக்கச் சக்தியற்றிருக்கிறது; ஒவ்வொருவனும் தனக்குத் தகுந்த நிலைக்கு எழும்பச் சுதந்தரம் கொடுக்கப்படவேண்டும். தலை (மூளை) எவ்வளவு உயரவேண்டுமானாலும் போகலாம்; பாதங்கள் எப்போதும் சாதாரண பூமியில் இருக்கவேண்டும்; மற்றவருடைய தோள்களிலும் கழுத்திலும் வைக்கக்கூடாது. அவர் பலஹீனராக இருக்கலாம்; அல்லது உங்கள் பாதங்களைத் தாங்கப் பிரியங் கொள்ளலாம்; நீங்கள் அப்படி வைத்துவிடக்கூடாது.

சீர்திருத்தக்காரர் எனப் பெயர் வாங்க விரும்பும் சிறுவர்களே! இந்தியாவின் பூர்விக வழக்கங்களையும் ஆத்மப் பயிற்சிகளையும் அவமதித்துத் தள்ளாதீர்கள்: புதிதாக ஒருவகை வெறுப்பைக் கொண்டுவந்து இந்தியர்களிடம்

ஒற்றுமையை உண்டாக்க முடியாது. இந்தியாவானது பொருள் நிலையில் இழிந்துபோனதற்குக் காரணம் இந்தியாவினிடம் இருந்த மதப்பயிற்சியும் ஆத்மப் பயிற்சியு மல்ல. தோட்டம் களவுபோனதற்குக் காரணம், முள் வேலிகளும் அடைப்புக்களும் போய்விட்டன. அவற்றை எழுப்புங்கள்! சீர்திருத்தமென்றும் அபிவிர்த்தியென்றும் கூறி மத்தியிலுள்ள பல விருட்சங்களையும் ரோஜாக்களையும் முரட்டுத்தனமாக அழித்துவிடாதீர்கள்! இரட்சித்து வந்த முட்களே! வேலிகளே! நீங்களே இப்போது இந்தியாவிற்குத் தேவை. சூத்திரருக்குரிய தொழிலின் கௌரவத்தைப்பற்றி நான் கானம் செய்யும்போது, ரஜசத்வ குணங்களுக்கு மேலாக தமோகுணத்தை உயர்த்தியதாக நினைக்கவேண்டாம். இந்தியாவில் தமஸை விரும்புவது மாத்திரம் போதும்; தமஸைக் கண்டு அதிருப்தியுடன் எதிர்த்து எதிர்த்து அந்தக் குணத்தையே அபரிமிதமாக விர்த்தி செய்துகொண்டோம். இப்போது நாம் தமஸை உபயோகம் செய்துகொள்ள அறிந்துகொள்வோம். அவ்விதம் அதைப் பெருமைப்படுத்துவோம். ஆபாசமென்று கருதி எருக்களை உபயோகியாமல் தூரப் பொட்டுவிட்டால் தோட்டங்கள் எவ்வாறு செழிக்கும்? தமஸ் என்ற கரிபோட்டு, ரஜஸ் என்ற நெருப்பையும் ஆவியையும் உற்பத்தியாக்கி, சத்வம் என்ற ஜோதியை வெளியாக்குவோம். தமஸ் எவ்வளவுக்கெவ்வளவு சிறந்த குணத்துடன் விளங்குகிறதோ அவ்வளவுக்கவ்வளவு ரஜஸ் என்ற அக்கினியின் அழுத்தமும் சக்தியும் உண்டாகி, சத்வமாகிய ஜோதியின் பிரகாச மதிகப்படும். தேசிய இயக்கமுள்ள பூமியில் இவ்வித மேற்படும். தற்

காலத்திய மனோதத்துவ சாஸ்திரங்களின் முடிவும் இவ் விதமே ஒப்புக்கொள்கின்றது. வீரத்தன்மையுடன் கூடிய பெருமைக்கும், குணம் என்ற சக்திக்கும், புத்திக் கூர்மையும் சன்மார்க்க நிலைமையுமாத்திரமே போதாது; மனிதனிடம் தமோகுண சக்திகளான தேக பலமும் ஆதாரமாக நிற்கவேண்டும்.

இந்துதேச சரித்திரத்தில ஒருகஷ்டமான காலத்தில் பிறந்திருக்கிறோமா? சந்தோஷப்படுவோம். ஏனெனில், ஊழியம் செய்வதற்கு ஏராளமாகச் சந்தர்ப்பம் நேர்ந்திருக்கிறது. நமக்கு ஏற்பட்டவேலை சிறந்ததாகவும, விசித்திரமாகவும் சுருசுருப்புள்ளதாகவுமிருக்கும். நன்றாகத் தூங்கியவர்கள் எழுந்தபின் திடமுள்ளவராவார். இந்திய பூமி நீண்டகாலம் தூங்கிவிட்டது; அதனால் விழித்த பிறகும் திறமுள்ளதாகவே நிற்கும். ஹிந்து ஜனங்கள் எதையும் குறை கூறுமாறு விடக்கூடாது. சிலாக்கியமான பாகங்களைக் கண்டு மதிக்குமாறு செய்வதும், சகோதரத்துவ உணர்ச்சியை உண்டாக்குவதும், ஒன்றுசேர்க்கும் விருத்தியை அதிகப்படுத்துவதும், பல வேலைகளையும் ஒழுங்குபட அணிவகுத்தலும், தொழிலைக் கௌரவப்படுத்தலும் ஆகிய இவ்வித காரியங்களையே நாம் உற்பத்தி செய்யவேண்டும். ஒரு மதஸ்தர் மற்ற மதஸ்தரைக் குறை கூறிக்கொண்டிருப்பதால் நமது நாட்டிலுள்ள எவ்வளவு சக்திகள் வீணுகின்றன பாருங்கள். நாம் செய்யவேண்டிய தென்னவெனில், ஒற்றுமைக்குரிய அம்சங்களைக் கண்டுபிடித்து அவற்றையே உறுதியாக நம்முள் ஆழும்படி செய்வதே. சிலருக்கு ஆரிய சமாஜம் உதவி செய்யக்கூடும்; சனாதன தர்மம் அவர்களுக்

கும் பலன் தராமலிருக்கலாம். மற்றும் சிலருக்கு பிரம்ம சமாஜம் மாத்திரமே சரியெனத் தோன்றும்; அதே மாதிரியே வைஷ்ணவம் முதலியனவும். எனது மதம் கொடுக்கின்ற பலத்தையும் ஆநந்தத்தையும் லட்சியம் செய்யாதவர்களை நான் ஏன் குறைகூறவேவேண்டும். அவர்களும் வரட்டும்; தங்கினால் தங்கட்டும்; அல்லது போகட்டும். விஷயங்களைப் போகும்வண்ணம் விட்டுவிடுகிறேன்; அவ்வளவுதான். அபிமானம் முழுமையும் நீயாவது நானாவது என் சொந்தமாக்கிக்கொள்ள வேண்டும். எனக்கு எது பாக்கியமென்றால் சேவை செய்வதுதான்; சகலருக்கும் ஊழியம் செய்வதுதான்; அன்பைச் செலுத்துகிறவருக்கும் ஊழியம்; விரோதத்தைக் காட்டுகிறவர்களுக்கும் ஊழியம். தாயாருக்கு எந்தக் குழந்தையினிடம் அன்பு அதிகம். எது பலஹீனமாக இருக்கிறதோ, எது வஞ்சகமாக இருக்கிறதோ அந்தக் குழந்தையினிடம் அன்பு அதிகம். உன் அபிப்பிராயத்தை ஒப்புக் கொள்ளாதவர்களெல்லோரும் தப்பான கொள்கையுடையவர்களா? அப்படியிருந்தாலும் அவர்களும் தேசத்திற்கு வேண்டியவர்களே. வலதுகாலை மாத்திரங்கொண்டு ஒருவன் நடக்கப் பிரயத்தனம் செய்யலாமா? உண்மையான கல்வி யென்பதற்குப் பொருள் யென்ன? விஷயங்களைக் கடவுள் திருஷ்டியுடன் பார்க்கப் பிரயத்தனம் செய்வதுதான்.

"சமதிருஷ்டி பொருந்திய கடவுளே! எனது தீய குணங்களை நோக்காதே. நீ பிரியப்பட்டால், தொட்டமாத்திரத்தில் என்னைப் பரிசுத்தம் செய்ய வல்லவனல்லவா? யமுனை நதியில் ஒருதுளி ஜல மிருக்கிறது; மற்றொரு

துளி தெருச் சாக்கடையில் இருக்கிறது; இரண்டும் கங்கா நதியில் சேர்ந்த பிறகு ஒரே பரிசுத்த நிலையை அடைந்துவிடுகிறது.''

நமது சொந்த தர்மத்தையும் சிறு ஸ்தலத்தைப் பற்றிய தர்மத்தையும் பாராட்டுவதைக்காட்டிலும் மேலாகவே தேசிய தர்மத்தைப் போற்றவேண்டும். சரியான அளவில் ஒவ்வொன்றையும் வைத்தால் மாத்திரமே சுக முண்டு. தேசத்தவர் அல்லது தேசசமஷ்டி சுகப்படக் கூடிய காரியத்தை விர்த்திசெய்தால் தெய்வ சக்திகளுக்கு ஊழியம் செய்தவராவோம். இவ்வகையான யாகத்தையே இந்திரன் என்ற தேவதைக்குக் கொடுக்க வேண்டும். இக்காலத்தில் கீதையின் வாக்கியம் இவ் வித யாகத்திற்கே உபயோகப்படும்:—''யாக சேஷத் தையே புசித்துவரும் புண்ணிய புருஷர்கள் பாபங்களி னின்றும் விடுவிக்கப்படுகிறார்கள். பக்தி யில்லாமல் தமக்காக மாத்திரமே உணவுப்பொருள் பக்குவம் செய் கிறவர்கள் பாபத்தையே புசிக்கிறவர்களாவார்கள்.'' கடவுளை அனுபவிக்க வேண்டுமானால் சன்யாச சக்தியை அடையவேண்டும்; அதாவது, சுயநலம் என்பதே முழுமையும் விட்டு நீக்கவேண்டும். இந்தச் சிறுஜீவனை பாரத மாதாவின் பெரிய ஆத்மாவுடன் முழுமையும் நன்றாக ஒன்றுபடுத்த வேண்டும். கடவுள் அல்லது ஆநந்தம் அனுபவிக்க வேண்டுமானால் பிராமண சக்தியை அடைந்து உனது புத்தி முழுமையும் தேச மேன்மைக் குரிய எண்ணங்களிலேயே செலவிட வேண்டும். ஆநந் தம் வேண்டுமானால் க்ஷத்திரிய தர்மத்தைக் கைப்பற்றி எந்த விநாடியிலும் உனது தேச சேவையில் உயிரையும்

[illegible] எவ்வளவோ அபரிமிதமான சக்தி [illegible] இருக்குமே. இஸ்லாம் மதத்து அழகிய [illegible]ரின் வார்த்தைகளின் மூலமாக இந்தச் சக்தி யை விளக்குகிறேன்: "என் வலது பக்கத்தில் சூரிய னும் இடதுபக்கத்தில் சந்திரனும் நின்றுகொண்டு என் னைத் திரும்பும்படி உத்தரவுசெய்தாலும் என்னால் கீழ்ப் படிய முடியாது."

லாகூர் மாணுக்கர்களுக்கு இராமதீர்த்தர் கூறிய உப தேச மொழிகள்:—ஒற்றுமை, ஒற்றுமை, எவரும் வேண்டி நிற்பது ஒற்றுமையைத்தான். அளவற்ற சக்தி ளெல்லாம் ஒன்றை யொன்று தாக்கி மோதி வீணு கின்றன. எல்லாம் சேர்ந்த ஒரு மகாசக்தி கிடையாது. கோடிக்கணக்கான புத்தியும் கைகளும் வேலை செய்து கொண்டேபோகின்றன. எங்கே போகின்றன? என்ன செய்கின்றன? எவரால் சொல்ல முடியும்? ஆயிரக்கணக் கான மதப்பிரிவுகளும் ஜனவகுப்புகளும் நிறைந்திருக் கின்றன. ஒவ்வொன்றும் தேசியமென்னும் கப்பலைத் தனது இனிய மனப்போக்கின்படியே ஒருவித இனிய திசை நோக்கிச் செலுத்துகின்றது. ஒழுங்காகச் செலுத்துவது கிடையாது. கைமரங்கள் அப்படியே இருக்கட்டும். உங்களது நிலைமையைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்; அசையாமல் நில்லுங்கள்; ஆனால், ஒரே திசையைக்நோக்கிச் செலுத்துங்கள். அவ்வித ஒற்றுமை, நாநாத்துவத்தில் ஏகத்துவம் முன்னேற்றத்திற்கு வழி காட்டும். இவ்வாறு உங்கள் ஸ்தானங்களில் வேலை செய்துகொண்டு கானம் செய்யுங்கள். ஆநந்தமாகப் பாடிக்கொண்டே போங்கள். தேசிய நிலைமைக்கு வேண்

டியது அதுதான். சமஷ்டியின் க்ஷேமமே வியஷ்டிக்கும் க்ஷேமமாம். இவ்விதம் பேசிவிடுதல் இலகுவான காரியம்தான். ஆனால், இந்தியாவில் இவ்வளவு காலமாக ஏன் ஒற்றுமையும் சமரசமும் கொஞ்சங்கூடக் காணப்படவில்லை? இதற்குக் காரணங்கள் இரண்டு வகையாகப் பிரிக்கப்படலாம்.

a. அனுபவத்திற்கு வேண்டிய அறிவு குறைவுபட்டிருத்தல்.

b. ஜனத்தொகை யதிகரித்திருத்தல்.

இந்த இரண்டு காரணங்களையும் வரிசையாக எடுத்துக்கொண்டு வாசிப்போம். முதற்காரணமாகிய அனுபவ அறிவின் குறைவு என்பதை எடுத்துக்கொள்வோம். இந்தியாவில் முகம்மதியர் அரசாள ஆரம்பம் செய்வதற்கு முன்பு குராஸான் தேசத்திய ஆல்பிரூனி என்பவர் தேசமெங்கும் யாத்திரை செய்தார். அவர், சிறந்து விளங்கிய தத்துவஞானியாயும் கல்விப்பயிற்சி முதிர்ந்தவராயும் இருந்தார். அவர் சம்ஸ்கிருத கலைகளைப் பயின்று நமது சாஸ்திரங்களை மிகவும் ஊக்கத்துடன் படித்தறிந்தார். அவர் அக்காலத்தில் பார்த்தபடி இந்தியாவைப்பற்றி விபரமாகக் குறிப்பிட்டிருக்கிறார். ஹிந்துக்களின் தத்துவசாஸ்திரம், கவித்திறமை, வானசாஸ்திரம் முதலியவற்றைப்பற்றி அவர் மிகுந்த கௌரவத்துடனும் மரியாதையுடனும் கூறுகிறார். அவர் சந்தித்த சில பண்டிதர்களின் கல்விப் பயிற்சியைப்பற்றிப் புகழ்ந்து பேசியிருக்

ஆனால், பாமர ஜனங்களையும் ஸ்திரீகளின் நிலைமையையும்பற்றி அவர் நன்றாகக் கூறவில்லை. தேகபலத்தாலும் புத்தியாலும் அவர்கள் மிகவும் வருந்தத்தக்க நிலையைக்காட்டிலும் கீழாக இருந்தார்களாம்' 'சன்மார்க்க நிலையிலும் ஆத்மப்பயிற்சி நிலையிலுங்கூட அவர்கள் கவனிக்கப்படாதபடி சிதறுண்டவர்கள்' எனக் கூறுகிறார். 'ஒவ்வொரு விதத்திலும் மிதிக்கப்பட்டவர்களாயிருந்திருக்கிறார்கள்' என்கிறார். மனதும் சரீரங்களும் ஒன்று சேர்க்கப்படாமல் சமூக வாழ்க்கையிலும், மத விஷயங்களிலும், ராஜீய நிலையிலும் சரியானபடி அணிவகுக்கப்படாமல் ஏராளமான கூட்டத்தவர்கள், வருஷாவருஷம் கஜினி மகம்மதுவின் தலைமையின் கீழ்ப் படையெடுத்து வந்து கொள்ளையடித்த முஸ்லிம்களைக் கண்டு, தூசிகளைப்போல் பறந்தோடினர். பிற்காலம் பேபர் (சக்ரவர்த்தியும்) இந்தியர்களிடம் எந்த அம்சத்திலும் புத்திக் கூர்மையாவது, தாமே கண்டு பிடிக்கும் திறனாவது, சாமர்த்தியமாவது கிடையாதென்று குறை கூறுகிறார். 'ஒற்றுமையென்பது இவர்களிடம் இருக்கமுடியாது' என்கிறார். இவைகளெல்லாம் அந்நியர்களால் கூறப்பட்டனவாதலால் அதிகரித்துக் கூறப்பட்டிருக்கலாம்; சுயநலம் கருதிக் கூறப்பட்டிருக்கலாம். இவ்வளவு நிலைமைக்கும் இடங்கொடுத்துப் பார்த்தாலும் இவ்விஷயங்கள் உண்மையாகவே யிருக்குமென்று தான் தெரிகிறது. அவற்றால் விளங்குவது என்ன? அனுபவத்தில் தேவையான அறிவு குன்றியிருந்ததெனத் தெரிவிக்கிறது. இந்தக் குறையினாலேதான் இந்தியா தாழ்ந்த நிலைக்கு வந்து விட்டது.

[இராமதீர்த்த ஸ்வாமிகளின் கருத்து:—இந்தியாவின் முற்காலப் பெருமைகளெல்லாம் பொது ஜனங்களிடம் ஒழுங்கான அமைப்பும் சமரசத்தன்மையும் குறைந்துபோன காலமுதற்கொண்டு தேய்ந்துகொண்டே வந்தன என்பதாகும். 'பாரதயுத்த காலத்திலேயே கட்சிப் பிரதிகட்சிச் சண்டைகளின் ஓசை கேட்க ஆரம்பித்திருக்கிறது' என்று ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகளும் துக்கத்துடன் தெரிவித்திருப்பது இங்குக் கவனிக்கத்தக்கது.]

அநுபவத்திற்குத் தேவையான அறிவு குன்றியதே சகல குறைகளுக்கும் காரணமாகும். கையினால் வேலை செய்வதைக் கண்டு அருவருத்தல், ஜாதியிலும் உள்மதக் கொள்கையிலும் இயற்கைக்கு மாறான பிரிவுகளும், பிரிவுக்குள் பிரிவுகளும், வெளிதேச யாத்திரை விலக்கல், குழந்தைகளுக்குக் கல்யாணம் செய்தல், பொதுவாக ஸ்திரீகளையெல்லாம் புத்திக்கூர்மை யடையவிடாமலும் சீரிடம் கொள்ள விடாமலும் அந்தகாரத்திலேயே ஆழ்ந்தும்படி வைத்தல் முதலிய ஜனசமூகத்தீங்குகளுக்கெல்லாம் காரணம் மேலே கூறப்பட்ட அநுபவ அறிவு குறைவேயாம். இவ்வித சமூகக்குழப்பத்தைத் தெளிய வைத்தல் மிகக் கடினமானது. வழக்கம் அல்லது சம்பிரதாயமென்ற நங்கூரத்தினின்று பெயர்த்துவிடுதல் உண்மையில் மிகக் கஷ்டத்தையே உண்டாக்கும். நிச்சயமாகச் சமூகத்தார் பலமாகவே குறைகூறிக் கண்டிப்பார்கள். வேலைசெய்வோரும் சமூக ஜனங்களைக் கண்டிப்பார்கள். இவ்விதம் அதிருப்தியும் தவறான அபிப்பிராயங்களும் ஏற்பட்டு ஒற்றுமைக்குறைவேற்படும். இவ்வித ஒற்றுமைக் குறைவினின்றும் தப்புவதற்காக நாம் விஷயங்

களை யப்படியப்படியே விட்டுவிட்டு நமது காரியத்தையே செய்வதில் கருத்தைச் செலுத்துவோமோ? சமூகத்தை யலட்சியம் செய்துவிட்டு உங்களுடைய கதியைப் பார்த்துக்கொள்வீர்களா? ஓ அது முடியுமானல் செய்யலாம். ஜனசமூகம் முழுகும்போது உன்னை மாத்திரம் விட்டுவிடாது. நீயும் அதோடு முழுக வேண்டும்; அல்லது அதோடு கிளம்பவேண்டும். 'ஜன சமூகம் பூரண ஒழுங்கு பெறுவிட்டால் தனிமனிதன் மாத்திரம் பூரணத்தன்மையடைவான்' என்பது முழுப் பிசகு. சரீரத்தினின்று கையை வெட்டிவிட்டுத் தனியாகப் பலம் பெறும்படி செய்துவிடலாமோ? நீண்ட காலமாகவே வேதாந்தத்திற்கு விரோதமான இந்த எண்ணம் வளர்ந்துகொண்டே வந்தது. அதனல் சமூகம் மிகவும் பரிதபிக்கத்தக்க நிலையில் பிளவுபட்டது. யௌவன பருவ முள்ளவர்களே! இந்தியாவின் பிற்கால நிலையே உங்களது பிற்கால நிலையாகும். அதற்கு நீங்களே உத்திரவாதிகள். விசித்திரமான ஜனக்கூட்டத்தாரின் மூடபக்தியினுல் பயந்தவர்கள் ஆளப்படுவார்கள், உண்மையான ஜீவசக்தி பெற்ற மகாபுருஷர்கள் ஜனங்களது ஹிருதயங்களையும் எண்ணங்களையும் ஆட்சி புரிகிறார்கள். வெளிக்கு ஆட்சிபுரியும் (மன்னன்) எவராயினு மாகட்டும். நீ ஜன சமூகத்திற்குப் பயந்து நடக்கின்றவனு? அல்லது தீரனு? எதை நீ விரும்புகிறாய்? வாழ்க்கையில் அரசு வீற்றிருக்கும் நிலையா? அல்லது மிகப் பணிந்த அடிமைத்தனமா? பலமும் பரிசுத்தமும் நிறைந்த வாழ்க்கையே சரித்திர நிலையை மேலெழும்பச் செய்கிறது. பழக்கத்தை அதாவது சம்பிரதாயத்தை யொட்டியும் மூடபக்தியை யொட்டியும் நமது பூமியில்

பல நூற்றாண்டுகளாகத் தகாத வெறுப்புகளும் அவற்றி னும் கொடியதான உணர்ச்சியற்ற தன்மையும் ஒரே மாதிரி யாக நிறைந்து நிற்கின்றன. நற்பயிற்சியும் சிறந்த குணமு மிக்க சிறுவர்களே! உங்களுடைய கடமைதான்; தற்கா லம் தேவையில்லாமல் வீணாகி நிற்கும் சக்திகளையெல் லாம் மாற்றத்தக்க ஜீவ சக்தியாக நீங்கள் நிற்கவேண்டும். பழைய தமோகுணத்தை வெல்லுங்கள். (தேசிய) ஓட் டம் எங்குத் திருப்பப்படவேண்டுமோ அங்குத் திருப்பி விடுங்கள். எங்கு வேகத்தை யதிகப்படுத்தவேண்டுமோ அங்கு அதிகப்படுத்துங்கள். இப்படியே வேலை செய்து உருவாக்குங்கள்; ஒழுங்குபடுத்துங்கள். சென்ற காலப் பிரயத்தனங்களை யெல்லாம் தற்கால நிலைக்குத் தக்கபடி உருவாக்கி உபயோகப்படுத்துங்கள். பரிசுத்தமும் பல மும் பொருந்திய உங்களது தற்கால நிலையைப் பின்னால் வரப்போகும் காலத்திற்கு உபயோக முள்ளதாகுமாறு தைரியமாகச் செலுத்துங்கள். நமது முன்னோர்களது போக்கிஷமின்றி நாம் செல்ல முடியாது. ஜன சமூகமா னது அதை யிழந்தால் வெளியிலிருந்து வரும் பலத்தால் அழிந்துவிடும். ஆனால், அந்த முற்கால உதவியையும் அளவு க்கு மீறி உபயோகிக்கலாகாது. எந்தச் சமூகத்தில் முற் காலக் கொள்கையே மேலோங்கி நிற்கின்றதோ அந்தச் சமூகம் தானே உள் பலஹீனத்தால் அழிந்துபோம். நீ சத்யவழியில் நடந்தால் சமூகத்தில் பிரிவும் ஒற்றுமைக் குறைவும் ஏற்படுமா? அப்படி ஏற்படுமென்று நினைத் தாலும் தைரியமாகவே உறுதியாக நில். பின் வாங்காதே. இதுவே ஆண்மை. சக்தி உன் வசத்தி லிருக்கின்றது. எழுச்சி உன் பக்கத்தில் இருக்கிறது. தேச சமூகம், தர்மத்தைக் கவனியாத ஒற்றுமையால் காப்பாற்றப்

படுமோ? அந்தகாரத்தில் அழுத்துவதால் ஜனங்களை ஒன்று சேர்க்க முடியுமா? பிழைகளுக்கும் மூடபக்திக்குமே அடிமையென்று பிரமாணம் செய்துவிட்டு அதன் மூலமாகத் தேசிய சமரஸம் உற்பத்திசெய்யலாமா? கப்பலோட்டிக ளெல்லோரும் ஒன்றாகவே நின்று தப்பான மார்க்கத்தில் கப்பலைச் செலுத்தினால் விரும்பத்தக்கதா? அப்படிச் செலுத்தப்பட்ட கப்பல் பாறையில் மோதுண்டு சிதறிப்போம். இப்படி சீக்கிரம் போவது நல்லதாகும். ஒற்றுமைப்பு என்பது புண்ணிய காரியத்தில்தான் ஒழுங்கானதாகும். சத்திய நெறியிலும் பரிசுத்த நிலையிலுமே ஒற்றுமையென்பது ஏற்படக்கூடியது. தேச ஒற்றுமையை விரும்புகின்றவர்களே! நீங்கள் முதலில் செய்யவேண்டிய வேலை தேசத்தவரிடமுள்ள பல கொடிய பிழைகளைத் திருத்திவிட வேண்டும். சமஷ்டி சேவைக்காகவும், சத்தியம் முன்னேற்றமென்ற இவற்றிற்காகவும், பாமரர்களுக்குத் துன்பமும் வேலை செய்வோருக்குத் தீமைகளும் நேருமானால் தேசத்தில் ஆத்மசக்தி இயங்குகின்றது என்று பொருளாகும். சுவாசம் ஒழுங்காகவே போய்க்கொண்டிருக்கிறதென்று அர்த்தமாகும். சிறந்த குணம் கஷ்டத்தைப்பாராமல் வேலை செய்யும். சாந்தமயமாகவே எங்குபார்த்தாலும் அன்பையும் ஒளியையுமே பொழிந்து வீசும். தேச சமூகத்தவரிடம் அறிவு என்ற ஒளியைக் கொடுத்தல் துன்பமென்று நினைத்தால், அந்தச் சமூகத்தவரிடம் துக்கமேயில்லாத சாந்தமும், அதிகரித்துக்கொண்டே போகின்ற ஞானமும் சேர்ந்து சமமாக விளங்குமோ? ஆதலால், உள்ளபடியே சிறந்த குணம் விளங்காமற் போனாலும் உண்மை அல்லது சத்திய நெறியிலாவது

கடப்போம். இதுவே அதிகம் தேவை. ஒரு தேசத்திற்கு வேண்டியது சிறிய நோக்கங் கொண்ட பெரிய மனிதர்களல்ல; பெருமை பொருந்திய நோக்கம் கொண்ட சிறிய மனிதர்களே அதிகம் தேவை. அமைதி சாந்தம்; தமோகுணமிக்க தூக்கம் அமைதி பொருந்தியது; துர்க்கந்தம் வீசும் பிணங்களும் அமைதி பொருந்தியவைகளே. நமக்கு வேண்டியதெல்லாம் உற்சாகம் பொருந்திய அமைதி; தாமோகுணமல்ல. ஜனங்கள் இருட்டில் தட்டித் தடுமாறிக்கொண்டிருக்கையில் வெளிச்சத்தைப் புதருக்குள் ஒளித்துவைத்தாலென்ன? வெளிச்சமே இல்லாமலிருந்தாலென்ன? சரியான காலங்களில் உயிர்ப்பிக்கும் மொழிகள் நம்மிடம் இருக்கையில் அவற்றை வெளியிட்டு உபகரிக்காமல் கடமையைக் கைவிட்டோமானல் குற்றவாளிகளாவோம்.

(b) இனி ஜனத்தொகை யதிகத்தைப்பற்றிக் கூறுவோம்.

'ஜனசமூகமென்பது காட்டின் மத்தியில் உள்ள தோட்டத்திற்குச் சமமாகும்' என்று ஹக்ஸ்லி கூறுகிறார். சமூக எழுச்சி தோட்டப்பயிர் செய்வதற்குச் சமம்; இயற்கையில் விர்த்தியாகின்ற காட்டு வளர்ச்சியல்ல. காடுகள் வளரும்போது வளருவதற்கு ஏற்படும் இடையூறுகள் அநந்தம். தோட்டப்பயிரில் அவ்வித இடையூறுகள் கிடையா. ஆனல், தோட்டக்காரன் தோட்டத்தில் பூண்டுகள் முதலிய உபயோகமற்ற பயிர்களைக் களைந்துகொண்டிருப்பதோடு, அதிகம் அடர்ந்துபோகுமாறு விடாமலு மிருக்கவேண்டும். இல்லாவிட்டால்

காட்டுப்பயிருக்குச் சமமாகத் தொல்லைகள் சேர்ந்து விடும். அதேமாதிரிதான், ஒரு சமூகத்திலும் ஜன அடர்த்தி யதிகம் ஏற்பட்டால், அதிகக் கூட்டத்திற்கு மார்க்கம் காட்டாமற்போனால், சமூக வாழ்க்கையில் கொடிய போட்டி யேற்பட்டு அமைதியைக் கெடுத்து விடும். சன்மார்க்க நிலை தவறி கடவுளது சட்டங்களைப் பலனில்லாமற் செய்துவிடும். அப்படிப்பட்ட காலங் களில்தான் தேச சமூகங்களெல்லாம் சீர்கெட்டுப் பாழடைய ஆரம்பமாகும். உரோமர்களின் ராஜ்யமும் கிரீஸ்தேச மேன்மையும், மற்றுமுள்ள தேச சரித்திரங் களிலும் எதை எடுத்துக்கொண்டாலும் இந்த ஜனத் தொகை விஷயமே அஸ்திவாரமாக நிற்பது தெரிய வரும். இந்தியாவில் நீண்டகாலங்களாகவே இவ்விதக் காரண மேற்பட்டுவிட்டது. அதற்கு நாம் யாதொரு பரிகாரமும் செய்யவில்லை. உலகத்திலேயே எந்த தேசத் திலும் இந்தியாவைப்போல அவ்வளவு அதிக ஜனத் தொகையுடன் வறுமையும் சேர்ந்து விளங்கவில்லை. ஒரு குடும்பத்தை எடுத்துக்கொள்வோம். இதுவே தேச சமூகத்திற்கும் பொதுவாகும். வருமானம் குறைவு; வருஷாவருஷம் பிரஜாவிர்த்தியினால் அதிகம் ஜனங்கள்; இத்துடன் போதாக்குறைக்கு உதவாத விசேஷங்க ளென்று தகாத செலவுகள். மிருகங்களாயிருந்தாலும் ஒரேகொட்டிலில் ஒன்றிரண்டுக்குமாத்திரம் உணவு இருக்க பல மிருகங்கள் கட்டப்பட்டிருக்குமானால், அவை சண்டை போட்டுக்கொண்டு மாளவேண்டியதுதான். கஷ்டத்திற்குக் காரணத்தை நீக்காமல் அமைதியை உபதேசிப்பது பரிகாசமாகும். என் தேசத்தவர்களிடம் சுபாவத்தில் சாந்தகுணமும் அமைதியுமே இருக்கின்றன.

மனதில் அமைதியைத்தான் விரும்புகிறார்கள். ஆனால், நிர்ப்பந்தமாகச் சரீரத்திற்குப் போதுமான உணவு கிடையாத ஸ்திதியில் இருந்தினால் பொறுமையும் தன்னயமும் எங்கே போகும்? உண்டாகித்தான் தீரும். இதற்குப் பரிகாரம் தேடியாகவேண்டும். இல்லையேல் அழிந்து போவோம். நமது நண்பர்களிடம் தினந்தோறும் கஷ்டமும் துக்கமும் குடிகொண்டிருக்கும் நிலையில் அனுதாபகுணமும் தன்னயமற்ற தன்மையும் உண்டாகாது. ஒருவர் சாப்பிட, பத்துபேர் பட்டினிகிடக்கும் நிலையில் இருக்கும்வரையில் கஷ்டமே. இதை விலக்க வழிதேட வேண்டும். இல்லையேல் காட்டு வளர்ச்சியில் உள்ள கொடுமைகளெல்லாம் நமது சமூகத்தில் நேர்ந்துவிடும். நம்மைப் போன்றவர்களிடம் எவ்விதம் தீமைகள் வெளியாகுமென்றால் வசிஷ்டமுனிவரே கூறியிருக்கிறார்: நோயும், பஞ்சமும், அழிக்கத்தக்க யுத்தமும், பூகம்பம் முதலியவையும். போதும்! போதும்! பரிகாரத்திற்கு வழியுண்டா? இருக்கிறது. அநேக வழிகளுண்டு.

(1) 'தேசத்து எல்லையைத் தாண்டினால் சொர்க்கம் கிடைக்காது' என்று நினைக்கும் அந்தகாரம் ஒழியவேண்டும். அதோடுகூடவே இங்கு வசிக்க முடியாமல் கஷ்டப்படுகிற இந்தியர்களும் தேசத்தைவிட்டுக் கிளம்பட்டும். வெளிநாடுகளுக்குக் குடியேறட்டும். கிணற்றுத் தவளையாக நின்றுவிடவேண்டாம். இங்கேயே தங்கி மூச்சுத் திணறவேண்டாம். வெளியில் சென்று தாராளமான காற்று உட்கொள்ளுங்கள்.

(2) முன்னொரு கால மிருந்தது இந்தியாவில் வந்து சேர்ந்த ஆரியர்களுக்கு 'அதிகமாகப் பிரஜைகள் உண்டாகவேண்டும்' என்பது அவசியமாக இருந்தகாலமுண்டு. அந்தக் காலமெல்லாம் போய்விட்டது. தலைகீழாகக் காலம் மாறிவிட்டது. ஜனக்கூட்டம் அதிகப்பட்டுப் போனபடியால் பெரிய குடும்பங்களை உண்டாக்குவதும் அதர்மமாகிவிட்டது. 'இறந்த பிறகு சுவர்க்கம் அடையும் புத்திரர்கள் அவசியம்' என்று அறிவீனத்தால் கருதுகிறவர்கள் கண்விழித்துப்பார்க்கட்டும். இறப்பதற்குமுன்பே இப்போது தமது வீடுகளை நரகலோக மாக்கிவிடுகிறீர்கள். பிரஜைகளை அதிகப்படுத்திக் கஷ்டங்களை யுண்டாக்கிக்கொள்கிறீர்களே. 'புத்திரர்கள் சுவர்க்கலோகத்தில் சேர்ப்பிக்கிறவர்கள்' என்று அர்ச்சுனன் கூறியதைக் கேட்டதாலல்லவா பகவத்கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன் இந்திரிய சுகங்களடர்ந்த சுவர்க்க இச்சையை உடையவர்களைக் கண்டித்துவருகிறார். (இரண்டாமதிகாரம்: 42, 43, 44, 45, சுலோகங்கள்). இந்த சுலோகங்களைப் படித்து அவற்றிலடங்கிய சுதந்திர உணர்ச்சியை—ஆத்ம சுதந்திரத்தை — கிரகிக்கவேண்டியதவசியம். 'கல்யாணம்செய்து கொள்; பிரஜாவிர்த்தி யுண்டாகும்; அந்தகாரத்திலேயே ஆழ்ந்து வாசம் செய்; பந்தத்துடனேயே இறந்துபோ. இப்படிப்பட்ட கொடிய கொள்கைகள் இவ்வளவு காலமாக நம்மை ஆட்டிக்கொண்டிருந்தன. 'நமது பின்னிட்ட நிலைக்குக் காரணம் முகம்மதிய ஆட்சி' என்றும், 'பிரிட்டிஷாரின் ஆட்சி முறை' என்றும் 'நமது மதங்கள்' என்றும், 'கல்விமுறை' என்றும் கூறிக்கொண்டே போகிறோம். இவற்றிலெல்லாம் சிறிது உண்மைகளிருக்கலாம். ஆனல், உண்மையான காரணம் வேறிடத்

தில் இருக்கின்றது. இந்திய ஜன சமூகத்தையே உற்பத்தி செய்யக் காரணமாக இருக்கும் தாம்பத்திய சம்பந்தத்தினிடம் பரிசுத்த குணத்தையே நீக்கிவிட்டு அர்தச் சம்பத்தைக் கொடுத்ததுதான் காரணம். உலகிலுள்ள முறைகளிலெல்லாம் முக்கியமானதும் மிகுந்த பரிசுத்த குணம் பொருந்தியதுமான இந்தச் சம்பந்தத்தினிடம் மிகுந்த அஜாக்கிரதையும் அசாஸ்திரியத்தன்மையும் காட்டப்பட்டு மானக்கேட்டுடன் நடத்தப்பட்டு வருகிறது. ஜாதகங்களைப் பார்த்து, கிரகங்களைக் கணக்கிட்டு, சகுணம்பார்த்து, ஆசீர்வாதத்துடன் பல வைதீக கர்மாக்களுடன் நடத்தப்படும் இந்திய தம்பதிகள் மிகவும் கொடிய சேர்க்கையுடையவர்களாயப் பாவம் நிறைந்தவர்களாயிருக்கிறார்கள். குழந்தைகளுக்குத் தாலி கட்டும் கொடுமையைக் கண்டு எந்தக் கிரகமும் எதிரில் நிற்கப் பயப்படுகிறது. வேத மந்திரங்களும் தமது கௌரவத்தை இழக்கின்றன. மேலே கூறுவானேன்!

சிறுவர்களே ! நிறுத்துங்கள் ! நிறுத்துங்கள் ! இந்தியாவின் எதிர்காலத்திற்குப் பாத்தியப்பட்ட சிறுவர்களே! இவ்வழக்கத்தை நிறுத்துங்கள்! சன்மார்க்கம் செழிப்பதற்காகவும், இந்தியாவின் முன்னேற்றத்திற்காகவும், உங்கள் பெருமைக்காகவும், உங்களது சந்ததிகளுக்காகவும் வேண்டிக்கொள்கிறேன். அவிவேகமான, காலந்தவறிய குருட்டுக் கலியாணங்களை நிறுத்துங்கள்! இதுவே கொஞ்சம் தேசத்தின் தாழ்வுக்குப் பரிகாரமாகும். ஜனத்தொகை மிகுதியைக் குறைக்கும். ஐரோப்பாவில் ஜனங்களின்நிலை கீழே போகப் போக அதிசீக்கிரத்தில் கலியாணம் செய்துகொள்கிறார்கள். என்னவாலும் இந்தி

யர்களைப்போல இவ்வளவு பாலியத்தில் செய்துகொள்வதில்லை. உயர் வகுப்பினர்கள் முப்பது வயதுக்கு முன் அநேகமாகக் கலியாணம் செய்துகொள்வதில்லை. அவர்களது கொள்கை 'குழந்தைகள் குறைவாக இருக்கவேண்டும்; ஆனால், திடமுள்ளவராக இருக்கவேண்டும்' என்பதேயாம்.

நமது சாஸ்திரங்களும் பிரம்மசர்ய நிலையின் பெருமைகளைப்பற்றிக் கூறுவதில் அலுக்கிறதில்லை; பரிசுத்த குணத்தைப்போல் வேறெதனாலும் தேகபலமும் ஆத்மபலமும் அடைய முடியாதென்று கூறுகின்றன. ஸ்திரீ புருஷ சம்பந்தமான எண்ணங்களிலும் செய்கைகளிலும் செலவாகும் மனித சக்தி அடக்கப்பட்டால் இலகுவில் ஓஜாஸ் என்ற வற்றாத ஆதமசக்தியாகிவிடுகின்றது. ஆதலால், அவ்வித இந்திரிய உணர்ச்சியைக் கட்டுப்படுத்தவேண்டிய தவசியம். இந்த மிருகப்பிராயமான காமத்தை அடக்க முடியாத இயற்கையில் ஏற்பட்ட இந்த மகத்தான சம்பந்தத்தினிடம் விளையாட்டாக நடந்துகொள்ளுகின்ற மூடர்களைப்பற்றி என்ன கூறுவோம்? தமது உண்மைச்சக்தியான இரத்தத்தையேயன்றோ சிந்துகின்றார்கள். தெய்விக சக்தியை இப்படித் தவற விடுவதிலேயே பாபங்களுக்கெல்லாம் முளையிருக்கின்றது. காமத்தினிடம் மிருகத்தன்மையைச் சேர்த்துவிட்டால் அதன் இழிவையே அது பலப்படுத்துகிறது.

பரிசுத்த குணம் வேண்டும்; பரிசுத்தமே தேவை; ஈட்டி முனையில் நிறுத்திப் பரிசுத்த குணத்தை யுண்டாக்கிக் கொள்ளவேண்டும். பரிசுத்த குணமில்லாவிட்டால் முன்னேற்றத்திற்கு வேண்டிய போராட்டத்தில் அழிந்தே

போவாய். தற்காலம் உனக்கு வேண்டியதெல்லாம் பரி சுத்தகுணமே. அதை அடைவது கஷ்டமாக இருக்கலாம். ஆனால், அதை அடைந்தே தீரவேண்டும். இந்தியாவின் முன்னேற்றத்திற்கும், உங்கள் சரீரசுகத்திற்கும், உங்கள் மதம் விர்த்தியாவதற்கும், புத்தியதிகப்படுவதற்கும், நீ பூரண மாகப் பரிசுத்தனாயிருக்கவேண்டும். பரிசுத்த குணமின் றித் தீரத்தன்மை கிடையாது; ஐக்கியம் கிடையாது; சாந் தம் அல்லது அமைதியும் பரித்த குணமின்றிக்கிடையாது.

## கல்வி.

அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் பள்ளிக்கூடத் தையே அறியாதவர்கள்கூட அறிவு நிறைந்தவர் களாயிருக்கிறார்கள். நமது சர்வகலாசாலைப் பட்டதாரி களைக்காட்டிலும் அதிக விஷயங்களை யறிந்தவர்களா யிருக்கிறார்கள். ஏன் அப்படி? அவர்களுக்கு நயமான தினசரிப் பத்திரிகைகளின் மூலமாக விஷயங்கள் தெரி விக்கப்படுகின்றன. இங்கிலாந்திலும் ஜப்பானிலும் அமெ ரிக்காவிலும் கலாசாலைகளைவிட அதிக விசாலமாகப் பத் திரிகைகளே அறிவைப் பரப்புகின்றன. கவர்ன்மெண் டாரும் மற்றக் கூட்டத்தவரும் நமது தேசத்தில் சிறிது கல்வி பரவச்செய்வதற்காக நன்றி பாராட்டுவோம். அது மாத்திரம் கல்வி பரவப் போதுமானதல்ல. பாமர ஜனங் கள் அறியாமையால் முழுகிக்கிடப்பதற்கும், ஸ்திரீகள் பயங்கரமான அந்தகார நிலையில் இருப்பதற்கும் நாமே காரணராகின்றோம். ஸ்திரீகளை யெழுப்புங்கள்! பாமர ஜனக்கல்வியைப் பரப்புங்கள்! நீங்களும் எழுந்து தேச சமூகத்தையும் எழுப்புங்கள்! இதற்கு நேரான குறுக்குப்

பாஷை சுதேச பத்திரிகைகளை விருத்திசெய்வதுதான். உண்மையான உபயோகமுள்ள பத்திரிகைகளைக் கிளப்புங்கள்! ஏற்கனவே ஏதேனும் சுதேசபாஷா பத்திரிகைகளிருந்தால், ஸ்திரீகளுக்காகவும், பாமரஜனங்களுக்காகவும் அவற்றை விருத்திசெய்யுங்கள்! இவ்விஷயத்தில் ஏற்கனவே ஆரம்பம் செய்த ஒன்றிரண்டு பிரயத்தனங்கள் தவறிவிட்டனபோலும். ஏனெனில், மேலான பயிற்சியினையுடைய மாணாக்கர்கள் சுதேசபாஷைகளைத் தொடக்கூட வெறுக்கின்றார்கள். தாய்பாஷைக்குக் கௌரவம் கொடுக்கக் கற்றுக்கொள்ளுங்கள்! இந்தியச் சிறுவர்களது சங்கத்தின் ஆதரவில் ஹிந்தி பாஷைப் பத்திரிகையொன்று ஏற்படுத்துங்கள்! சென்னைக்குத் தமிழில் அல்லது தெலுங்கில் பஞ்சாபி பாஷையில் ஏற்படுத்துவது திறம். ஹிந்தி எழுத்துக்களாக இருக்கட்டும். முடிந்தவரையில் சம்ஸ்கிருத வார்த்தைகளையும் பாரசீக வார்த்தைகளையும் நீக்கிவிடுங்கள். உங்களுக்கு மாத்திரமே விளங்கக்கூடிய நடைகளை நீக்குங்கள். முழுமையும் விட்டொழியுங்கள். இயற்கையாகவே நினைப்பது போலவே எழுதிவிடுங்கள். கலாசாலை மாணாக்கர்கள் சிறு வியாசங்கள் எழுதியனுப்பலாம். நீ படிக்கும்போது உனக்குத் தென்படுகின்ற மேலான மனோபாவனைகளையும் சிறந்த உணர்ச்சிகளையும் சுய பாஷையில் கூறுவதற்குப் பழக்கம் செய்துகொள்! இப்படிச் செய்வது இவ்விஷயங்களைப் படிப்பவர்க்குப் பலன் படுவதைக்காட்டிலும் அதிகமாகவே உங்களுக்குப் பலன் கொடுக்கும். பிறர் திருஷ்டியில் படிப்பவர்களே பலனடைவார்களென்று எண்ணலாம்.

இந்திய பூமி ஜீவித்திருக்கவேண்டுமானால் ஸ்திரீகளுக்குக் கல்வி தாராளமாகப் பரவவேண்டும். உங்கள்

மாகாணத்தில் ஒரு ஸ்திரீயும் ஒரு எளியவனும் எழுத்து வாசனை யறியாதவர்களாகத் தங்கிவிடவேண்டாம். இந்த அறியீனம் தேசத்தைவிட்டு ஒழியட்டும். பத்திரிகையில் ஹிந்தி எழுத்தை இராமன் உபயோகப்படுத்தச் சொல்வது ஏனென்றால், கூடிய சீக்கிரத்தில் ஹிந்தியே தேசப் பொதுப்பாஷையாக ஆகிவிடக்கூடும். ஸ்திரீகளையும் எளியவர்களையும் படிப்புள்ளவர்களாக்குவது உங்களுக்கேற்பட்ட முக்கிய கடமையாகும். இந்தக் கடமையை நன்றாகச் செலுத்தினால் உங்களுக்கும் மேன்மையுண்டு. ஆனால், உங்களுக்கு மற்றொரு வேலை—முக்கியமாக நீங்களே எடுத்துக்கொள்ளவேண்டிய வேலை—இருக்கிறதை மறக்கக்கூடாது. விவசாயப் பயிற்சியும் தொழிலும் எங்கே அதிகம் கிடைக்குமோ அப்படிப்பட்ட தேசங்களுக்குச் சென்று அடைந்து இந்தியாவில் அந்த உபயோகமுள்ள அறிவைப் பரவச்செய்யவேண்டும்.

## மதம்.

குடும்பக் கடன், சமூகக்கடன், தேசியக் கடன் என்ற இவைகளே உங்களுக்கு ஏற்பட்ட கர்மகாண்டம். எந்தக் கர்மாவும், கௌரவமிக்க எந்தக் காரியமும், இருட்டில் நடத்தமுடியாது. இருளடர்ந்த (பாவத்தன்மை மிகுந்த) காரியங்களே இருட்டில் நடத்தலாம். பக்தி என்ற ஜ்வாலையுடன் பிரகாசம்பொருந்திய ஞானமும் சேர்ந்து உன்னிடம் காப்பாற்றப்பட்டாலன்றி உன்னால் யாதொன்றும் செய்யமுடியாது; சிறிது தூரம்கூட முன்னேற முடியாது. நாள்தோறும் உங்கள் காதுகளில் இடித்துக் கூறப்படும் விபரங்களெல்லாம் உங்கள் வாழ்க்

கையின் சரீரம்போலவே யாகும். ஆத்மாவின்றிச் சரீரம் நிற்க முடியாது. எந்தக் கிளர்ச்சியையும் ஜெயம் பெறுமாறு செய்விக்கும் சக்தியானது உயிர்பெற்ற பக்தியும் ஜ்வலிக்கின்ற ஞானமுமேயாகும். "பக்தி என்பது மகத்தானது; வாழ்க்கையைக் கெட்டிப்படுத்தக் கூடியது" என்று காலையில் கூறுகிறார். ஒரு தேசத்தில் எவ்வளவு பலமான பக்தி (நம்பிக்கை) யிருக்கின்றதோ அவ்வளவு வரையில் அத்தேச சரித்திரம் பயனுள்ள தாகிறது; ஆத்மசக்தி பெற்றதாகிறது; பெருமையுடைய தாகிறது. அராபியர்கள், ஒரு மகம்மது நபி, அந்த ஒரு நூற்றுண்டு; இவ்வளவுதான். உலகில் ஒருவர் கண்களிலும் அகப்படாத மறைந்த மணல்வெளிகளில் ஒரு நெருப்புப்பொறி விழுந்ததுபோலத் தோன்றியது. அவ்வளவுதான். மணலானது வெடி மருந்துபோல் வெடித்து ஆகாய மண்டலமெல்லாம் சூழ்ந்து, டேல்லி மாநகரம் முதல் கிரினேட் வரையிலும் பற்றிக்கொண்டு விட்டது. அல்லாஹோ அக்பர்! தெய்வத்தைத் தவிர வேறொன்றும் கிடையாது. உண்மையில் உயர்ந்த காரி யங்களெல்லாம் உள்ளே யிருக்கும் வாக்குக் கெட்டாத ஆழத்தினின்றும் உற்பத்தியாகின்றன. தெய்வ சிந்தனை யில் முழுகாமலும், அரைகுறையாகத் தெய்வ சிந்தை நிறைந்திருந்தால் முழுமையும் அதே நிலையில் நிற்கப் பிர யத்தனம் செய்யாமலும் இருப்பவன் எவனே அவன் ஜீவித்திருப்பவனல்லன்; பிணமானவனே.

---

## கக-வது, ஹிந்துமதத்தின் முற்கால நிலையும் தற்கால நிலையும்.

இந்தியாவின் முற்கால சரித்திரத்தை ஆராய்ந்து பார்த்தால், இங்கே இருண்ட இராப்பொழுது ஏற்பட்டதற்குக் காரணம்—ஆதிகாரணம்—தனிப்பட்டு நிற்கப் பிரியங் கொண்டதேயாகும். எந்தத் தேசத்திலும் இதே காரணந்தான் ஏற்பட்டிருந்தது. "இந்தியா என்ற அறைக்குள் பகல் வெளிச்சம் (ஜோதி) எவ்வளவு பெருமையுடன் விளங்குகிறது! ஓ, அது எனக்குச் சொந்தம்; என்னுடையது; எனக்கே உரித்தாகட்டும்." இப்படியே கூறிக்கொண்டு நாம் கதவுகளையும ஜன்னல்களையும் மூடிக்கொண்டோம். இந்தியாவின் (ஞான) ஒளியைச் சொந்தமாக்கிக்கொள்ளும் பிரயத்தனத்தில் அந்தகாரத்தை யேற்படுத்திக்கொண்டோம். கடவுள் எந்த மனிதனையும் கௌரவப்படுத்துவதில்லை. தனமும் ஒரு தேசத்திற்கே சொந்தமல்ல. (தத்துவமசி) ஒன்றுபட்டதன்மை என்ற உணர்ச்சியை நமது வாழ்க்கையில் சேர்த்துக்கொள்ள மறந்து விட்டோம். நமக்குள் பிரிவுகளும் பலஹீனமும் உண்டாகிவிட்டன. தேசத்தலைவர்களெல்லோரும் ஒரு பெரிய தவறு செய்துவிட்டார்கள்.

தன்னயம் பொருந்திய உரிமைகளைக் காப்பதில் அதிக கருத்துச் செலுத்தித் தமது குழந்தைகளுக்குச் சம மான தாழ்ந்த வகுப்பினர்களிடம் காட்டவேண்டிய தன்னயமற்ற கடமைகளை மறந்துபோனார்கள். எது எப்படியாயினும் ஆகட்டும். நன்றாகத் தூங்கியவர்கள் சுகமாக விழித்துக்கொள்கிறார்கள். இந்தியாவானது நீண்டகாலம் தூங்கிவிட்டது. தமோகுணமானது நிச் சயமாகத் தெறிக்கின்றது பாருங்கள்! மெதுவாகக் கிளம் பக்கூடும். ஆனால், கிளம்புவது நிச்சயம். பழைய சம் பிரதாயங்களெல்லாம் தற்காலம் ஏற்பட்டிருக்கும் மாறிய சந்தர்ப்பங்களுக்குத் தகுந்தபடி தாராளமாக ஒத்துவரு கின்றது.

முன்னேற்றமடைவது என்றால் கருத்தென்ன? என்ன அம்சங்கள் அதற்குத் தேவையென்றால், உருவங்க ளும் காரியங்களும் வெவ்வேறாக இருப்பதும், சிரத்தை யும் உணர்ச்சியும் ஒன்றாக இருப்பதுமே. ஹிந்து சமூ கத்தில் வேலையும் தொழிலும் அழகாக அணி வகுக்கப் பட்டு ஹிருதயமும் ஆத்ம சக்தியும் ஒன்றாக விளங்கிய காலத்தில் ஜாதிப்பிரிவு முறை யேற்பட்டது. ஆனால், நாளடைவில் ஆத்மாவைக்காட்டிலும் உருவமே பெரி தென மதிக்கப்பட்டது; தேசிய அமைப்பு மாத்திரம் காப்பாற்றப்பட்டது. இதனால் ஒழுங்கான அபிவிர்த்தி கெட்டுப்போய்க் குழப்பம் ஏற்பட்டது. அன்பு அல் லது ஒற்றுமை பிளவுபட்டுப்போய் வேலைகள் கலந்து கொண்டன. ஒரு ஜாதியைச் சேர்ந்தவர் மற்ற ஜாதிக ளின் தொழில்களை எடுத்துக்கொள்கிறார்கள். அப்படி யிருந்தும் பூர்வீக ஜாதியுணர்ச்சி மாத்திரம் நீங்காமல்

இன்னம் அதிகமாகவே ஹிருதய ஒற்றுமையை நீக்கிக் கொண்டு வருகிறது. மேல் மட்டத்துள்ள ஜாதியைப் பற்றிய பிரக்ஞை அளவுக்கு மீறிப்போய் உண்மையான ஆத்ம நிலையை மாயா சம்பந்தமான நாமரூப பந்தங்களி ஞல் மூடிவிடுகின்றது. சுருதி பலனற்றதுபோல மறைந்து ஸ்மிருதியே கொடுங்கோலாகிவிட்டது. ஆத்மாவுக்குப் பதில் எழுத்து ரூபமான விதி ஓங்கிவிட்டது. விதிக ளும் சம்பிரதாயங்களும் சேர்ந்த கர்மகாண்டமானது ஒரு தேச சமூகத்தின் சக்தியைச் சப்பிவிடுகிறது. விதைகளைக் காப்பாற்றும் வரையில் உமியானது அவசி யம் மூடியிருக்கவேண்டியதுபோல, விதிகளும் ஒழுங்கு களும் சிலகாலம் வரையில் அவசியம் உதவிக்கு வேண் டியவைகளேயாம். ஆனல், சில காலத்திற்குள் மாறி விடாவிட்டால் அவைகள் விர்த்தியைக் கெடுத்துவிடக் கூடிய கொடுமை பொருந்தியனவாயிருக்கின்றன. அன் புக்குரிய ஜனங்களே! மறக்காதீர்கள்; விதிகளும் ஸ்மிருதிகளும் உங்களுக்காக ஏற்பட்டவை; நீங்கள் அவைகளுக்காக ஏற்படவில்லை. நித்யமாகவுள்ள சுருதி யின் உபதேசங்களை எக்காலத்திலும் எங்கேயும் பர வச் செய்யுங்கள். உங்கள் ஸ்மிருதிகளை மாத்திரம் காலத்திற்குத் தக்க அளவு உபயோகப்படுத்திக்கொள் ளுங்கள். இந்தியாவில் நதிகள் நிலைமை மாறிவிட்டன; காடுகளெல்லாம் சாகுபடி செய்யப்படும் நிலங்களாக மாறிவிட்டன; தேசத்தின் உருவமே மாறிவிட்டது; கவர்ன்மெண்டு மாறிவிட்டது; பாஷை மாறிவிட்டது; ஜனங்களது நிறம் மாறிப்போயிற்று; இப்படிப்பட்ட மாறுந் தன்மையதான உலகில் சென்றுவிட்ட காலத்திய விதிகளையும் சம்பிரதாயங்களையும் நிலைநாட்டப் பார்க்

கின்றாய். முன்னே செல்லவேண்டியவன் எப்போதும் பின்னால் பார்த்தபடியே நடந்து சென்றால் துக்கத்திற்கே ஆளாவான்; அவன் ஒவ்வொரு அடியிலும் தடுமாற்றமே யடைவான்.

வாழ்க்கையின் அபிவிர்த்தியில் பாம்பரைக் குண மும் சந்தர்ப்பத்தை யொட்டிய நிலையும் சேர்ந்து வேலை செய்கிறது. தாழ்ந்த வகுப்பு ஜீவன்களிடம் பாம்பரைக் குணமே ஓங்கி நிற்கின்றது. மனிதனை மற்றப் பிராணி களினின்றும் ஸ்தாவர ஜீவன்களினின்றும் பிரித்துக் காட்டுவது எது? சந்தர்ப்பத்தை யொட்டிய நிலைக்குத் தகுந்தபடி நிற்கும் நிலை—அதாவது கல்வி—மேலோங்கி யிருப்பதேயல்லவா? அழகிய சிறு குழந்தையும் நாயி னது சிறு குட்டியும் சமமான அறிவினைம் படைத்தவை களேயாகும். சிறிய நாயானது தன் பிறப்பிலேயே தனக்கு வேண்டியதையெல்லாம் அழைத்துக்கொண்டு வந்துவிட்டது. [அதற்குமேல் யாதொன்றையும் அடை யாது.] சிறு குழந்தையோ சந்தர்ப்பத்தையொட்டியும் கல்வியின் மூலமாகவும் உலக முழுமையும் தன் ஆளு கைக்குள் கொண்டுவந்து சேர்த்துவிடக் கூடும்.

நீங்கள் காலத்திலும் இடத்திலும் வசிக்கின்றீர் கள்; இந்தியாவின் பூர்வீக ரிஷிகளது மரபில் உதித் திருக்கிறீர்கள். ஆனால், அவர்களது காலத்தில் நீங்கள் இப்போது இல்லையல்லவா? தற்காலம் நீராவியந்திரங்க ளும், நீராவிக்கப்பல்களும், தந்தி முதலியவைகளும் உங்களைக் கூர்மையுடன் நோக்குகின்றன. இருபதாவது நூற்றாண்டின் நூதன சாஸ்திரீகர்ளுடனும் வேலையான

ருடனும், ஐரோப்பா, அமெரிகா முதலிய கண்டத்தவருடன், தற்காலம் போராட்டம் செய்வதினின்றும் நீங்கள் தப்ப முடியாது. இந்த மாறிய சந்தர்ப்பங்களுக்குத் தகுந்தபடி நடந்துகொள்ள நீங்கள் உங்களைத் தகுதியுள்ளவர்களாகச் செய்துகொண்டாலன்றி உங்களால் தப்ப முடியாது. உங்கள் தேசத்து மிகமிகப் பழைய ஒளிக்குச் சமமான புது ஒளியை அங்கீகாரம் செய்துகொண்டு ஜீரணித்துக்கொள்ள நீங்கள் விரும்பாமற்போனால் பித்ரு லோகத்திற்குச் சென்று உங்கள் முன்னோர்களுடன் வசிக்கலாம். இங்கே என் தவக்கம்? போய் வரலாம், போங்கள்.

உங்கள் சமஷ்டி நிலையைக் கெடுக்கவேண்டுமென்பது இராமனுடைய எண்ணமன்று. ஒரு செடியானது வெளியிலுள்ள வாயு, தண்ணீர், எரு, மண் முதலியவற்றைக் கிரகித்துக்கொள்கிறது. அதனால் அச்செடியானது வாயுவாகவோ தண்ணீராகவோ மண்ணாகவோ ஆகிவிடுகின்றதா? இல்லை, இல்லை. அதுபோலவே, நீங்களும் வெளியிலுள்ள பதார்த்தங்களை யெல்லாம் கிரகித்து ஜீரணித்துக்கொண்டு, ஆதியிலிருந்து கிடைத்த ஜீவனாகிய சாந்தியென்பது உங்கள் ஹிருதயத்தில் துடித்துக் கொண்டே விளங்கும்படி செய்யுங்கள்.

தேசத்தின் பொருள் நிலைகளை நன்றாக உபயோகப்படுத்துமாறு பழக்குவதே கல்வியின் நோக்கமாக இருக்க வேண்டும். ஒழுங்கான கல்வியினால் ஜனங்கள் நிலத்தை அதிக மகசூல் தரும்படி செய்யவேண்டும்; சுரங்கப் பொருள்கள் அதிகம் வெட்டியெடுக்க வேண்டும்; வர்த்

தகம் அதிகமாகச் செழிக்குமாறு செய்யவேண்டும். தமது சரீரங்களால் அதிக சுருசுருப்புடன் வேலை செய்ய வேண்டும்; தம் புத்தியினால் திறமாகவும் சுயமாகவும் யோசனைகள் செய்யவேண்டும்; ஹிருதயங்களை அதிக பரிசுத்தமாகக் காப்பாற்றவேண்டும்; கைத்தொழில்கள் பலவகையாகச் செய்துவர வேண்டும்; தேச சமூகத்திற்குள் ஒற்றுமை பலப்படவேண்டும். இவைகளே கல்வியின் பயனாகவேண்டும். ஆபாசமான சண்டைகளை முதிரவிடுவதற்குப் பெரிய பெரிய பிரமாணங்களை எடுத்துக் கூறுவதும், வாக்கியங்களின் கருத்துக்கெடுமாறு பூர்விக சாஸ்திரங்களுக்குக் குயுக்தியாகப் பொருள் காணுவதும் நமது வாழ்க்கைக்குப் பயன்படாத பாடங்களையெல்லாம் படிப்பதும் கல்விப்பயிற்சியாகாது. அனுபவத்திற்குக் கொண்டுவர முடியாத அறிவை யடைதல் ஆத்ம சம்பந்தமான அஜீரண நோய்களை யடைந்ததாகும். மனதினிடம் ஜீரணசக்தி (அறிவை அனுபவத்தில் கொண்டுவரத்தக்க பலம்) என்பதே கிடையாது எனப் பொருளாகும்.

மேல் நோக்காகக் கவனிப்பவரிடமிருந்து பலமான ஆட்சேபனைகளும் இடையூறுகளும் லேர்ந்தபோதிலும் —இடைவிடாத தடைகள் ஏற்பட்டுக் கொண்டேயிருக்கையில்—ஹிந்துக்கள் சந்தர்ப்பங்களுக்குத் தகுந்தாற்போல் நிலைமையை ஒழுங்குபடுத்திக் கொள்ளவேண்டிய கல்வியை அடைந்துவருகிறார்கள் என்பது திருப்தியைத் தருகின்றது. முற்காலத்திய சமூக விதிகளின் கடுமை குறைந்து வருகின்றது. ஜாதிப்பிரிவு முறை இயற்கையில் மாறிக்கொண்டே வருகிறது. மேனாட்டு

நூதன சாஸ்திர முறைகளைக் கண்டு பயப்படாமல் அவைகள் பிரம்மவித்தைக்குத் தோழமை கொள்கின்றன வெனவே கருதுகிறார்கள். ஹிந்துக்களின் விவாகமுறையில் மிகுந்த வைதிகர்களின் தலைமையிலேயே மணமக்களின் வயதை அதிகப்படுத்தக்கூடிய விதிகளையே உண்டாக்கி வருகின்றார்கள்.

இந்தியாவிற்கே நூதன முறையாக ஏற்பட்ட அமைப்பினராகச் சாதுக்களைச் சொல்லலாம். நீர் நிலையின் மேல் மட்டத்தில் பாசி அடர்ந்து விடுவதுபோல, இந்தியாவெங்கும் தற்காலம் ஐம்பத்திரண்டு லட்சத்துக்குக் குறையாமல் சாதுக்கள் நிறைந்துவிட்டார்கள். அவர்களிற் சிலர் உண்மையாக அழகிய தாமரை மலர் போன்றவர்களே, ஏரிக்குப்பெருமையைத் தருபவர்களே. ஆனால், ஏராளமான கூட்டத்தார் நோயை யுண்டாக்கும் அழுக்குப் போன்றவர்களா யிருக்கிறார்கள். தண்ணீரானது ஓட்ட மெடுக்கட்டும்; அதாவது, ஜன சமூகம் உற்சாகங்கொண்டு ஜீவநாடியைக் காட்டட்டும். அப்போது மேலே மூடியிருக்கும் அழுக்குகள் அடித்துக் கொண்டு போகப்படும். இந்திய சரித்திரத்தின் முற்கால ஸ்திதிக்குத் தக்கபடி சாதுக்கள் விர்த்தியானார்கள். ஆனால், இப்போது சீர்திருத்தங்கள் நடைபெற்று வருகையில், கிருஹஸ்தர்களின் உணர்ச்சிகளே மாறிக்கொண்டு வருகின்றபடியால், சாதுக்களும் தம் நிலைமையை மாற்றிக் கொள்கிறார்கள். தேச சமூகத்தில் அட்டையைப் போல் ஒட்டிக்கொண்டு நிற்பதற்குப் பதில் சாதுக்கள் இப்போது வேறொன்றும் முடியாவிட்டாலும் தேச சமூக விருட்சத்திற்குத் தமது மனத்தையும் சரீரங்களை

யும் எருவாகவாவது உபயோகமாகும்படி செய்து வருகிறார்கள். தொழில் செய்வது கௌரவம் என்று உணர்வதும், தன்னயமற்ற சேவையே ஆத்மபயிற்சியென்றும் இதுவரையில் கீதையைப் படித்த இலட்சக் கணக்கான மாணவர்கள் வாய்மொழியாகக் கூறிவந்தார்கள்; இப்போது அநுபவத்தில் முடிந்தவரையிலும் கொண்டு வருகிறார்கள். உன் கர்மாவே, காரியங்களே, நீ செய்யும் தெய்வ வணக்கமாக இருக்கட்டும்; தன்னயத்தையெல்லாம் அறவே நீக்கிவிடு; பலனை அபேட்சிக்காதிரு; நன்மை தீமைகளைச் சமமாகப் பார். அதுவே யோகம். ஆழ்ந்த பக்தியும் கூர்மையான விவேகமும் சாதுக்களிடமாத்திரமல்ல; சில கிருகஸ்தர்களிடமும் காணப்படுகின்றன. இந்தியாவின் முற்கால நிலையையும் தற்கால நிலையையும் மேலாகவேனும் திறமாக அறிந்த ஒவ்வொருவருக்கும் இந்தியரில் படித்த வகுப்பினருடைய மதம் எவ்விதம் இருக்கவேண்டுமென்பது விளங்கும்.

## கர்மா, அன்பு அல்லது பக்தி, பற்றின்மை.

உண்மையான கர்மா அல்லது காரியத்தை உண்மையான அன்பினின்றும், உண்மையான ஞானத்தினின்றும், வேறுபடுத்த முடியாது. சுருதியின் தத்துவம் அல்லது அநுபவ வேதாந்தம் என்ன கூறுகிறது? உனது வாழ்க்கையின் ஒவ்வொரு செய்கையும் உணர்ச்சியும் எண்ணமும் எக்ஞமென்று கருதப்படவேண்டும்; தேவர்களுக்குப் பிரீதியாக விடப்படவேண்டும். வேதாந்த பாஷையில் 'தேவன்' என்ற வார்த்தைக்குப் பொருள் 'பலவித இயக்கங்களுக்கும் ஜீவனும் ஒளியும்

கொடுக்கின்ற சக்தி' என்பதுதான். ஒவ்வொரு வித இயக்கத்திற்கும் காரணமான இந்திரியங்களின் தேவதை யென்றால் ஜகத்திலுள்ள இந்திரிய சமஷ்டி யென்னலாம். ஆதியாத்மிகம், ஆதிதெய்விகம் எண்பதைப் பார்த்துக் கொள்ளுங்கள். சக்ஷு தேவதை யென்பது சமஷ்டியின் பார்வை; இதற்கு ஆதித்தியமென்று பெயர்; இதற்கு வெளியடையாளமாக மாத்திரமே சூரியன் விளங்கும்; உலகத்திற்குக் கண் போன்றது சூரியனாதலால் கைகளுக்குத் தேவதை (கைத்தொழிலுக்குத் தேவதை) இந்திரனாவான். இப்படியே மற்ற தேவர்களும். தேவர்களுக்குச் செய்யவேண்டிய உண்மையான யக்ஞமாவது என்னவெனில், தனித்தனி மனிதரது இந்திரிய காரியங்களையும் சமஷ்டி இந்திரிய காரியங்களுக்கு அர்ப்பணம் செய்வதுதான். இந்திரனுக்குப் பிரீதியாக்குவது என்றால், பூமியிலுள்ள கைகளையெல்லாம் ஒழுங்குபெறச் செய்வதாகும். ஆதித்திய தேவருக்கு அர்ப்பணம் செய்வதென்றால், எல்லா திருஷ்டியிலும் கடவுளே விளங்குகிறார் என்பதை யறிவது; எவருடைய திருஷ்டியையும் அவமதியாமலிருப்பது உங்கள் திருஷ்டியை ஆதித்திய திருஷ்டிக்கு அப்படியே அர்ப்பணம் செய்துவிட்டு தன்னயமெல்லாம் நீங்கும்படி செய்து, சமஷ்டியாகிய ஆதித்தியனே உங்கள் கண்கள் மூலமாகப் பிரகாசிக்குமாறு விட்டுவிடுதல். பிரகஸ்பதிக்கு ஊழியம் செய்வது என்றால், எனது அறிவைத் தேசப் பொதுவிற்காக அர்ப்பணம் செய்தல்; அதாவது, தேசத்தவர்களினின்றும் நான் தனிப்பட்டவனல்லன் என்ற உணர்ச்சியை உண்டாக்கிக்கொள்வது. எனக்கென்று பிரத்தியேகமான நன்மையைக் கருதாமல் ஜனங்களின் நன்மையுடன் கலந்து

கொண்டு அவர்களுடைய ஆநந்தத்தில் முழுகிவிடுவது. சுருக்கிச்சொல்வோமானால் யக்ஞம் என்பது அனுபவத்தில் காரியரூபத்தில் அந்நியனையும் தனக்குச் சமமாகவே கருதல் என்று பொருள்படும். எனது சிறிய அகத்தை சமஷ்டியில் கலந்துவிடுவதாகும். தன்னயத்தைத் தேடும் அகத்தைச் சிறுமையிலறைந்துவிட்டு சமஷ்டி ஜீவனாகிய ஆத்மாவை அனுபவத்திற்கு எழுப்புதல். இக்காரியத்தில் ஒரு பக்கம் பக்தியென்றும் மற்றொரு பக்கம் ஞானமென்றும் சாதாரணமாகக் கூறப்படும். இவ்வித அனுபவம் பூர்த்தியானால் தத்துவமசியின் ஆநந்த நிலைமையை அறிகிறான்.

நீ ஒரு தேசபக்தனாக விரும்புகிறாயா? உன் தேசத்துடனும் தேசஜனங்களுடனும் ஒன்று பட்டு நின்றுவிடு; அவர்களுடன் ஐக்கியத்தன்மையை அனுபவத்திற்குக் கொண்டுவா. உன்னையும் உன் தேச சமூகத்தையும் பிரித்துக்கொண்டு உனது தனித்த வியஷ்டியானது மெல்லிய கண்ணாடிபோலக்கூட குறுக்கிடா திருக்கட்டும். உத்தம குணம் பொருந்திய ஆத்ம தீரனாக நின்று உன் தேசத்தி னிமித்தம் உன் ஜீவனையும் துறக்கச் சித்தமாக நில். சிறிய அகத்தைத் துறந்துவிட்டு, தேச சமஷ்டியுடன் கலந்துகொண்டு எதை யுணர்ந்தாலும் உன் தேசமும் கூட உணரும். நீ முன் சென்றால் தேசமும் பின் தொடரும். திடமாக இருந்தாயானால் தேசத்தவர்களும் திடமாக இருப்பார்கள். உனது பலம் அவர்களிடம் பாவிவிடும். நான் இந்திய சமூகம் என்ற உணர்ச்சி உண்டாகட்டும். பாரத பூமியே எனது சரீரமென்ற உணர்ச்சி எனக்கு உண்டாகட்டும். காமரின் முனையே

பாதங்கள். ஹிமாசலமே எனது தலை. என் (தலை) மயிரி னின்றும் கங்காநதி உற்பத்தியாகிறது; தலைமயிரினின் றும் பிரம்மபுத்திர நதியும் இந்து நதியும் கிளம்புகின்றன. விந்திய பர்வதங்களே என் இடுப்பைச் சுற்றிப் பிணைக் கப்பட்டிருக்கின்றன. கோரமாண்டல் என்ற கருமணற் கடலோரம் எனது வலது கால்; மலையாளப் பக்கமே எனது இடது கால். நானே இந்திய பூமி முழுமையும். கிழக்கும் மேற்கும் எனது இரு கரங்களாகும். இக்கரங் களை வீசி நான் மனிதவர்க்கத்தையே அணைத்துக் கொள்கிறேன். என் அன்பு உலகெங்கும் பரவுகின்றது. என் சரீரத்தின் அமைப்பு இவ்விதமிருக்கின்றது. நின்று கொண்டு எட்டியமட்டிலும் நெடுந்தூரம் நோக்குகின் றது. ஆனால், எனது ஆத்மனே எல்லாவற்றிற்கும் ஆத்ம னாக இருக்கின்றது. நான் நடக்கும்போதும் உணரும் போதும் பேசும்போதும் இந்தியாவே அக்காரியங்களைச் செய்வதாகத் தோன்றுகிறது. நானே இந்தியன். நானே சங்கரன். நானே சிவன். இதுவே தேசாபிமானத்தின் மேலான அனுபவம்; இதுவே அனுபவ வேதாந்தம். சாந்தி, சாந்தி, சாந்தி.

---

## கஉ-வது, எக்ஞம் செய்வதன் இரகஸ்யம்

---

'பழைய கால வழக்கப்படி எக்ஞம் செய்யு முறைக ளைக் கிளப்பிவிட்டுத் தேச ஐக்கியத்தை உண்டு பண்ண லாமா ?" என்று புஷ்கரராமனை (என்னை)க் கேட்டார்கள். அப்போது இராமன் வசித்த இடம் பிரம்மாவுக்குச் சிறந்த பெரிய எக்ஞ பூமியாக இருக்கும் பரதகண்டமே. இவ்விதம் எப்போதே கேட்டதற்கு இராமன் கூறும் பதில் மொழிகள் பின் வருமாறு :—

ஹிமாசலத்தில் செழித்தோங்கி வளருகின்ற மரங் களுக்கு எனது உஷ்ணத்தையும் ஒளியையும் கொடுத்து விட்டேன்; அதைக்கொண்டே நீங்களும் திருப்தி யடைந்து வளரவேண்டும்; உங்களுக்கு மறுபடியும் அவ் விதம் மேன்மையையும் சக்தியையும் கொடுக்கமாட் டேன் என்று பம்பாயிலுள்ள மாமரங்களிடம் சூரிய பகவான் கூறினால், இந்த மாமரங்கள் செழித்தோங்கி விர்த்தியாகா. தோட்டத்திலுள்ள ஆப்பிள் பழ மரங்களின் மேல் வீசும் சூரிய உஷ்ணத்தைக் கொண்டு தடாகத்தில் வளரும் அல்லி மலர்கள் புஷ்பித்து விடுமோ ? இதே மாதிரி, புத்தபகவான், ஏசுகிறிஸ்து, முகம்மது நபி முதலியவர்களிடம் தோன்றிய ஞானத்

தைக் கொண்டு ஷேக்ஸ்பியர், நியூடன், ஸ்பென்ஸர் முதலியவர்கள் வசிக்க முடியாது. ஆதலால், நாமும் நமது (தற்கால) விஷயங்களையெல்லாம் நமது முயற்சியைக் கொண்டே தீர்மானித்துவிடவேண்டும். முற்காலத்தில் விளங்கிய நமது மிக மேலான மதிப்புக்குரிய முனிவர்கள், மகரிஷிகள் முதலானவர்களுடைய திருஷ்டியினால் பார்த்தல் நமக்கு ஒளியைத் தராது. [நாமே அறிவு பெற்றுப் பார்க்கவேண்டும் என்பது கருத்து] ஒவ்வொரு ஸ்மிருதியாகிய சட்டமும் பின் வருமாறு கூறிக்கொண்டு நிற்கிறது: "நேற்று நாம் அப்படி யிப்படி ஒப்புக்கொண்டோம். இந்த விதி இப்போது எப்படியிருக்கிறது? எவ்வாறு அநுபவத்தில் தெரிகிறது?" ஒவ்வொரு ஸ்தாபனமும் அவ்வக்காலத்தில் ஏற்பட்ட நாணயங்களுக்குச் சமம். நமது பிரதிமையை அதில் பதிப்பிக்கிறோம். சீக்கிரமே அது அழிந்து தேய்ந்து போகிறது; சீக்கிரமே அது நாணய சாலைக்குத் திரும்பி விடவேண்டும். பொருள்நிலைகளை உண்டாக்கியும், அழித்தும், மறுபடியும் உண்டாக்கியும், இப்படித் தொழில் நடத்துவதில் பிரகிருதியானது சந்தோஷங் கொள்கிறது. ஜீவ நாடி. ஓடிக்கொண்டிருக்கிறது என்பதற்கு அடையாளமே இடைவிடாத மாறுந் தன்மைதான்.

தமது பிற்கால வாழ்க்கையைப் பின்னே தள்ளுகிறவர்கள் மிகவும் பரிதபிக்கத்தக்கவர்கள். அவர்கள் வேலையெல்லாம் முன்னேயிருக்கப் பின் நோக்குவதிலேயே திருஷ்டியைச் செலுத்துவதேனோ? நான் கூறப் போகும் விஷயங்களுக் கெல்லாம் கீதையிலிருந்தும் மனுஸ்மிருதியிலிருந்தும் பல ஆதாரங்கள் காட்ட முடி

யும். ஆனால், காரணமாகவே ஜாக்கிரதையாக அவ்விதம் ஆதாரங் காட்டுவதை விளக்கிவிட்டேன். ஏனெனில், இதற்கு எதிர்க்கட்சிக்கும் ஆதாரங்காட்டப்பிரயத்தனம் செய்து பாதையினின்றும் விலகி வார்த்தைகளாகிய காய்ந்த எலும்புகளைக் கடிக்கப் பிரயத்தனஞ் செய்வார்கள். மேலும், அப்படிச் செய்தல் தவறான முறையில் கல்விப் பழக்கம் ஏற்படுமாறு செய்துவிட உதவிசெய்து பாவத்தைத் தரும். தவறு முறை ஏதுவென்றால், விஷய விசாரணையை உள்ளபடியே செய்வதற்குப் பதிலாகப் புஸ்தகக் கல்வியையே பிரதானமாக விளங்கச் செய்யும். மகா புருஷரான சங்கரர் செய்த பெரிய பிழை இது தான். அவர் தமது ஒளியைப் புதருக்குள் ஒளித்துக் கொண்டார். சுயமான அனுபவமே சிறந்த பிரமாணமாக இருக்க அவரது சுய அனுபவத்தில் விளங்கிய உண்மைகளுக்கெல்லாம் ஆதாரங் காட்டவேண்டிப் பழைய நூல்களை ஏன் கசக்கவேண்டும்? இவ்விதம் ஏன் காலத்தை வீணாக்கவேண்டும்? பிறகு வந்த மற்றவர்களும் அதே வார்த்தைகளைப் பிடித்துக்கொண்டு, அதே நூல்களிலிருந்து தமக்கு வேண்டிய பொருள்களைக் கிரகித்து வந்தார்கள். இவ்வித காரியங்கள் நல்லெண்ணத்துடன் செய்யப்பட்டாலும் உண்மையின் மார்க்கம் தடைப்படுமேயன்றி வேகங்கொள்ளமாட்டாது. இந்தியாவின் தற்கால துக்கங்களுக்கெல்லாம் காரணம் இயற்கை யமைப்பைத் திருப்பிவைத்தது தான்; பழைய புத்தகங்கள் என்ற சாமைகளுக்கு அடிமையாக ஜீவனையே அமைத்துக்கொண்டது தான். சுருதி என்ற சிறந்த தாயின் அவஸ்தையைப் பாருங்கள். ஒரு புத்திரன் அழகிய மயிரைப்பற்றி ஒருபுற மிழுக்க, மற்றொரு புத்

திசன் வேறொருபுறமிழுக்க, மூன்றாமவன் மயிரைக் கெட்டியாகப்பற்றி மறுபடியும் வேறொருபக்கமிழுக்க, இப்படியே இழுத்துக்கொண்டு நிற்கிறார்கள். ஒவ்வொருவரும் தாம் கூறவேண்டியதை யெல்லாம் சுருதியின் பெயராலேயே கூறிவிடுகிறார்கள். அனுபவதிடமாகிய சிறந்த குணத்தில் சத்திய நெறியைக் குறைவுபடுத்திவிடுகிறார்கள். பூர்வகால இந்தியாவில் விளங்கிய ஏ முனிவர்களே! மகரிஷிகளே! இப்படியா காலம் மாறிவிட்டது. உங்களது குலத்திலுதித்த புத்திரர்கள் தங்களுக்குத் தேவையான காரியங்களைப் பூர்த்தி செய்துகொள்ள பழைய விதிகளையா தேடுவது? வழக்கத்தி லிராத பாஷையின் இலக்கணத்தையா அநுஷ்டிப்பது?

அருமைத் தோழர்களே! விதிகளும் ஸ்தாபனங்களும் மனிதனுக்காக ஏற்பட்டவை; மனிதன் அவைகளுக்காக ஏற்பட்டவனல்லன். 'சரியான பாஷ்யங்களைக் கொண்டு பிற்காலத்தையும் முற்காலத்தையும் பிணைத்துப் பின்னலாம்' என்று சிலர் கூறுகிறார்கள். எவ்வளவு அழகிய யோசனை; எவ்வளவு நயமாகக் கூறப்படுகிறது. பழைய உடைகளில் ஏற்கனவே ஏராளமான தையல்களும் ஒட்டுகளும் கிடையாதோ? உண்மை அல்லது சத்தியம் விளங்குவதற்குச் சாதகமும் உதவியும் வேண்டுடுமோ? உலக முழுமையும் சூரியனை (ஒளியை)ச் சுற்றிச் செல்லட்டும். சூரியன் உலகைச் சுற்ற வேண்டாம். நூதனமாகக் கண்டு பிடிக்கப்பட்ட பிரகிருதியின் இரகஸ்யங்களையெல்லாம் கிறிஸ்தவ வேதங்களைப் போன்ற மத சம்பந்தமான புத்தகங்களின் பாஷ்யமென்று கூறலாமோ? இப்படிச் செய்து முற்காலத்தையும் பிற்காலத்

தையும் இணைக்க முடியுமோ? கடவுளிடமிருந்து கிடைக்கப் பெற்ற பூர்வகாலத்துக் கிரந்தங்கள் அப்படியே இயற்கையில் விளங்கவேண்டும். கடவுளைத் தருந்த அளவு நம்பிவிடலாம். இப்பொருள் கொண்ட வாசகங்களைக் கூறிவிட்டு உலகமானது ஒரு பிழையிலிருந்து மற்றொரு பிழைக்குப் போய்க்கொண்டே ஆயிரக்கணக்கான வருஷங்கள் காத்திருக்குமாறு விடமாட்டார். அவரது பொருளை விளக்கவேண்டியதற்காக பாஷ்யகாரர்களும் தாமே பட்சபாதமில்லாத நீதிபதிகள் என்று கூறிக்கொள்ளும் மதாசாரியர்களும் வருகிறவரையில் உலகம் காத்திருக்க விடமாட்டார். இதற்காக நியாய விரோதமாகத் தொழில் செய்யும் வக்கீல்கள் தேவையில்லை. அதிகாரத்தால் உண்மையை நிலைநாட்டிவிட முடியுமா? சூரியனைக் கண்டுபிடிக்க விளக்கொளி வேண்டுமோ? ஏசு கிறிஸ்து, மகம்மது நபி, புத்தன், வேதங்கள் இவர்கள் எல்லாம் வந்து சாட்சியான போதிலும் அதற்காக ஒரு கணக்கின் ஒழுங்கு அதிக பலம் பெற்றுவிடுமோ? பௌதிக சம்பந்தமான ரசாயன உண்மைகளை ஆராய்ந்து பார்க்கும் சக்தியால் அறிகிறோம். அவற்றினிடம் நம்பிக்கை வைத்துக்கொள்ளுங்கள் என்று மூளையைக் கனப்படுத்துவது பாபமல்லவா? சென்ற காலத்திலும் தற்பொழுதிலும் வருங்காலத்திலும் ஒரே மாதிரி இருக்கும் இயல்புடையது என்று உண்மையின் தத்துவம் கூறப்படுகின்றது. இந்த உண்மையை ஒரு காலத்திலேற்படும் விஷயத்தோடு கலந்துவிடவேண்டாம். உண்மை அல்லது சத்தியம் தானே விளங்கவேண்டும். ஆனால், ஒரு காலத்தில் சம்பந்தப்படும் விசேஷத்தை ஆதாரத்தால் நம்பலாம். வேதாந்தத்திற்கு ருஜுவும் நியாயவாதமும் தேவையாகுமோ?

அதைச் சரியானபடி கூறுவதே போதுமான ருஜுவாகும். அழகு என்ற குணத்திற்கு வசீகரசக்தி வெளியிலிருந்தா புகுந்துவிடும்? அதற்கு பிரச்சாரம் வேண்டுமோ?

மோகத்தை எழுப்பி வசீகரம் செய்யத்தக்க பாடல்களைப் பாடுதல், தமோகுணத் தூக்கத்தையே விர்த்தி செய்யக்கூடிய இனிய தாலாட்டுகளைப் பாடுதல், பாமர ஜனங்களுக்கு எது ருஜுவென்று கண்டு கிளறிக்கொண்டிருத்தல், அந்தகார நிலையைச் சிறந்ததென்று புகழ்தல், ஆகிய இவ்வித காரியங்களால் நம்மைச் சுற்றி ஏராளமான கூட்டம் பின் தொடரச் செய்வது என்பது மிகக் கடினமான காரியமல்ல. ஆனால், சத்தியம் ஒன்றே உண்மையானது. மற்றப்படி சலித்தும் சலியாமலும் இருக்கும் சராசரங்களின் ரூபங்களெல்லாம் சத்தியமல்ல; இவ்வித (அசத்தியப் பொருள்களுக்காக)த் தோற்றங்களுக்காகச் சத்தியத்தையே தியாகம் செய்துவிடுவது துக்ககரமானது. எப்படியாவது சத்தியம் தெரிந்து விளங்கட்டும். சத்தியமாகிய சூரியனுக்கு எப்படி உதயமாக வேண்டுமென்று தெரியும். அது சுபாவத்துடன் சலித்துக்கொண்டும் இடித்துக்கொண்டும் உலுக்கிக் கொண்டும் செல்லட்டும். வெடி குண்டுகளாகிய கீதத்தால் நீண்டகாலத் தூக்கத்தை எழுப்பட்டும். நானே சத்தியப்பொருள். ரூபமாகிய சரீரத்தை உயர்த்துவதற்காக நான் என்னை (ஆத்மாவைக்) கொலை செய்து கொள்வேனோ?

இனி, எக்ஹம் என்பதைப்பற்றிக் கூறுவோம். பலவித நிலைமைகளினின்றும் தனித்தனியாகவும் ஒரு சார்பி

யில்லாமலும் தர்க்கம் செய்து ஆராய்வோம். எக்ஞம் செய்வதில் சாதாரணமாக அறியப்படுகிறபடி ஆகுதி செய்தல் மிகவும் முக்கியமானதென்பது எவருக்கும் தெரியும். தற்காலம் யாகங்களைத் தாங்கிப் பேசுகிறவர்கள் கூறுகிறபடி சாதாரண கட்சி யென்னவெனில், "ஆகுதி செய்தால் ஆகாயம் சுத்தமாகிறது; மனதிற்கு இனிய வாசனை வீசுகிறது" என்கிறார்கள். இது பொருத்தமானதல்ல. மூக்கிற்கினிமையைத் தரும் வாசனைகளும் மற்ற போதைச் சரக்குகளைப் போன்றவைகளே; தேகக் கூற்றைக் கெடுக்கும் அம்சங்கள். தற்காலத்திற்கு ஊக்கத்தைக் கிளப்பிவிட்டு மறுபடி காரியம்செய்ய ஊக்கத்தைக் குறைத்துவிடும். சுறுசுறுப்பைத் தரும் உணவுகள் எல்லாம் பிற்காலத்தில் நம்மிடம் உபயோகமாகும் சக்திகளையெல்லாம் வட்டிக்கு வட்டியாகச் சேர்த்து ஒருங்கே எடுத்துக்கொண்டு திரும்பவும் இந்தக் கடன்களைக் கொடுப்பதில்லை.

முற்காலங்களில் இந்தியாவில் காடுகள் மிகுதியாகவும் மனிதவர்க்கம் குறைவாகவு மிருந்தன. அப்போது கிருதம் ஆகுதி செய்து எரிக்கப்பட்டால் கரிய மலவாயு முதலியன உற்பத்தியாகி மரஞ்செடிகளுக்கு வாயு மூலமாக உணவாகும். இக்காலங்களில் நிலைமை தலை கீழாக்கப்பட்டிருக்கிறது. காடுகளே இல்லையென்று கூறலாம். ஜன நெருக்கமே அதிகமாக இருக்கின்றது. அதனால் அளவுக்கு மிஞ்சிய கரி மலவாயு வாயுமண்டலத்தில் நிறைந்திருக்கிறது. அதனாலேயே ஜனங்கள் சோம்பித் திரிகின்றார்கள். இந்தியாவிற்குத் தற்காலம் தேவையாயிருப்பது பிராணவாயுவேயன்றிக் கரிய மலவாயுவன்று.

ஆகுதி செய்வதால் வாயு மண்டலம் எப்படி மாற்றப் படுகிறதென்றால், ஜனங்களுக்கு உணவுப் பொருள்களால் என்ன நிலைமை யுண்டாகிறதோ அதேமாதிரி தான். விலைபெற்ற நெய்யை, மூட்டப்பட்ட அக்னியில் வீணாக்குவதற்குப் பதிலாக இந்தியாவிற் பிறந்த லட்சக் கணக்கான ஜனங்களது சரீரத்தையே தின்றுகொண்டு வருகிற ஜாடராக்னியிடம் காய்ந்துபோன ரொட்டித் துண்டுகளையாவது ஏன் ஆகுதி செய்யக்கூடாது? இவர்கள் பசியால் வருந்துகின்ற ஜீவனுடன்கூடிய நாராயணர்களல்லவா ? அவ்வித ஆகுதியே இந்தியாவில் தேவையாயிருக்கிறது. ஆனால், ஒரு விசேஷம் கவனிக்கத்தக்கது. ஒரு நாளைக்கு ஆயிரக்கணக்கான ஏழைகளுக்கும் அன்னம் போடுவதால் என்ன பலன் ? விவேகமற்ற இவ்வித தர்மம் மரியாதை பெற்ற வறியர்களையே விர்த்தி செய்கிறது. விவேகமில்லாத தர்மத்தால்தான் இந்தியாவில் இவ்வளவு துக்கமும் ஏற்பட்டது. ஒரு பிரஞ்சு கிரந்த கர்த்தா கூறுகிறார் : தர்மத்தால் எவ்வளவு துன்பம் நீங்குகிறதோ அதில் பாதி துன்பத்தைப் புதிதாக அது உற்பத்தி செய்கிறது ; அப்படி உற்பத்தி செய்த துன்பத்தில் பாதியைக்கூட தர்மத்தால் விலக்க முடியாது. தர்மமென்பது என்ன எண்ணத்துடன் செய்யப்பட்டாலும் பலனையும் கவனிக்கவேண்டும். விடாப்பிடியாகத் தொல்லைப்படுத்துகிற பிச்சைக்காரனிடம் சிறு நாணயத்தைக் கொடுத்துவிடுகின்ற பலஹீன ஹிருதயம் படைத்த யாத்திரிகனும், தன்னைப் புகழ்ந்து கொண்டு அடுத்த உலகத்திற்குச் சிறு புண்ணியத்தை ஆத்மாவிற்குச் சம்பாதித்ததாக நினைக்கின்றான். எப்படியாவது போகட்டும். இவ்வுலகத்தில் தேச சமஷ்டி

க்கு விரோதமான காரியத்தைச் செய்து முடித்து விட்டான் என்பதற்குச் சந்தேகமேயில்லை.

சரியான எக்ஞம் இன்னதென்று அறிந்து செய்ய வேண்டியதே நமது வேலை. எளியவர்களைக் காத்து அவர்களுக்கு ஊழியம் செய்வதேயாகும். இந்த ஊழியத்தை யும் செய்யும்போது அது தன் காரியத்தையே கெடுத்துக் கொள்ளாதவாறு செய்து முடிக்கவேண்டும். ஒரு மனித னுக்கு நீ செய்யக்கூடிய பெரிய உதவியெல்லாம் அவ னுக்கு அறிவைத் தருவதுதான். இன்றைக்கு ஒருவ னுக்கு உணவளிக்கலாம்; நாளைக்கு மறுபடி பசியெடுத்து விடும். அவனுக்கு ஒருதொழிலைக் கற்றுக்கொடு; அவன் ஜீவதசை முழுதும் சம்பாதித்துச் சாப்பிட்டுவிடும்படி செய்கிறாய். கொடுக்கும் அறிவும் வாழ்க்கையில் இன் பத்தையே தரவேண்டும். நல்ல பலன்களையே கொடுக்க வேண்டும். ஒவ்வொரு இந்தியனும் அந்தஸ்திலும் தனத்திலும் அறிவிலும் பதவியிலும் தனக்கு கீழ் இருப்பவர்களைத் தன் சொந்தக் குழந்தைகளைப்போல் பாவிக்கட்டும். பிரதி பலனை அபேட்சிக்காமல் அவர் களுக்கு உதவி புரியட்டும். உதவி புரியும் பாக்கியம் பெற்றோமென்று தாய்க்குச் சொந்தமாகிய உன்னத பெருமையே சன்மானமாக இருக்கட்டும். ஆத்மாவுக் குத் தேவையான உணவு—தைரியத்தையும், அறிவு அன்பு என்பவற்றையும்—கொடுத்துதவும் பாக்கியம் கிடைக்கட்டும். இதுவே மகத்தான நிஷ்காம்ய யக்ஞம்.

இந்திய பூமியின் கர்மகாண்டத்தைப்பற்றி விரி வாகப் பிறகு மற்றொரு சமயம் கூறுவோம். வெகு

காலங்களுக்கு முன் சமூகமும் இவ்வளவு செயற்கை யழகுகளைப் பெற்று விளங்கவில்லை. ஊண், உடை, குடியிருப்பு வசதிகளிலும் பழக்க வழக்கங்களும் மனப் பான்மையும் இந்தியஜனங்களின் கவனத்தை இழுத்த தில்லை. இப்பொழுதும் காஷ்மீரதேசத்தி லிருப்பது போல பல விருட்சங்கள் ஏராளமாக வளர்ந்திருந்தன. ஜனங்களும் வஸ்திரமின்றியே இருக்கக்கூடிய காலம் அடர்ந்த விருட்சங்களும் குகைகளுமே வாசஸ்தலமாக இருந்த காலம், அப்படிப்பட்ட காலங்களில் சரீர சக்திக ளும் மனோ சக்திகளும் வேறு போக்கின்றி கடவுள்க ளுடன் சம்பந்தம் வைத்துக்கொண்டன. பலவித யாகங்களைச் செய்து வந்தார்கள். இந்த யாகங்கள் ஆதி யில் தெய்வங்களுடன் நியாயமான வர்த்தக முறையைத் தவிர வேறு இல்லை. ஒழுங்காக நடந்து வந்த தொழில் இதில் பல்லைக் காட்டித் திரிவதும், இழிவாக நடந்து கொள்வதும், குனிந்து கொடுப்பதும், தனனைத்தான் அவமதித்தலும், பிச்சை கேட்பதும் கிடையா. முன் னோர்கள் அறிந்தபடி பிரகிருதி தத்துவங்களின் தேவ தைகளுடன் சமத்துவ நிலையில் திடமான ஒழுங்குடன் நடத்தப்பட்ட உருவகம் செய்யப்பட்ட தேவதை களுடன் வர்த்தகம் நடத்தப்பட்டதென்றே கூறலாம். ஆனால், தற்காலத்திய தொழில் ஜாடைகளென்ற சக்தி கிடையாது. பிரதிபலனும் வர்த்தகத்திற்குரிய சின் னங்களும் உண்டு. கொடுத்தலும் வாங்குவதும் உண்டு. இந்த யாகங்களெல்லாம் இது வேண்டுமானல், அது வேண்டுமானல், என்று 'ஆல்' என்ற சொல்லைப்பற்றியே நடைபெறும். மழை வேண்டுமானல் இந்த யாகம் செய்; சந்ததி தேவையானல் அதைச் செய்; ஜெயம்பெற

வேண்டினால் மற்றொன்றைச் செய்; தனம் வேண்டுமானால் இன்னும் வேறு யாகம்; இப்படியே போய்க் கொண்டிருக்கும். எனது தேவைகளைப் பொறுத்தே நடைபெற்றவைகளாதலால் கடமைகளைப்போல் ஆரம்பத்தில் நிர்ப்பந்தமாக ஏற்படவில்லை. செய்து தீர வேண்டுமென்ற விதியல்ல. ஆனால், நாளடைவில் யாகங்கள் வழக்கங்களாகவும் கண்ணியம் பெற்றவைகளாகவும் மாறி நிர்ப்பந்தமாக ஏற்றுக்கொண்ட செய்கைகளாகிவிட்டன.

இந்தியாவின் சரித்திரத்தில் முன்னே கூறியதற்குப் பிற்பட்ட காலங்களில் புராண சம்பந்தமான கர்ம காண்டங்கள் ஏற்பட்டன மகாபாரத யுத்தத்திற்குப் பிறகு முழு மாறுதல்கள் ஏற்பட்டன. தேச சமூகமே மத சம்பந்தமாகவும் ராஜீய சம்பந்தமாகவு மேற்பட்ட கிளர்ச்சிகள் நிரம்பி முழுமையும் நிலைமாறிப்போயிற்று. பூர்வீக கால தேவதைகளிடம் காட்டப்பட்ட உணர்ச்சிகளும் மாறலாயின. சரீர சம்பந்தமான தேவைகள் அதிகரித்தன. ஜனங்கள் ஒரு யாகத்திற்காக மாதங்களும் வருஷங்கள் முழுவதும் காத்திருக்க முடியவில்லை. அதனால் பழைய யாகங்களுக்குப் பதில் புராணத்துக் கர்மகாண்டம் ஏற்பட்டது. இதுவே நமது தர்மம் சற்றும் கெடாமல் நமது கர்மகாண்டத்தை அவசிய மேற்படுவதற்குத் தக்கபடி மாற்றலாம் என்பதற்கு முன்னுதாரமாக நிற்கின்றது. மற்றொரு நிலைமை கவனிக்கப்படவேண்டும். ஸ்மிருதி, பழக்க வழக்கங்கள், ஹோம கர்மாக்கள், மற்றுமுள்ள கர்மகாண்டத்தைப் பற்றிய காரியங்கள் ஆகிய இவை காலத்திற்குத் தக்கபடி

மாறுகின்றன என்பதுடன் நில்லாமல் ஒரே தேசத்தில் பல இடங்களிலும் வெவ்வேறு தன்மைகளை யுடையன வாயிருக்கின்றன. சமூகநிடம் வேண்டுமானால் இடைவிடாமல் மாறிய நிலைமைகளுக்குத் தக்கபடி தளர்ந்து கொடுப்பதும், வளர்ச்சி பெறுவதும், சந்தர்ப்பத்திற்குத் தக்க மாறுதல் பெறுவதும் வேண்டும். மாறிக்கொண்டிருக்கவேண்டும்; அல்லது அழியவேண்டும். இதுவே பிரகிருதியின் பயங்கர உண்மை. சந்தர்ப்பங்களுக்குத் தக்கபடி மிக நேர்த்தியாக அமைந்த பிறகும் சந்தர்ப்பங்கள் மாறிக்கொண்டே போவதால், சமூகமும் மறுபடி புதிய அமைப்பைப் பெற்று வசிக்கவேண்டும். மனிதனைப்பற்றியும் உலகைப்பற்றியும் நாமறிந்தவரையிலும், எல்லோரும் பந்தோபஸ்துடன் சந்தோஷமாக வசித்துக் கொண்டு சச்சரவுகளும் மாறுதல்களும் தேவையே யில்லாத காலம், நீடித்த சாஸ்வதமான ஒழுங்குடன் அமைக்கப்பட்ட காலம், சொப்பனத்திலு மில்லை.

ஆதலால், நமது கர்மகாண்டத்தைச் சந்தர்ப்பங்களுக்குத் தக்கபடி ஏற்படுத்திக்கொள்வோம். வேதத்து ரிஷிகள் காலத்தில் இருந்த தேவைகள் வேறு; நமக்கு இப்போது இருக்கும் தேவைகள் வேறு. கர்மகாண்டம் எந்த 'ஆல்' களைச் சுற்றி நின்றனவோ அவை நீங்கி விட்டன. "கால்நடைகள் தேவையானால் இந்திரனுக்கு ஆகுதி செய்யுங்கள்" என்றும், "சந்ததி தேவையானல், பிரஜாபதியைத் திருப்தி செய்யுங்கள்" என்றும், இவைபோன்ற கூற்றுக்கள் தற்காலம் தேவையில்லை. தற்காலத்திய கர்மகாண்ட கேள்விகள் பின் வருமாறு மாறிவிட்டன. கைத்தொழில்களும் கலை ஞானங்களும்

செழித்துக் கொழுத்துச் செல்லும் இந்த நூற்றாண்டில் நீ ஜீவித்திருக்க விரும்பினால், சிறிது சிறிதாக மெலிவினடையாமலும், ராஜிய நிலையில் அஜீரணம் அடையாமலும் இருக்க விரும்பினால் மின்சார சக்தியைப் பிடிக்கவேண்டும்; நீராவியாகிய வருணனை அடிமைப்படுத்தவேண்டும்; விவசாய சாஸ்திரமென்ற குபேரனுடன் சிநேகம் கொள்ளவேண்டும். இந்தத் தெய்வங்களிடம் உன்னைச் சிநேகம் செய்விக்கும் புரோகிதர் நூதன சாஸ்திர முறைகளைக் கைப்பற்றுபவர்களும் கலை ஞானிகளுமேயாம்.

வைதிக விரோதமான மொழிகளைக் கூறுவதாக இராமனைக்குறைகூறுகிறீர்கள். இவ்வுலகில் எதுவும் மாறுந் தன்மையுடையதே. தேச சொரூபமே முழுமையும் மாறிவிட்டது; அரசாங்கம் மாறிவிட்டது; பாஷைகள் போய்விட்டன; ஜனங்களும் நிறம்பேத மடைந்து விட்டார்கள். வேதகாலத்து தெய்வங்கள் மாத்திரம் ஏன் எங்கேயோ உயரத்தில் ஊஞ்சலாடிக் கொண்டிருக்கவேண்டும்? வருஷங்களுடன் கூட அவைகளும் ஏன் வளர்ந்து கீழே வந்து நம்முடன் தாராளமாகக் கலந்து மனிதனுக்குத் தெளிவான பொருள்களாகக் கூடாது? அன்பும் கடாட்சமும்பெற்ற இந்தியர்களே! ஏகம் சத்தாகிய கடவுளைப் பார்ப்பதினின்றும் தடைசெய்யச் சிறிதும் இராமன் சம்மதியான். இடி, மின்னல், காற்று, சூரியன், சந்திரன், அக்னி, வருணன், பூமி முதலியவற்றில் முற்காலத்திய மதிக்கத்தக்க முனிவர்களைப்போலக் கடவுளைக் காணுங்கள். பிரகிருதியில் கடவுளைக் காணுங்கள்! பிரகிருதியே கடவுள் மயமென்று நோக்குங்கள்! நான் இன்னம் கொஞ்சம் அதிகம் கேட்கிறேன். பௌதிக சாஸ்திர

ஆராய்ச்சிச்சாலையிலும், அந்தக் கலைஞர்களது அறைகளிலும்கூடக் கடவுளைத் தரிசனம் செய்யுங்கள். யாகாக்னி எவ்வளவு தெய்வத்தன்மை பொருந்தியதோ அதே மாதிரி ரசாயன மேடையும் கருதப்படட்டும். முற்காலத்திய யாகாக்னியையும் ஹோமாக்னியையும் உங்களால் இப்போது உற்பத்திசெய்ய முடியாது. ஆனால், அக் காலத்தில் அன்பு, மரியாதை, சிரத்தையுடன் கூடிய பக்தி என்ற இவற்றைத் தற்காலம் உண்டாக்க முடியும். அவற்றை உற்பத்தி செய்யவேண்டும். தற்காலத்திய கர்மாக்களில் அவற்றை நீங்கள் உற்பத்திசெய்து வர வேண்டியது அவசியமான கர்மாவாகும். "பிரகிருதியைப்பற்றிப் படிப்பது கடவுளது எண்ணங்களையே மறுபடி எண்ணுவதற்குச் சமமல்லவா ?" என்று அகாஸிஸ் கேட்கிறார். உங்கள் வேலைகளிலெல்லாம் தெய்வத்தன்மையும் பரிசுத்தகுணமும், சுவாசம்போல விளங்கட்டும். தேவதைகளை ஆராதிக்கும் (ஹோம) அக்னியை என்னால் வளர்க்க முடியாது. கொல்லனது உலையை அவ்வளவு தெய்வத்தன்மையுடன் விளங்குமாறு செய்வேன். இராமனது திருஷ்டியைப் பொறுத்தவிஷயமே சகலமும் குடியானவனது களையெடுக்கும் கருவியே இந்தியாவைச் செலுத்தும் இரதமாகக் கருதுவேன்; உண்மையான ஏகத்தைப்பற்றிய இரகஸ்யமே இவ்விதம் கடவுளென்ற திருஷ்டியை வளர்ப்பதுதான்.

தற்காலத்திய தேசிய நிலையை அறியாத நீங்கள் உங்கள் பிற்கால வாழ்க்கையாகிய ஜீவனை யறியாதவராவீர்கள். ஜீவாத்ம சொரூபமறியாதபடி அப்படிப்பட்ட நாஸ்திகர்களாகிவிடாதீர்கள். வாழ்க்கையி லேற்பட்ட

உங்கள் பிரதம கடமையானது உங்கள் பிற்கால ஜீவ வாழ்க்கைக்கு உதவி செய்வது உங்கள் பிற்கால ஜீவனாகிய மனிதன் இருக்கவேண்டிய நிலைக்கு இப்போது நீங்கள் எவ்வாறு வசிக்கவேண்டுமோ அப்படியே வசியுங்கள். அப்போதுதான் மனித நிலைமை உத்தமமாயிருக்குமாறு வசியுங்கள். ஐம்பது வருஷங்களுக்குப் பிறகு ஏற்படும் நிலைமையானது உங்கள் தற்காலத்து வாழ்க்கையைக் கண்டு வெட்கங் கொள்ளாமலிருக்கட்டும். இந்தியாவின் பிற்காலத்தில் பிறக்குப் குழந்தையினிடம் விளங்கும் உங்கள் ஜீவன் அழிந்துபோகாதபடி ஜீவதசையை நடத்துங்கள். வைதீகம் பாராட்டும் ஹிந்துக்களே ! உங்கள் மனச்சாட்சியைத் தெளிவு செய்யுங்கள். உங்களுக்கு இரண்டுவித கர்மாக்கள் எஜமானர்களாக இருக்க வேண்டியதில்லை. உங்களுக்கு உண்மையில் தேவையாயிருக்கிற உடுப்பின்பேரில் பருவத்திற்கு உதவாமலிருக்கும் தசாத உடுப்புகளை—உங்கள் முன்னோர்கள் கொடுத்த உடுப்புகளை—முற்காலத்திய ஞாபகார்த்தமாக உங்களுக்குத் தந்த பொக்கிஷ மென்பதற்காக மாத்திரம் சேர்த்துக்கொள்ள வேண்டாம். ஒருவனுடைய முக்கிய காரியத்தைக் கைவிட்டு மார்க்கத்திற்கு நெடுந்தூரத்திலிருக்கும் ஒரு குறிப்பிட்ட வேலையைச் செய்ய முன் வரும் குற்றத்தால்தான் மனிதர்களும் தேச சமூகங்களும் (சக்தி யிழந்து) வறுமைப் பிணிக்கு ஆளாகின்றார்கள். காரியவாதியாயிருப்பவன் சிறிய கடமைகளை யெல்லாம் வேண்டாமென்று ஒதுக்கிவிடுகிறான்.

யக்ஞம் என்பது தேவர்களின் பிரீதிக்காக ஆகுதி செய்வதேயாகும். தேவன் என்பதற்கு வேதாந்தப்

பொருள் என்ன? வேதப்பொருளும் பல சமயங்களில் எது? ஒளியும் ஜீவ இயக்கமும் தருகின்ற சக்தியே. தேவர்கள் என்ற பன்மையினால் அறியப்படுவது எவையெனில், தெய்வ சக்தியின் பலவித ஆவிர்ப்பவங்கள். வெளியுலகில் காணப்படும் சக்திகளாகவோ, அல்லது தனக்குள் காணப்படும் இந்திரிய கருவிகளாகவோ விளங்கும். தேவதை என்றபதம் ஒரு சக்தியின் சமஷ்டியைக் குறிக்கின்றது. ஆதியாத்மீகம் என்பதற்கு எதிரிடையாக ஆதிதெய்வீகம் என்னும் பதம் வழங்கப்படுவதைப் பாருங்கள். சக்ஷு என்பது தனி மனிதரது பார்வையைக் குறிக்கும். பார்வை யென்ற இந்திரிய தேவதை சமஷ்டியிலடங்கிய எல்லோருடைய பார்வையும் அல்லது ஆதித்தியன் என்பது. இதுதான் சூரியனால் குறிப்பாகத் தெரிவிக்கப்படுவது. சூரியன் பூமிக்குக் கண்ணாக இருக்கிறதல்லவா? ஸ்பரிச இந்திரியம் என்பது தனி மனிதரது கையில் உள்ள சக்தி யென்னலாம். ஆனால், இதன் தேவதையோ சமஷ்டியின் கைகளையெல்லாம் இயக்குவிப்பது. இந்தச் சமஷ்டி சக்திக்குப் பெயர் இந்திரன் என வழங்குகிறது. இப்படியே எல்லாம். இந்திரிய தேவதைகளைப்பற்றிக் கூறும்போது அந்தச் சொல்லுக்குப் பொருள் இருக்குமானால் இந்தக் குறிப்பைத்தவிர வேறு இருக்க முடியாது. இப்போது கவனிப்போம். யக்ஞத்தில் தேவதைகளுக்கு ஆகுதிசெய்தல் என்பதற்குப் பொருள் என்னவாயிருக்கலாமென்று கவனிப்போம். பகுத்தறிவிற்குத் தெரிந்தவரையில் பொருள் என்ன? எனது தனி இந்திரிய கருவிகளை அவற்றிற்குத் தக்க சமஷ்டி சக்திக்காக அர்ப்பணம் செய்யலாம். எனது சிறு ஜீவனை சமஷ்டி ஜீவனுடன்

சேர்ந்த ஒன்ருகக் கருதுதல்; அந்நியரையும் தன்னைப் போலவே கருதல். எனது மனோநிலையைக் கடவுளதுமனதில் ஐக்கியப்படுத்திவிடல். ஆதித்யதேவதைக்கு ஆகுதி செய்தலாவது, எந்தக் கண்களுக்கும் அகௌரவமான நடத்தையால் குற்றம் செய்யாதிருத்தல் என்ற தீர்மானத்தை திட உறுதியுடன் நிலைநிறுத்திவிடலே. எந்தக் கண்கள் உன்னை நோக்கினலும் அவற்றினிடம் அன்பும் புன்முறுவலுமே செலுத்தி ஆசீர்வதிக்கும் தன்மையை உண்டாக்குவது. எல்லாக் கண்களிடமும் கடவுளைக் காணல்; இதுவே ஆதித்தியதேவதைக்குப் பிரீதியாம். இந்திரனுக்கு ஆகுதி செய்தல் என்ருல் இவ்வுலகிலுள்ள கைகளுக்கெல்லாம் ஊழியம்செய்தலாம். ஒவ்வொரு கையும் உணவைச் சரியானபடி உட்கொள்வதால் ஜீவிக்கின்றது. கைகளிலுள்ள தசைகள் கசரத்து மூலமாக—வேலை செய்வதால்—உணவைப் பெற்றுக்கொண்டு வளர்ந்து திடப்படுகிறது. ஆதலால், இந்திரனுக்கு உணவளித்தலாவது லட்சக்கணக்கான எளிய கைகளுக்குத் தொழில் கொடுத்தல். தேசத்தில் வேலையைத் தேடும் எளியவர்களுக்கு வேலைசம்பாதித்தல். இந்திரன் திருப்தி யடைந்தால் பூமி செழித்துப் பலன் பெருகும்; வாஸ்தவந்தான். எல்லாக் கைகளுக்கும் தொழில் ஏற்பட்டால் வறுமையென்பது எங்கே யிருக்கக்கூடும்? இங்கிலாந்தில் மாருல் விளைப்பதே கிடையாது. அப்படி யிருந்தும் தேசம் தனம் படைத்திருக்கிறது. ஏனெனில், கைகளுக்குத் தேவதையாகிய இந்திரன் திருப்திக்கு மேற்பட்ட நிலையில் (அஜீரணமடையும்படியானலும்) கலைகளிலும் கைத்தொழில்களிலும் நிறைய உணவு அருந்தியிருக்கிறன். நமது கைகளையெல்லாம் சமஷ்டியின் நன்மைக்காக

ஒன்று சேர்த்தால்—நமது ஹிருதயங்களை ஒன்று சேர்த்தால்—பிரகஸ்பதியின் திருப்தியாகிய ஆகுதி நிறைவேறிவிடுகிறது. ஹிருதயஸ்தான தேவதையாகிய சந்திரன் திருப்தியடைகிறான். இப்படியே மற்ற தேவதைகள் விஷயங்களும். சுருக்கிக் கூறினால் தேவதைகளுக்குப் பிரீதி செய்வதாவது, எனது கைகளைத் தேசத்து முழு சமூகத்தின் கைகளுக்கெல்லாம் உதவியாக்கிவிடுதல்; எனது கண்களை எல்லாக் கண்களும் சேர்ந்த முழு சமூகத்திற்கும் உதவுதல்; எனது நன்மைகளைத் தேசத்து நன்மையில் ஒன்றுபடுத்திக் கலந்தல். எல்லோரையும் எனது சரீரம்போல் பாராட்டிவிடல்; தத்துவமசி என்ற வாக்கியத்தை அனுபவத்திற்குக் கொண்டு வருதல். "அது நீயாகிறாய்." இதுதான் வேதாந்தம்.

இந்த யக்ஞத்தை ஒவ்வொருவரும் செய்யவேண்டும் இதுவே சகலருக்கும் பொதுவான மதமாக இருக்க வேண்டும். இந்திய பூபமியே! இதை அனுசரித்தால் நலம். இல்லையேல் அழிந்துபோவாய். வேறு மார்க்கமே கிடையாது. யாகம் செய்யும்போது தேவதைகள் பிரத்தியட்சத்தில் காணப்படுகின்றன என்று உங்கள் சாஸ்திரங்கள் கூறுவது அப்படியே நடக்கும் உண்மையென்று இராமன் கூறுவான். அதாவதெப்படியென்றால், சேர்ந்து மனதை ஒன்றுபடுத்தி விடுவதன் சக்தி விளங்குகிறது. ஏக நிலையில் மனத்தை வைத்துக்கொள்ளச் சக்தி பொருந்தியவர்களின் தொகை எவ்வளவிருக்கின்றதோ அந்த எண்ணைத் தன்னாலே பெருக்கிக் கிடைத்த தொகை தியான பலத்தை விளக்குமென்று மனோதத்துவ சாஸ்திர ஆராய்ச்சியின் தற்கால முடிவு தெரி

விக்கிறது. [அதாவது ஐந்து பேர் சேர்ந்து ஒரு மனப் பட்டால் இருபத்தைந்து பெயருடைய மனோசக்தி யுண் டாகும். எட்டுப்பேர் சேர்ந்தால் எட்டை எட்டால் பெருக்கிக் கிடைத்த அறுபத்துநான்கு பேர்களின் பலம் கிடைக்கின்றது.] அது தான் சத்சங்கத்தால் ஏற்படும் பலன். இராமன் தனியே எந்த எண்ணத்திற்கும் (எதி ரில்) உருவத்தைக் கொடுக்கும் சக்தி வாய்ந்தவனாவான். ஆதலால், நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் ஜனங்கள் ஒன்று சேர்ந்தால், ஒருமனப்பட்டுச் சிந்தை யைச் செலுத்த முடிந்தால், ஒரே சுலோகத்தைக் கானம் செய்தாரானால், ஒரே உருவத்தை நினைக்க வல்லவர்களா னால், எவ்வளவு திறமாக உருக்கொடுக்கலாம்?

இவற்றாலெல்லாம் தெரிவதென்ன? உண்மையான ஆத்மனாகிய நீ, சமஷ்டி சக்தியாகிய நீ, எல்லாத் தெய்வங் களையும் தேவதைகளையும் சிருஷ்டிசெய்யும் பிதவாகிறாய். இந்தத் தேவதைகளும் தெய்வங்களும்—உனது சொந்த மனோபாவனைகளின் உருவகம்—தோற்ற மாத்திரமாக இருக்கும் (மாயா சம்பந்தமான) பொய்யாகிய உங்களது கட்டுப்பட்ட அகம் என்பதை நடத்தி ஆளுகின்றன. உங்கள் கதியை அல்லது நிலைமையை நீங்களே செய் கின்ற கர்த்தாவாக இருக்கிறீர்கள். பயத்திலும் ஆபா சத்திலுமே அழுந்திப்போய் உபயோகமற்ற அடிமை யாகத் தங்க (விருப்பமானாலும்) இரு. அல்லது உனது பிறப்பிலேயே உனக்கு உரித்தாயிருக்கிற பெருமையென்ற கிரீடம் தரித்துக்கொள்ளப் பிரியமானால் தரிக்கலாம். உன் இஷ்டம்போல நடந்து கொள். உனக்குத்தகுந்த படி செய்துகொண்டு வசிப்பாயாக. மற்றொரு விசே

ஷம்; மனோதத்துவ நிலையில் ஒரு கொள்கை அல்லது எண்ணத்தை உள்ளபடியே உறுதிசெய்வதற்காக தகுந்த சின்னங்களும் அடையாளங்களும் அபூர்வமாக உதவி செய்து விடுமென்று இராமன் அறிவான்: தன்னையே யோக நிலையில் அர்ப்பணம் செய்து நிற்கும் மனிதன், தன் கைகளையே சமஷ்டியின் கைகளுடன் ஐக்கியப் படுத்தி நிற்பது போன்ற நிலையில், மனது முழுவதும் பக்திநிறைந்த சரீர முழுமையும் இந்தப் பரிசுத்த தீர்மானத்தால் நடுக்கமடைந்திருக்கையில், தானும் வெளித் தோற்றத்திற்கு அக்னியில் ஆகுதி செய்து தனது சிறிய ஜீவனை சமஷ்டி சக்திக்கு அர்ப்பணம் செய்வதன் அடையாளமெனப் பாவித்துத் தன் அந்தக்கரணத்தில் இருக்கும் உறுதி விளங்க மந்திரங்கள் சொல்லிக் கொண்டே உரத்த குரலில் 'சுவாஹா' என்று முடித்தானால்; ஆகா! பரிசுத்த குணம் பொருந்திய தஸ்தாவேஜியில் எவ்வளவு பக்தி நிறைந்த முத்திரையாக விளங்காது? தெய்வீக சின்னங்கள் முத்திரைபோல விளங்குமே! ஆனால் என்செய்வது பாவம்! தஸ்தாவேஜி எழுதப்படாமலே எல்லாம் முத்திரைமயமாகவே நின்றுவிட்டால் அந்தப பரிகசிக்கத்தக்க நிலையிலிருந்து என்ன எதிர்பார்க்கிறாய்? எண்ணம் அல்லது மனோபாவனையின்றி பொருளில்லாத உருவமாகிய அடையாளத்தை மாத்திரம் பலவந்தம் செய்தால், உயிர் நீங்கப்பெற்ற உடல்போல விளங்கும். பிணத்தை உடனே எரித்து விடு; அதைக் காப்பாற்றாதே. அது அபாயத்தை விளைவித்து அழித்துவிடும். ஜீவனது புது உருவங்களைக் கவனியுங்கள். நதியானது டனூபிய மார்க்கத்தின் வழியே செல்வது இலகுவென்றும் அதனால் பழைய

ஸ்தாபனங்களைப் புதிய உயிர் கொடுத்து எழுப்பவேண்டு மென்றும் கூறுகிறார்கள். இராமனுக்கு இது சரியான மார்க்கமல்லவென்று தோன்றுகிறது. ஒருதரம் கை விட்ட மார்க்கத்தில் பழையபடி எந்த நதி பாய்ந்திருக் கிறதென்று கூறுங்கள். அல்லது ஒரு உயிர் பிரிந்து போன உடலில் புது உயிர் புகுந்திருக்கும் உதாரண மாவது உண்டா? கரும்பின் சாற்றைப் பிழிந்த பிறகு மறுபடியும் அந்தச் சக்கையில் சாற்றை ஏற்ற முடியுமா? பொருள்களும் உருப்புகளும் தம் உருவங்களையும் சம் பந்தங்களையும் மாற்றிக்கொள்கின்றன. ஒரு தடவை மாற்றிய பிறகு அவை திரும்பவும் அந்த உருவத்தை ஏற்றுக்கொள்வது கிடையாது. நாம் ஞானக்னியில், ஆகுதி செய்வோம். இக்காலங்களுக்குத் தக்க உருவங்க ளில் உண்மையான யக்ஞ சக்தியை உண்டாக்குவோம். தேசாபிமானமென்றால் சிலருக்குச் சென்ற காலத்தைப் பற்றிய நசித்துப்போன பெருமையைப்பற்றித் தியானம் செய்வது என்றே பொருள். நத்தைகள்போல் முன்பு குடியிருந்த வீட்டையே புது இடங்களுக்கும் தூக்கிச் செல்லுதல். வறுமையில் முழுகிப்போன தனவந்தர்கள் காலாவதியாகப்போன லெட்ஜர் புத்தகங்களைப் புரட்டுவ தும் இப்போது பலனற்றுப்போன கடன் புத்தகங்களை ஆராய்ந்து பார்த்தலும். இந்தியா அப்படி யிருந்தது என்று நினைத்துக் காலத்தைப் போக்காதீர்கள். உங்கள் சக்தி அளவற்றது; அதை எழுப்புங்கள்; உணர்ச்சி கொள்ளுங்கள்; உணருங்கள். இந்தியாவானது (இனி) ஆகிவிடும். பெருமையுடையதாகிவிடும்.

சரித்திர ஆதாரங்களும் பிரத்தியட்ச தரிசனமும் தெளிவிக்கிறது. ஜனங்கள் ஒன்று சேர்ந்து கண்களும் கைகளும் ஒன்று கூடினல் உடனே ஹிருதயம் என்று கூடத்தக்க சமயம்—உன்னதமான சமயம்—அநேகமாக வாய்த்துவிடுகிறது. அறிந்தோ அறியாமலோ உணர்ச்சிகளும் எண்ணங்களும் கலந்து கூடுகின்றன. ஜனங்கள் ஒரேவித உணர்ச்சி பெற்றவர்களாகவும், ஒரே வித சம எண்ணங்களுடையவர்களாகவும், ஆத்ம பலம் பெறுவதற்கு ஒரேவித சக்தி வாய்ந்தவராகவும் ஆகிவிடுகிறார்கள். பரஸ்பர சகோதர உணர்ச்சியும் ஒற்றுமையும் உற்பத்தியாகின்றன. எழுத்து வாசனை யறியாத முரட்டு அராபி ஜாதியார்கள் நாள் ஒன்றுக்கு ஐந்து தடவைக்குக் குறையாமல் கடவுளிடம் ஒன்று சேருமாறு செய்ததிலேதான் முகம்மது நபியின் ஞானம் விளங்கியிருக்கிறது. ஒரே குழப்பமாகக் கலங்கியிருந்த ஜனக்கூட்டத்திலிருந்து இவ்விதம் அவர் திறமாக வகுக்கப்பட்ட உறுப்புக்களுடன் விளங்கிய தேச சமஷ்டியை உண்டாக்கினர். புண்ணிய தீர்த்தங்கள், மேலாக்கள், மந்திரங்கள், க்ஷேத்ரஸ்தலங்கள், கல்யாணம், மரணம் முதலிய சம்பவங்கள், சபைகள், சமாஜங்கள், கூட்டங்கள், காங்கிரஸ் முதலிய இடங்களே இந்தியாவில் ஜனங்களைச் சேகரம் செய்யு மிடங்களாம். மேனுடுகளில் சர்ச்சுகளும் ஹோடல்களும் பொருட்காட்சிச் சாலைகளும் சர்வ கலாசாலைகளும் பொது உபந்நியாச மேடைகளும் மற்றுமுள்ளனவும் ஜனங்களைக் கூடும்படி செய்கின்றன. இவற்றிலெல்லாம் முக்கியம் சாந்தமான ஆத்ம நிலை எந்தக் கூட்டங்களில் விளங்குகின்றனவோ, அந்தக் கூட்டங்களில்தான் அன்பு என்ற புண்ணிய

தீர்த்தம் புனிதமாக்கி ஐக்கியத்தைப் பலப்படுத்து கிறது. நிலையான ஐக்கியமென்பது ஹிருதயங்கள் கூடுமிடங்களில் தான் உற்பத்தியாகிறது. சரீரங்கள் மாத்திரம் கூடுவதால் எந்தச்சிறந்த பலனும் உண்டாவ தில்லையென்பதோடு பல சமயங்களிலும் பொறாமை முதலிய குணங்களையும் உற்பத்தி செய்திருக்கிறது. மேல் போக்கில் மாத்திரம் ஒற்றுமையை பலவந்தம் செய்யவேண்டிய அவசியமேயில்லை. ஹிருதயம் கலவாத சிநேகம் தீமையைத்தான் விளைவித்துவிடுகிறது. கால்களால் நடந்து நெருங்குவதனால் இருமனமும் நெருங்கி விட முடியாது. வற்றாத ஊற்று அல்லது ஜீவ நிலையின் ஆதாரம் என்ற இடத்தை நெருங்கினால் மாத்திரம் நமக்கு உண்மையில் வேண்டிய சிநேகிதர்கள் கிடைப்பார்கள். தண்ணீர் ஓரத்தில் மரம் இருந்தால் தண்ணீர் இருக்கும் பக்கத்தில் வேர்செலுத்தி விடுகின்றது. நித்யமான அஸ்திவாரமான ஜீவ ஸ்தானத்தினின்று கிளப்புவோம். பல மரங்கள் நமது திக்குநோக்கி வேர் விடக் காண்போம். சத்தியம் என்ற ஊற்றுக் கண்களுக்கு அருகில் நிற்கவேண்டும். சூரியனைச்சுற்றி பலகிரகங்களும் பல வகைப்பட்ட தூரத்தில் நிற்கின்றபடியால்தான் ஒரு யந்திரம்போல் இயங்குகின்ற உண்மையை உடைத்தாயிருக்கின்றன. சில சிநேகிதர்களை அளவுக்குமீறி சமீபத்தில் கொண்டு வந்தாலும் அல்லது எட்டி ஓட்டிவிட்டாலும் அவர்களுடன் நம்மால் வேலை செய்ய முடியாது. ஆத்ம சம்பந்தப்பட்ட வரையில் தக்கபடி ஸ்தானங்கள் ஏற்படுத்திக் கொண்டால் மாத்திரம் சிநேகிதர்களிடம் நித்யமான அன்புடன் கூடிய ஐக்கியம் ஏற்படும். பல சமயங்களில் ஜனங்கள் மிகச் சமீபத்தில் நெருங்குவ

தாலோ அல்லது வெகுதூரத்தில் சென்று விடுவதாலோ தம் பிழையினால் கஷ்டப்பட்டுவிட்டு எவரிடத்தும் அவநம்பிக்கையும் அதிருப்தியும் கொண்டவர்களாகிறார்கள். ஜனங்களிடமிருந்து சரியான தூரங்களில் நிற்பதால் அன்பு, சமரஸம், ஐக்கியம் என்றவற்றைக் கெடாமல் காப்பாற்றலாம்.

ஜனங்களின் எல்லா வகுப்பினரும் ஒன்றுகூடுமாறு வசதியுடன் கூடிய தேசிய உத்ஸவங்கள் விர்த்திசெய்யப் படவேண்டும். ஆத்மீக சேர்க்கையால் ஜனங்கள் தம் ஹிருதயங்கள் ஒன்றுகூட செய்யத் தக்கபடி வசதிகள் வேண்டும். ஜனங்கள் எப்படியெவ்வளவு தூரம் நெருங்கலாமோ அவ்வளவு வரையில் சுபாவமாக நிற்கும்படி சாதகங்கள் வேண்டும். மழைக்காலங்களில் தென் இந்தியாவில் சீதோஷ்ணம் சௌகர்யமாயிருக்குமாதலால அங்கு கூடலாம். கோடைக்காலம் வடக்கேயுள்ள மலைப்பிரதேசங்களின் அழகிய இடங்களில் கூடலாம். பங்காளத்தில் வசந்தகாலத்திலும், மற்றொரு பர்வம் மேற்கு இந்தியாவிலும் உத்ஸவங்கள் நடத்தலாம். இந்த உத்ஸவங்களில் வகுப்புவாரிப் பகுதிகளையும் பல மதப் பிரிவுகளையும் தாண்டியபடி மேலான தேசிய உணர்ச்சி கொண்டு விளங்கப் பெறவேண்டும். எல்லா வகுப்பினரும் அடங்கிய பிரதிநிதிகள் இக்காரியங்களை நடத்த வேண்டும். கலை ஞானங்களும் கைத்தொழில்களும் பல வகை ஷாப்புகளும் அடங்கிய பொருட்காட்சிச்சாலைகள், புத்தகாலயங்கள், பௌதிக சாஸ்திர ஆராய்ச்சிச் சாலைகள், விளையாட்டு பூமிகள், உபந்நியாச மேடைகள், சமூக உணர்ச்சி பரவச்செய்யும் கூட்டங்கள், கான்பரென்ஸ

ளும் காங்கிரஸ் கூடாரங்களும் (ஜாதி பேதமின்றி) தேசிய நாடகசாலைகள் முதலியவை சேர்க்கப்பட்டுப் பல மாகாணங்களிலிருந்தும் பல ஜாதியினரும் மதஸ்தரும் கூட்டம் கூடவேண்டும். வாழ்க்கையில் உற்சாகத்தை யுண்டாக்கும் வேலைகளும் உபயோகமுள்ள காரியங்களும் அங்கே இடங்காணல்வேண்டும். முற்காலத்தில் விளங்கியதுபோல சகோதர சகோதரிகளும் மனைவியுடன் புருஷனும் தாராளமாக நடந்து விளையாடட்டும். தாய்மார்களை புத்திரர்கள் அழைத்துச் செல்லட்டும். ஏற்கனவே பம்பாய் மாகாணத்தில் இவ்விதம் இருக்கின்றது. எல்லா வகுப்பினரும் பேசத்தக்க பொது மேடையும் வேண்டியதவசியம். அன்பு என்ற கம்பீரத்தன்மையுடன் பல வகுப்பினரும் மதஸ்தரும் விளங்கத்தக்க இடம் வேண்டும்.

தேசிய நூல்களை விர்த்திசெய்வதும் உண்டாக்குவதும் அதிகப் படுத்துவதும் கூடத்தேவையே. வழக்கத்திலிருக்கும் சுதேச பாஷைகளிடம் ஒற்றுமை சுபாவத்தையுண்டாக்குவதும் தேசிய பலம் திடப்படும் காரியமாகும். பல இடங்களிலும் ஓம் மந்திரங்கள் கட்டப்பட்டுப் பல மதஸ்தர்களும் கூடுமாறு செய்யவேண்டும். அவர்களை அழைக்தும் படிக்கவும் தியானம் செய்யவும் மௌனமாகப் பிரார்த்திக்கவும் செய்யவேண்டும். ஒருவர்க்கொருவர் பல மதஸ்தர்களும் பேச்சின்றி அனுதாபம், பிரியம், அன்பு என்ற குணங்களைக் காட்டவேண்டும். சிறுவர்கள் இராமன் காட்டிய முறைப்படி வெளியிடங்களில் கசரத்துக்கள் பழகலாம். சரீரத்தின் ஒவ்வொரு இயக்கமும் ஆத்மீக சின்னத்தை விளக்கலாம்.

ஆகுதி செய்வதால் மனோமய சாசனத்தில் தெய்வீக முத்திரை போட்டதுபோல் பார்த்ததற்குப் பதில் சரீரத்திலுள்ள இயக்கத்தையே அவ்விதம் பாராட்டுவோம். ஸ்நானம் செய்யும்போது நாம் பரிசுத்தத்தை யுண்டாக்கும் ஸ்தோத்திரங்களை அறிவினால் விளக்கிக்கொண்டு —குருட்டுத் தனமாயில்லாமல்—கூறுவோம். சிறுவர்கள் கூடிக்கொண்டு நதிக்கரைகளில் பசும்புற்றரைகளிலோ அல்லது சமவெளிகளிலோ சேர்ந்து உணவு அருந்தட்டும். ஓங்கார தொனியைக் கூறிக்கொண்டும் தியானம் செய்துகொண்டும் ஒவ்வொரு உணவும் உள்ளே செல்ல வேண்டும். "தீவிர சக்தியென்ற அக்னியை உற்பத்தி செய்யும் வார்த்தைகளும், சுவாசத்துடன் கலந்து பிரகாசிக்கும் மனோபாவனைகளும், நிரம்பிய தேச கீதங்களும், கூட்டமாக கானம் செய்தார்களானால் ஐக்கியத்தைப் பலப்படுத்தும் கருவிகளாம். ஹோமம் செய்வதற்குச் செயற்கை யக்னியை மூட்டுவதற்குப் பதிலாக பக்தி நிறைந்த சிறுவர்கள் அதிகாலை சூரியனையும், அஸ்தமன சூரிய மண்டலத்தையும் நோக்கி அவற்றின் அபரிமிதமான பெருமையை ஹோமாக்கினியாகக் கருதித் தங்கள் குறுகிய அகங்காரங்களையே ஆகுதி செய்யட்டும் அந்தப் பெருமை யென்றகடலில் முழுகி அகனின்றும் தேஜோமயமாகக் கிளம்பி உலக முழுமையும் உங்கள் சுவர்ணமயப் பிரகாசத்தால் நிரம்பச் செய்துவிட முடியுமா? இது நீங்கள் செய்ய வேண்டிய ஆகுதி. நகரக் கீர்த்தனைகள் பாடிக்கொண்டு தெருக்களிலெல்லாம் பயமின்றிச் சத்திய நெறியைப் பறை சாற்றியபடியே பஜனைக் கூட்டங்கள் நடத்தினால், பாமர ஜனங்களிடமும்

முக்கியமாக ஸ்திரீகளிடமும் குழந்தைகளிடமும் அன்பும் ஒற்றுமையும் பாவுமாறு செய்து விடலாம்.

தேசத்தில் ஐக்கியமுண்டாகச் செய்வதற்கு எல்லாவற்றிலும் சிறந்த சக்தியானது சத்தியத்திற்காகத் தேச சமூகத் தலைவர் உயிரிழப்பதும் கொடிய தண்டனைகளையனுபவிப்பதுமேயாம். ஆனால் ஒரு தேசத்தவர்களை மாத்திரமின்றி எல்லா தேச சமூகத்தவர்களையும் முடிவில் ஒன்று சேர்ப்பது எதுவென்றால் உயிர் பெற்ற மாணத்தையே ஏற்றுக்கொள்ளல்—இல்லை, இல்லை, (வியஷ்டி) வாழ்க்கையை நசிக்கச்செய்தலாகிய தன்னலமின்மையேயாம். ஒருவன் கடவுளிடமே வசித்து நிற்கட்டும்; தேச சமூக முழுமையும் அவன் மூலமாக ஐக்கியப்பட்டுவிடும். நெருப்பும் இரத்தமும் சிந்தச் செய்யும் பரிசுத்த குணம் படைத்ததாயிருக்கும். இராணுவப் பயிற்சியின் மூலமாகச் சிறுவர்கள் தயாராக்கப் பட்டால் தைரியம், பராக்கிரம குணம், தன்னயமற்ற சக்தி முதலியவைகளும் தர்மமும் இவர்களிடம் செழித்தோங்கும். ஸ்திரீகள், குழந்தைகள், தொழிலாளர்கள் என்ற இவர்களது கல்வியை மறுத்தபடியாலேயே நமக்கு உதவிசெய்த கிளைகளையே வெட்டி வீழ்த்தியவர்களாகின்றோம். தேசீய விருட்சமே நாசமடையும்படி வேர்களையே களைந்துவிட்டதற்குச் சமானமாகும்.

இருபதாம் நூற்றாண்டில் வசிக்கும் ரிஷிகளின் சந்ததிகளே! உங்களது சுருதி போதிப்பதை யறிந்தீர்களானால், ஸ்மிருதிகளால் உங்கள்மீது சுமத்தப்பட்டிருக்கும் வகுப்பு சம்பந்தமான பந்தங்களையும் கொள்கை

களைப்பற்றிய பந்தங்களையும் தெறித்துப்போகுமாறு செய்து வெளியே கிளம்பவேண்டும். உண்மையான ஆத்மாவை அறியாதவரானாலும் சுருதியைக் கவனிக்காதவரானாலும் சரியே; வெகு காலங்களுக்கு முன் குளிர் நடுக்கியபோது போட்டுவந்த உடுப்புகளை இந்தக்கொடிய கோடைகாலத்தில் போட்டுக்கொள்ள விரும்புகிறீர்களா? உங்கள் முன்னோர்களின் ஞானத்தை உத்தேசித்தாவது உங்கள் நிலையைத் தெரிந்துகொள்ளுங்கள். மனிதனாகத் தோன்றுகிறவன் காலத்தைப்பற்றி மாத்திரம் வசிக்கவில்லை; ஒரு தேசமாகிய இடத்திலும் வசிக்கின்றான். காலத்தைப்பற்றிப் பார்க்கப்போனால் நீங்கள் ஹிமாசலத்தில் வசித்த முனிவர்கள் சந்ததியிலுதித்தவர்கள்; தேசத்தைப்பற்றிப் பார்த்தாலோ, கலைகளையும் பௌதிக சாஸ்திரங்களையும் கெட்டியாகப் பிடித்துழலும் அமெரிக்கர்களுடனும் ஐரோப்பியருடனும் சேர்ந்து வசிக்கின்றீர்கள். பூர்விக உபநிஷத்துக்களின் ஞானத்தைக் கிரகித்துக்கொள்ளுங்கள். ஆனால் உலகப்பற்று விஷயங்களில் ஜப்பானும் அமெரிக்காவும் கையாளுகின்ற அனுபவ முறைகளை அடைந்து அனுபவிப்பதால் மாத்திரமே நீங்கள் ஜீவிக்க முடியும். ஒரு மாமானது விதையின் பெருமைகளைப்பற்றியே புகழ்ந்துகொண்டு சுற்றியுள்ள தண்ணீர், வாயு, ஒளி என்ற இவற்றை உணவாக்கி உயிர்பெற மறுத்துவிட்டால் சீக்கிரமே பட்டுப்போம். உங்கள் தேசிய கௌரவத்தை விட்டுவிடுமாறு இராமன் கூறவில்லை. நீங்கள் வளரவேண்டியது அவசியம் தான். சுற்றியுள்ள சந்தர்ப்பங்களையும் முற்காலப் பெருமைகளையும் சேர்த்துக் கிரகித்துச் சாரத்தை உட்கொண்டு வளர்ச்சி பெறவேண்டும். அந்நியர்கள் நமது பூர்வ

காலத்திய தெய்வீக ஞானத்தை அடைந்து பலன் பெறுவதுபோல, நீங்களும் அவர்களது பௌதிக சாஸ்திர முறைகளைக் கைக்கொள்ளுங்கள்.

இராஜிய நிலையைப்பற்றிய கலையும் சரித்திரமும் நமக்குத் தெரிவிப்பதென்ன? தேச சமூகம் வளர்வது மரம் வளர்வதற்குச் சமானம். காலம் பார்த்து வெட்டிவிடவேண்டும்—குடியேற்றிவிடச் செய்யவேண்டும். வேலையின்றிப் பட்டினி கிடந்து வருந்தும் எளிய இந்தியர்களைக் குடிகள் அதிகம் கிடையாமல் தவிக்கும் தேசங்களுக்கு அனுப்பி, அங்கே உழைக்குமாறு செய்ய வேண்டும். அவர்களும் உயிர் வாழ்வார்கள்; அவர்கள் மூலமாக இந்தியரும் வெகு தூரத்தில் இருக்கும் தேசங்களில் வேரூன்றுவார்கள். இந்தியரிடமுள்ள பழைய தமோகுணத்தையும் நீக்கிவிடும்; இந்தியாவில் வறுமைப்பிணியும் குறையும்; வாயு மண்டலத்திலும் கெட்ட காற்றாகிய கரியமல வாயு நிரம்பாது. நீங்களாகவே இக்காரியத்தை ஏற்றுக்கொண்டால் தேவதைகளை உங்கள் ரதத்துடன் இழுத்துச்செல்வீர்கள். இல்லையேல் தேவதைகளின் சக்கரங்கள் வழியில் அகப்பட்டவர்களை யெல்லாம் நசுக்கிக்கொண்டு யாதொரு தவக்கமுமின்றி இரக்கமென்பது சிறிதுமின்றியே வேலை செய்துகொண்டுபோகும். நெருக்கத்தினின்றும் விலகிக்கொள்ள உங்களுக்குப் பிரியமில்லாவிட்டால்— என்ன வேண்டுமானாலும் நினைத்துக்கொள்ளுங்கள்— கடவுள் மிகுந்த கருணையால் களையெடுக்கும் தொழிலை யேற்றுக்கொள்வார். பஞ்சமும் பிளேக் நோயுமே கடவுளது மார்க்கங்களாம். "மனிதன் விதியுடன் சேர்க்

துழைக்கத் தன் அறிவை உபயோகப்படுத்தினால் அவன் நிலை பெறுகிறான். அறிவோடும் கூடிய முயற்சியானது அவன் விஷயத்தில் தேர்ந்து நிதானிக்கலாம். இதனால் சச்சரவு நீங்கிச் சுகம் உண்டாகிறது. சுதந்திரம் பெறுகிறான்." இப்படிப்பட்ட மனிதன் மாத்திரமே தாராளமாக வெளியேறுகிறான். இப்போது சிலர் கூறலாம். "நமது பூமியில் வேலையின்றித் தவிக்கும் குழந்தைகளை என் வீட்டை விட்டுத் துரத்தவேண்டும்?" இந்தக் கேள்வியினால் தெரிவதென்ன? வீடு என்பதைப் பற்றிய மிகக்குறுகிய புத்தி விளங்குகிறது. "சரீரம் பிறந்த இடத்தைச் சுற்றியுள்ள நான்கு சுவர்களையும் தாண்டி ஏன் போகவேண்டும்." வீட்டை விட்டு நீங்கி ஏன் தெருவில் வரவேண்டும்? நீங்கள் இந்த மண்ணுக்கும் குப்பைக்கும் சொந்தமானவர்களா? சுவர்க்கத்திற்குப் பாத்தியம் பெற்றவரல்லரோ? நீங்களே சுவர்க்க சுகத்தை அனுபவிப்பவரல்லரோ? எங்குச் சென்றாலும் உங்கள் வீடுதான். ஒரு ஸ்தலத்தை மாத்திரமே உங்களுடையதெனப் பாவிக்காதீர்கள். தற்காலம் இந்தியாவானது உலகில் மற்ற தேசங்களின் சம்பந்தமின்றித் தனியே விலகி நின்றுவிட முடியாது. அந்தக்காலத்தில் இந்தியாவானது ஒரு தேசமாகவும் பர்ஸியாவானது வேறு தேசமாகவும் ஈகிப்து வேறாகவும் இப்படியே தனித்தனி வெவ்வேறு தேசங்களாக நின்றது. இப்போதோ நீராவியும் மின்சாரமும் கிளம்பிக் கால தாமதத்தையும் தேச வித்தியாசங்களையும் தொலைத்து விட்டன. மகாசமுத்திரம் தடையாக இருந்த காலம் போய் ரஸ்தாவாகவே மாறிவிட்டது. முற்காலத்திய நகரங்கள் தெருக்களாகவும் தேசங்கள்

ஙகரங்களாகவும் (அவ்வளவு சுலபமாக) கருதப்படுகின்றன. ஒரு சிறிய தேயமாகிய உலகம் என்று மதிக்கப்படுகின்றது. ஆதலால் உங்கள் வீட்டைப்பற்றிய அறிவையும் விசாலப்படுத்தும் காலம் எப்போதே வந்துவிட்டது. எல்லாத் தேசங்களிலும் எங்களுக்குச் சமமான உரிமையுண்டு. பிரகிருதியின் குழந்தையே! ஏ! கடவுளின் குமாரனே! மனிதவர்க்க முழுமையும் உங்கள் சகோதர சகோதரிகள். எங்கே உபயோகமுள்ள வேலை செய்ய முடியுமோ அங்கே போய் திடமாக வாசம் செய்வாய். இந்திய ஜன சமூகத்தில் கனமாக அழுத்திக் கிடக்கின்ற லட்சக் கணக்கான வறியோர்களுடன் சேர்ந்து அவர்களின் தொகையை அதிகப்படுத்த வேண்டாம். வெளியே செல்லுங்கள்! கடவுளின் பெருமைக்காகவும் மனிதவர்க்கத்தினிடம் கருணை காட்ட வேண்டியதற்காகவும் போய்விடு. இந்தியர்களது துக்கத்தைத் தீர்ப்பது சிலருக்கு தேசிய காரியமெனத் தோன்றும்; ராமனது திருஷ்டியில் அது சர்வதேச சம்பந்தமானது. சிலருக்கு இது தேசபக்தியைப் பற்றியதாயிருக்கும். ராமனது நோக்கின்படி இது மனிதவர்க்கத்தைப் பற்றியது. எனது குழந்தைகள் தூரதேசம் போயாவது வாழ்க்கைபெற்று விளங்கட்டும்; என் கண்களின் முன்னால் இறந்து கொண்டிருக்க வேண்டாம். அன்பின் பெருக்கால் கண்ணீர் பெருகியபடியே ராமன் உங்களைப் போகும்படி வேண்டுகிறார். போங்கள்.

அந்நிய நாடுகளில் நீங்கள் உங்களைக்காத்துக்கொள்வதற்கு மேற்பட்ட காரியத்தை யடைந்தீர்களானால் திரும்பிவிடலாம். வெளிநாடுகளில் நீங்கள் அடைந்த

அறிவைக்கொண்டு உங்கள் தேசத்திற்குச் சேவைபுரியுங்கள். ஜப்பானியச் சிறுவர்கள் மேனாட்டு அனுபவ அறிவைத் தம் தேசத்திற்குள் கொண்டுவந்து சேர்க்கிறார்கள். ஆனால் நீங்கள் உங்கள் சாப்பாட்டிற்குமேல் யாதொன்றும் அடைய முடியாவிட்டால் அங்கேயே இருந்துவிடுங்கள். பாரதமாதாவின் சரீரத்தில் ஏற்கனவே வருந்திக் கிடக்கும் உடலில் ஒட்டிக்கொள்ளக் கூடிய வேலையற்ற இரத்தம் கிரகிக்கும் பூச்சியைப்போல் விளங்குவதுதான் கதியென்றால் அராபிக்கடலில் குதித்து அக்கடல் அளிக்கும் விருந்தையுண்டு சுகமே இரு. மறுபடியும் இந்திய பூமியில் அடிவைக்காதே. வீட்டினிடம் அன்பும் உண்மையான தேசபக்தியும் இருந்தால் அவ்வளவு நீ உதவி செய்யவேண்டும். ராமனுக்கு எல்லாப் பிராணிகளிடமும் கற்களிடமும் மனிதர்களிடம் இருப்பதைப்போன்ற அன்பு உண்டு. குரங்குகளும் கடவுளைப்போலவே அரிய பிராணிகள். ஆனால் விஷயத்தை ஒளிக்கமுடியாது. விஷயத்தை மறுக்கின்றவன் கஷ்டத்திற்காளாவான்.

இப்படிக் கூறுவதால் அமெரிக்காவையாவது மற்றத் தேசங்களையாவது இந்தியரில் சோம்பறிகளால் நிரப்பிவிட இஷ்டப்படுகிறேனென்று கருதவேண்டாம். உண்மையில் நீங்கள் அந்நிய நாடுகளுக்குச் செல்வது அவர்களுக்கும் சுகத்தைத் தரவேண்டும். மரங்கள் அடர்ந்து வளர்ந்தால் எல்லாம் பலஹீன முள்ளவைகளாக இருக்கும். ஒன்றைப் பெயர்த்து தோட்டத்தை விட்டு வெளியே நட்டிப் பயிராக்குங்கள். அது ராஜ விருட்சமாக வளரும். நீ வேறு தேசத்திற்குச் செல்வதனால்

நீ போகும் தேசத்திற்குக் கௌரவத்தைக் கொடுத்து நீயும் சிறப்புப் பெறுவாய். இப்போது அமெரிக்கர்களெனப் பெருமை வாய்ந்தவர்களெல்லோரும் அவ்விதம் சென்றவர்களே. அவர்களில் அநேகர் ஐரோப்பா கண்டத்து எளியவர்கள். தேசத்தைவிட்டு வெளியே சென்றவர்கள். எந்தத் தேசத்துச் சரித்திரத்தை யெடுத்துக்கொண்டாலும் வெளி நாட்டிற்குச் செல்கின்றவர்கள். அதிகப்படும் காலங்களில் நன்மையைப் பயக்கும் மாறுதல்களே உண்டாகியிருக்கின்றன.

எக்ஞம் என்பதைப்பற்றி இன்னும் சில வார்த்தைகள். எக்ஞம் என்பதற்குத் தியாகம் என்றும் பொருள் கூறுகிறார்கள். தியாகம் என்ற ஆழ்ந்த கருத்துடைய மொழிக்கு ஒன்றும் செய்யாமலிருத்தல் என்றும் தள்ளிவிடக்கூடிய பலஹீனத்தையும் பொருளெனக் கொள்ளக் கூடாது. அகம்பாவத்துடன் கூடிய சந்நியாசி யென்றும் பொருள் கொண்டு மயங்கக்கூடாது. கடவுளின் பரிசுத்த ஸ்தானமாகிய உனது சரீரத்தை மாம்சபட்சணிகளான ஓநாய்களுக்கு இரையாக்குவது—தாராளமாகத் தடையின்றித் தின்னுமாறு விட்டுவிடுவது—தியாகமாகாது. அநீதிக்கும் கொடுமைக்கும் நீ உட்படுவதற்கு உனக்கு என்ன பாத்தியமிருக்கிறது? ஒரு ஸ்திரீ வணங்குவதற்காக (தெய்வ வணக்கம் செய்யச் சாதகக் கருவியாக) ஏற்பட்ட புண்ணிய ஸ்தலமாகிய தனது சரீரத்தை அழுக்கடைந்த சித்தமுள்ள அடிமைக்குக் கொடுத்துவிடுவது புண்ணியமான கார்யமாகிய தியாகமல்ல. தியாகமென்றால் எல்லாவற்றையும் சத்தியத்திற்கே கொடுத்துவிடுவது என்று கருத்து. இந்தச் சரீரமும் தனமும்

கடவுளுக்கே உரியன. காவல் தொழிலிரு. உனது தெய்வ காரியத்துள் அநீதியும் அநீதமும் புகுந்து விடா மலிருக்கட்டும். உன்னை உண்மைப் பொருளினின்றும் வேருகப் பாவித்துக்கொண்டு பிறகு மதத்திற்காகத் தியா கம் செய்வது என்றால் உனக்குச்சொந்த மல்லாததைச் சொந்தமாகப் பாவித்தாய் என்று கருத்தாகும். சொந்த மில்லாத பொருளைச் சொந்தமாக்கிவிடும் அதர்மக்கொள் கை, உனக்குச்சொந்தமல்லாதபொருளை தர்மத்தில் செல விடல் பாபமான செய்கையல்லவா ? நீயே உண்மைப் பொருளாக, சத்தியமாகப் பிரகாசத்தைவீசி நில், சத்தி யப் பொருளாகவே நில். இதுதான் சரியான தியாகம். சற்று இருங்கள். இதற்குத் தியாகம் என்று பெயர் கூறலாமோ? தெய்வத்தன்மை பொருந்திய கம்பீரத்தன் மைபல்லவா? கடவுள் சொரூபமும் தியாகமும் ஒன்று தான். பயிற்சியும் குணமும் வெளியில் தோன்றும் தோற் றங்கள்.

வேதங்கள் செழித்த முற்காலங்களில் கூட சிறிய ஜீவ அகத்தில் அழுந்திய கர்மகாண்ட மெதுவும் முடி வான விடுதலையாகிய முத்தியைக் தாத்தக்கதல்ல. விடு தலையானது எப்போதும் ஞானத்தாலேயே உண்டாகக் கூடியது. தற்காலத்திலும் கூட தன்னலம் என்ற குணத் தினிடம் கடமை என்ற சுமை மிகுந்து அவசரத்தில் அல்லாடிச் செல்லும் நாகரிக மிகுந்த அடிமையினது கர்மகாண்டமும் ஒருவனுக்குப் பாபத்தை போக்கி, துக்க நிவர்த்தியைத் தராது. உலகத்துச் செல்வமெல் லாம் சம்பாதிக்கலாம். ஆனால் தானும் சமஷ்டியும் ஒன்று என்று அறிந்தாலொழிய சாந்தம் என்பது ஏற்ப

டாது. உலகத்திலுள்ள மாறுதல்களிலெல்லாம் சந்தர்ப்பங்களெல்லாவற்றிலும் பொதுவான ஆதாரமாகக் கலந்து நிற்கும் ஒரே முக்கிய கர்மா ஒன்றுண்டு. அது தான் சொரூப அநுபவம். மனிதர் வாழ்க்கையின் வேரானது செயற்கையிலும் மெற்பரப்பிலும் தோற்றத்திலும் மாத்திரமே ஊன்றி நிற்கும் வரையிலும் ஒவ்வொரு மாறுதலும் சீர்திருத்தமும் ஆபாஸ நிலையைத்தான் புதிது புதிதாகத் கொண்டுவரும். சமஷ்டியே நாம் என்ற உணர்ச்சி ஏற்படாத வரையில் உங்கள் நாகரிகமெல்லாம் எதற்குப் பிரயோசனம்? சரீராத்ம உணர்ச்சி யென்ற வீக்கத்தை—நோயை—மறைத்து மூடிகொண்டிருக்கும் மூட்டமேயாகும். வேதங்களின் ஞானபாகமே உண்மையான வேதம். அதற்குத்தான் சுருதியென்று பெயர். (உள்ளிருந்து தோன்றிய ஒளி.) ஹிந்து தத்துவ சாஸ்திரிகளில் வைதீக கொள்கையினரான ஆறு வகை பிரிவினரும் ஜெயினர்களும் புத்தர்களும் இப்படியே கூறுகிறார்கள். ஹிந்துக்களே! இந்த சுரிதியை விட்டுவிடாதீர்கள். காலத்திற் கொத்தவாறு கர்மகாண்டத்தையும் ஸ்மிருதியையும் மாற்றிக் கொள்ளுங்கள். இப்படிக் செய்தீர்களானால் ஹிந்துக்கள் என்ற தனி சமூக நிலையும் கெடாமல் மேன்மேலும் ஹிந்துவாகவே விர்த்தியடைந்து உண்மையில் உலகத்திற்கும் போதிக்கும் ஆசாரியர்களாவீர்கள். இவ்விதம் தனிப்பட்ட நிலையில் கத்தரித்துப்போய் உதவாதபடி ஆகிவிடாமல் சமஷ்டியில் சேர்ந்து புத்துயிர் பெற்று விளங்குவீர்கள். ஆத்ம நிலை யுணராமல் வேலையில் நிற்கின்றவன் இருட்டறையில் திரிகின்றவனுக்குச் சமானமாவான். சுவற்றில் மோதிக்கொள்வதும் மேஜையில் முழங்கால்கள்

இடிப்பதும் நாற்காலிமீது குட்டிக்கரணமிடுவதும் பல விதமான குத்துகளும் உதைகளும் பெறுவதும் இதே கதிதான். வெளிச்சம் என்ற ஒளியில் வேலை செய்கின்றவனுக்குச் சச்சரவு கிடையாது. ஞான ஒளியின்றித் திரிபவன் குதிரையின் வாலைப்பற்றிச் செல்பவனுக்குச் சமமாக வழியெல்லாம் உதைகளையே அடைகிறான். அறிவு பெற்றுச் செல்பவன் சுதந்தரத்துடன் நிச்சயமான ஆநந்தத்துடன் செல்கிறான். குதிரையின் முதுகின்மேலேறி செல்கின்றான். ஆத்ம ஞானிக்குத் தான் செய்யும் வேலை வேலையல்ல. ஆத்மதர்சனம் அடைந்தவனுக்கு மகத்தான காரியங்களெல்லாம் மிக எளிதாகவே நிறைவேறும். வசந்த காலக்காற்று புஷ்பங்களின் வாசனையைச் சுமந்து செல்வதுபோன்ற எளிய தன்மையாகும். சங்கரர், ஆத்ம ஞானி வேலையே செய்வதில்லையென்கிறார். ஆம் உண்மைதான். ஆத்மஞானி திருஷ்டியில் வேலையே கிடையாது. ஏனெனில் அவனுக்குக் கடினமாகத் தோன்றும் வேலையே கிடையாது. எல்லாம் அவனுக்கு விளையாட்டாகவே படும். எல்லாம் ஆநந்தத்தையே கொடுக்கும். நிர்ப்பந்தமான கடமையென்பது அவனுக்குக் கிடையாது. அவன் எப்போதும் எஜமானன். ஒரு போதும் கஷ்டப்படுவதே கிடையாது. அவசரமென்பதே கிடையாது. அவன் காரியமெல்லாம் முடிந்துவிட்டது. அவன் தன் தலையைச் சொறிந்து கொண்டு கலங்கமாட்டான்: வருத்தப் படுவதே கிடையாது; எப்போதும் சுறுசுறுப்பாகவும் உறுதியாகவுமிருப்பான். 'செய்கை' என்ற ஜுரம் அவனை வாட்டுவதே கிடையாது. இப்படிப்பட்ட ஒருவன் சோம்பித்திரிய முடியுமோ? பிரகிருதியானது ஒரு காரியமும் செய்வதே

யில்லை யென்றும், சூரியபகவான் (ரதமானது) மிகத் தாமதமாகவே ஊர்கின்றது என்றும் கூறிவிடலாமோ? ஆத்ம ஞானிக்கு வேலையே கிடையாதென்று பறை சாற்றும் சங்கரரையே பார்த்துக்கொள்ளுங்கள். ஒரே மனிதரால் மிகச்சிறிய காலத்திலேயே அவ்வளவு அதிக சக்தி வெளிப்படுத்தபட்டிருக்கும் நிலையில் வேறு ஒரு மனிதரைக் குறித்துக் காட்டுங்கள். நூற்றுக் கணக்கான கிரந்தங்கள் எழுதப் பட்டன; பல ஸ்தாபனங்கள் ஏற் பட்டன; அரசர்கள் வசமாக்கப் பட்டார்கள்; பாரதக் கண்டமுழுவதும் பலவிடங்களிலும் நேர்த்தியான கூட் டங்கள் கூட்டப்பட்டன. நட்சத்திரத்திலிருந்து ஒளி வெளிப்படுவது போலவும் புஷ்பத்திலிருந்து வாசனை வெளியாவது போலவும் சங்கரரிடமிருந்து வேலைகள் விளங்கின. [பிரக்ஞையின்றிச் சுபாவமாக வெளிப்படு வது என்பது கருத்து.]

மனு ஸ்மிருதி கூறுகிறபடி, ஆத்ம எக்ஞியை உள் ளே யிருக்கும் ஜோதிமயமான ஆசனத்திலிருத்தி வைப் பதாகிற சுராஜ்ய மடையும்படி செய்ய வல்ல பெரிய பிரம்ம எக்ஞத்தைப்பற்றிச் சிறிதாவது கூறாமல் ராமன் தின்று விடமாட்டான். ஞானாக்னியில் உனது உடைமை களை யெல்லாம் ஆகுதி செய்து விடு; உனது பற்று களையும், ஏற்பாடுகளையும், எனது உனது என்ற பாவனைகளையும், அன்பு, விருப்பு, வெறுப்பு முதலிய வற்றையும், அதிருப்தி, திருப்தி, டாம்பீகம் முதலிய வற்றையும், சரீரம், சரீரசம்பந்தமான பந்து, மனம் முதலியவற்றையும், எல்லா உறவுகளையும், உரிமை கள், தவறுகள், செய்கடன் முதலியவற்றையும்,

கேள்விகளேயும், நாம ரூபங்களேயும், கிடைக்க வேண்டிய வஸ்து வென்ற திருஷ்டி, வசீகா நிலே, ஆகிய இவற்றையெல்லாம் தியாகம் செய்து விடு; ஒழித்து நீங்கி நில். இவற்றையெல்லாம் ஞானுக்னியில் ஆகுதி செய்து நிற்பாயாக! இவற்றைப் பொசுக்கி சுகந்தமாகச்செய்து வாசனேயை அனுபவித்துக் கொள். தத்-துவம்-அசி என்ற ஆலயத்தீயில் ஜுவாலேயுடன் எரியும்போது அதில் எழும் சுகந்தத்தையே அனுபவிப்பாயாக. தத்துவமசி-அது நீயாகிருய்.

உனது தெய்வத் தன்மையை உறுதியாகப் பிடித்துக் கொண்டு காமக்குரோதங்களுக்கும் பலஹீனங்களுக்கும் மேலே எழும்பிவிடு. அப்படி யுறுதியுடன் கூடிய எவனுக்கும் உலகமானது இடங்கொடுத்து ஒதுங்கி விடவேண்டும். உங்கள் பிரகிருதியை ஆளுகின்ற கடவுளாயிருங்கள். இல்லாவிட்டால் அது உங்கள் மேல் பாய்ந்து உங்களே வசமாக்கி விடும். சந்தேகங்களும் மூடபக்திகளும் வைத்திருப்பவர்களுக்கு யாதொரு நம்பிக்கையும் கிடையாது. நீ தெய்வத்தன்மையுடன் கூடிய ஆத்மா என்பதில் உனக்குச் சந்தேக மிருக்கிறதா? உன் ஹிருதயத்தில் சந்தேகம் பாய்வதைக் காட்டிலும் ஒரு குண்டு பாய்ந்துவிடட்டும். உன் ஹிருதயமே உனக்கு இடம் தாவில்லேயா? அதைப் பிடுங்கி யெறி. சந்தோஷத்தோடு சிரித்துக்கொண்டே சத்திய நிலேக்குள் பாய்ந்துவிடு. பயமாயிருக்கிறதோ உனக்கு?

எதைக்கண்டு பயம்?

கடவுளேக்கண்டா? மூடனே?

மனிதனேக் கண்டா? பயங்காளி.

பூதேந்திரங்களை கண்டா அவற்றை ஜெயித்துவிடு.

உன்னைக் கண்டேயோ, உன்னை நீ அறிந்துகொள்.

நானே கடவுள் என்று கூறிக்கொள்.

சத்திய புருஷனாகிய ராமன்.

---

## ௧௫-வது, வேதாந்தமும் தனசேர்க்கையும்.

---

தனத்தைப்பற்றிய உரிமை யென்பதற்கு பதில் தனத்தைப்பற்றி யிருக்கும் கொடுமை என்றால் திறமாக இருக்கும். இப்படித் திருத்தியதற்காக மன்னிக்கவேண்டும். [பிராபர்டி என்ற ஆங்கில பதத்திற்குத் தனம் என்று ஒருபொருள்; குணம் என்று மற்றொரு பொருளுமுண்டு]. பிராபர் என்றால் தகுதி. ஒருவனுக்குத் தகுதி அல்லது உரிமையாவது எது? ஒரு வஸ்துவிற்கு உரிமை அல்லது குணம் என்ன? இலேசா யிருக்கும் தன்மை, சட்டென்று பற்றியெரிதல் முதலிய குணங்கள் ஹைட்ரோஜன் என்ற ஜலவாயுவுக்கு சொந்தம். அந்த வாயுவைப் பிடித்து அடைத்துவைத்த கண்ணாடிக் குழாய் அந்த வாயுவுக்கு சொந்தமல்ல. அதே மாதிரி ஆண்மை அல்லது தெய்வத்தன்மையே உங்களுக்குச்சொந்தமான உரிமை (அல்லது பொருள்.) நீங்கள் வசிக்கும் வீடும் ஆபரணங்களும் உங்களுக்கு உரிமையாகா. ஒருபோதும் அவை உங்களுக்குச் சொந்தமல்ல, தமது பிறப்பினை

லேயே தமக்கு உரிமையாகிவிட்ட சுபாவமான உரிமையாகிய தெய்வத்தன்மையை ஜனங்கள் இழக்கத் தயாராயிருக்கிறார்கள். ஐயோ! வீடு, பொன் முதலியவற்றை கெட்டியாகப் பிடித்துக்கொண்டு இவற்றையே தமது உரிமையென்று கருதித் தம்மை எப்போதுமே பரிகசிக்கத்தக்க நிலையில் வைத்துக்கொள்கிறார்களே! எவ்வளவு பெரியவேடிக்கையிது? சொத்துரிமைகளைப் பற்றிப் பிரிவுகளும் வித்தியாச உணர்ச்சிகளும் ஏற்பாடு செய்து கொள்வது எவ்வளவு தகுதியற்ற காரியமென்று பாருங்கள். பாதரட்சை பேதங்களைக்கொண்டு மனிதவர்க்கத்தைப்பிரிப்பதுபோல் தகுதியற்ற செயல்களேயாம். இதனால் இராமன் உங்களுக்குத் தெரிவிப்பது யாதெனில், ஆத்மானுபவத்திற்குக் குறுக்கிடுகின்ற ஒரே இடையூறு எதுவென்றால், சாதாரணமாகக் கருதப்படும் சொத்துரிமையைப்பற்றிய கொள்கையேயாம். மூட்டைகளும் முடிச்சுகளும் எமக்குச் சொந்தம் என்ற உணர்ச்சிதான். எந்த நிமிஷத்தில் நாம் ஒருபொருளை அடைய நினைக்கிறோமோ அதே நிமிஷத்தில் மாயை என்ற பூதத்தால் பிடிபட்டவராகிவிட்டோம். சத்தியப்பொருளுடன் ஒன்றென அறிவதே—தியாகமென்றாலும் சரி, சமஷ்டியனுபவம் என்றாலும் சரி—வேதாந்தமெனப்படுவது. பரிசுத்த குணம் பொருந்திய சுயமான வேதாந்த அனுபவம் இதுதான். பூரணமான பிரஜா உரிமை; சமத்துவம், வெளிப்பொருள்களாகிய (பிரபஞ்ச) ஆதிக்கமென்ற சுமையைத் தூக்கியெறிதல்; குவித்துவிடவேண்டுமென்ற விருப்பங்களை ஒழித்துவிடுதல், தமக்கென்ற பதவிகளையெல்லாம் தூக்கியெறிந்துவிடல், தாமுயர்ந்தோமென்ற கர்வத்தைப் பழித்தல், தாழ்ந்தோரென்று கஷ்டங்களை

யடையாதிருத்தல் ஆகிய இவைகளே பிரபஞ்ச சம்பந்தமான வேதாந்த வாழ்க்கை. இந்த தத்துவத்தையே வேதாந்தமானது மறுமைய உலகிற்கும் ஆத்ம சம்பந்த உலகிற்கும் கொண்டுசெல்கின்றது எதனிடமும் எந்தப் பொருளிடமும் உரிமை பாராட்டாதிருத்தல்; சரீரம், மனம், புத்தி (தாம்செய்த) நூல்கள், மொழிகள், வீடு, குடும்பம், கியாதி, பெருமை முதலிய எதையுமே வேண்டாதிருத்தல்; அதாவது எல்லா வேலிகளையும் பந்தங்களையும் அழித்துவிட்டு, மற்றவர்களை விலக்குதல் என்ற காரியத்தால் உங்களையே அடைத்துக் கொள்ளாதிருத்தல்; கடவுள் நிலையை அடைந்து ஒவ்வொரு சக்தியிடமும், அணு முதற்கொண்டு நட்சத்திரம், மரம், உலகமென்ற சகல வஸ்துக்களிடமும் மேலான ஆட்சிபுரியும் நிலைக்கு மீண்டு மெழுவது; இதுவே வேதாந்தம். உலகத்தாரால், பலசமயமும் சுய பிரக்ஞையின்றியே, பல பெரிய பிரயத்தனங்கள் வேதாந்த அனுபவத்திற்காக அணிவகுக்கப்பட்டு மார்க்கம் செப்பனிடப் படுகின்றன. சன்யாசக் கொடியே உலகமெங்கும் முடிவில் பறக்கச் செய்யவேண்டியதாகும். சில வேதாந்திகள் ஏற்கனவே பூரண அன்பு என்ற ஆட்சியைச் செலுத்துகின்றார்கள். சில தேசங்களில் இந்த (அன்பென்ற) ஜுவாலை நீண்டகாலமாக வளர்க்கப்பட்டுக் காப்பாற்றப்பட்டு வருகின்றது. சற்று யோசியுங்கள்! கங்காநதி தீரத்தில் கங்கைக் கரையோரம் ஒரு முனிவர் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். பசுக்களும் நாய்களும் மச்சங்களும் பட்சிகளும் அவரது அன்பினால் தைரிய மடைந்து பயமின்றியே அவரிடம் நெருங்கி அவரது கைகளினின்றும் உணவைப் பெற்றுக் கொள்கின்றன. ஒரு மகத்தான நிலையைப்பற்றித் தெரிவிக்கிறேன்.

ஒரு முனிவரை எனக்குத் தெரியும்; அவரது சரீரத்தில் பலத்த புண் உண்டு. புழுக்கள் தசையைப் புசித்துவந்தன. புழுக்களைக் கொல்லத்தக்க மருந்தை உபயோகிக்கமாட்டார். புழுக்கள் தின்று நிறைப் போய்க் கீழே விழுந்தால் இவற்றைச் சந்தோஷத்துடன் எடுத்துப் புண்ணில் போட்டுக்கொள்வார்; இவ்விதம் புழுக்களுக்கும் உதவி செய்வார். இந்தச் சிறிய சரீரம் உலகில் உள்ள புழுக்களுக்கெல்லாம் சொந்தம்; இந்தப் பெரிய உலகமே எனக்குச் சொந்தம். பிரபஞ்சமே எனது சரீரம்; வாயுவும் மண்ணுமே எனது உடையும் பாதரட்சையுமாம் சுவாமி என்ற பதத்திற்கு 'இடைவிடாமல் கொடுக்கின்றவன்' என்று பொருள். சத்தியப் பொருளில் நில்; மற்றெல்லாம் போய்விடட்டும். சன்யாஸி என்றவன் எவன்? எவன் தான் எடுத்த பிட்சையையும் அதிகப் பசியுடனிருப்பவனுக் கீய்ந்துவிட்டுப் பிறகு கொடுப்பதற்கொன்றுமின்றித் தனது சரீரத்தையே ஈக்களும் புழுக்களுந் துண்ணும்படி கொடுத்துவிடுகிறானோ அவன், சமஷ்டி ஜீவனாகத் தன்னையே கருதி அந்த சமஷ்டியை அடைகின்றவனாகவே அனுபவிப்பவன் எவனோ அவன் உத்தம சன்யாஸியாகிறான். ஈக்களும் புழுக்களும் தசையையுண்டு களிக்கும்போது அந்த அனுபவ ஆநந்தம் தன்னுடையதெனக் கருதிவிடுகிறான். எலும்புகளைக் காயவைத்துப்பாரவும் உஷ்ணமும் வாயுவும் தன்சொரூபமெனவே கருதுகிறான்.

தர்மமென்பது:—ஆஸ்தியென்ற உணர்ச்சி எவ்வாறாகிவிட்டது பாருங்கள். தர்மம் என்ற எண்ணம் எப்படியாகிவிட்டது பாரீர். ஜன சமூகத்தின் ஒரு பகுதியை

மிதித்துக் கசக்கி வறியோராக்கி இழிவடையச்செய்து சேமித்து வைக்கப்பட்ட தனத்தில் பெயருக்காகச் சிறிதளவு திருப்பிக் கொடுப்பது சிறந்த தர்மமெனக் கருதப் படுகிறது; சாகுந்தருவாயில் இருக்கும் மனிதனுடைய வாயில் அவன் இன்னம் சிறிது காலம் மரண வேதனைகளை அனுபவிப்பதற்காக மாத்திரமே ஊற்றப்படும் தண்ணீரைப்போல இது உயர்ந்த புண்ணியமாகுமென் 'வியாஜம்' என்ற பதம் சமஸ்கிருதத்தில் ஆதியில். ஏமாற்றம், சூழ்ச்சி என்ற பொருளைக் கொண்டிருந்தது. இப்போது வட்டியெனப் பொருளாகிறது. எதற்கும் வட்டி கேட்குமிக்காலத்தில் வட்டி கேளாதிருத்தலே பெரிய கௌரவமாக, உதவியாக மதிக்கப்படுகிறது. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமுள்ள தர்மம் இது தான், இந்திய தர்மமோ பட்டினியினால் வாடியுலரும் சூத்திரர்களைப்பற்றி அவ்வளவு கவலை யெடுப்பதில்லை. அது தர்மகர்த்தாக்களை நேரே எப்படி சுவர்க்கத்திற் கனுப்புகிறதென்றால், அழுகிப்போய் உதவாமற் போய் விட்ட மதத்தின் சிறந்த பிரதிநிதிகளான, தின்று கொழுத்திருக்கும் சோம்பேரிகளுக்கு, கடவுளின் அன்ன சாலைகளிலேயே வசிப்பவருக்கு அன்னதானம் செய்வதன் மூலமாகத்தான்.

நான் கூறும் மார்க்கம்; நயமென்பதே காலத்திற் கேற்ற கௌரவமாகட்டும். உன்னை வசீகரமாகச் செய்வ தெ[illegible]? நீ உடுத்தியிருக்கும், உன்னை மூடியிருக்கும் ஆடைகளா, அல்லது உனது உண்மைச் சுபாவத்தை விளக்கும் வசீகரத்தன்மையா? உடைகளினின்றும் மற் றெதனிடத்தும அழகைப் பெறவேண்டாம், இயற்கை

யிலமைந்த உற்சாகமும் சுகமும் புன்சிரிப்புமே விளங்கட்டும். எவர் வேண்டுமானாலும் திருடிப் போகட்டும். கவர்ன்மெண்டாருக்குப் பொருளாசையுண்டாகி அதனால் அறிவீனர்களாகட்டும், அவற்றால் உனக்கென்ன குறை வேற்படப்போகிறது ? நீ உனது உரிமையை இழக்கவேண்டாம். உனது உரிமை சத்திய நிலையே, வீண்கனவுகளான ஜடப்பொருள்கள் உன்னுடையவைகளல்ல. சத்தியத்திற்காக மாத்திரமே எழுந்து நில்லுங்கள். சர்வகலாசாலை பட்டங்கள் வேண்டுமோ ? மூடத்தனமேயது. முடிவான பட்டம் தாமே அடையத்தக்க பதவியேயாம்

சொப்பனத்தில் தோன்றிய புலியைக் கொல்வதற்கு சொப்பனத்தில் உற்பத்தியாகிய கத்தியே வேண்டுமென்பது உண்மைதான். விழித்த பிறகு நோக்கும் திருஷ்டியில் கத்தியும் புலியுமாகிய இரண்டுமே காணப்படாதவைகள். அதே மாதிரிதான் அனுபவத்திற்குதவும் சாஸ்திரங்களும் கலைகளும். உலக அறிவிற்கு அவை ரொம்பவும் அவசியமானவையானாலும். தெய்வத் தன்மைக்கு எழுந்த விழிப்புநிலைக்குப் பலன் படாது. சர்வகலாசாலை பட்டங்களும், நற்சாட்சிப் பத்திரங்களும், கௌரவப் பட்டங்களும், கௌரவ ஸ்தானங்களும் இவைபோன்ற மனோமய சொத்துக்களுக்கு—புத்தி சம்பந்தமான முதற் பொருள்களுக்கு—அளவுகடந்த மரியாதையைச் செலுத்துவது, அவற்றைத் தாங்கி நிற்பது, என்ற நிலையே ஆத்ம அனுபவத்திற்குப் பெரிதும் இடையூறு செய்யக்கூடியதாகும். ஆத்மானுபவம் பெற்று விளங்குகின்றவனது திருஷ்டியில் உலகமே ஜனங்களது மயக்கத்தால் உற்பத்தியானதெனக் கருதப்படுகின்றது.

தங்கள் மயக்கத்தால் உண்டாக்கிக் கொண்ட உலகில் ஒருவர் மீதொருவர் மாயப்பிரயோகம் செய்துகொண்டு வசிக்கின்றார்கள். ஒரே பைத்தியக் கூட்டம் நிறைந்த உலகம் வெறுந் தரையில் ஜாலக்காரனால் தோற்றுவிக்கப்படுகிற ஏரிகளுக்குச் சமமாகும் உலகில் விளங்கும் பொருள்கள். இப்படிப்பட்ட பொருள்களைப் பற்றி அறிந்தோமென்று டாக்டர்களும் போதகாசிரியர்களும் பெருமை பாராட்டிக் கொள்வதற்குக் காரணமான பௌதிக ஞானமெல்லாம் மாயத்தால் உண்டான தோற்றமேயன்றிவேறில்லை. உலகமே நுட்பமான வஸ்து மயம்; இவர்களது அறிவும் அம்மாதிரியானதே. ஆத்ம அறிவு அடைந்தவனுக்கு, பிரபஞ்ச இயக்கங்களின் அஸ்திவாரத்தை யறிந்த பெருமை யுடையவனுக்கு பெரிய அண்டங்களும் நதிகளும் மலைகளும் சூரிய சந்திரர்களும் ஆச்சர்யத்தை விளைவிக்கமாட்டா. இந்த இயக்கங்களைப்பற்றிய அறிவும் வானசாஸ்திரிகள், கணித ஆசிரியர்கள், தாவரசாஸ்திரி முதலியவர்கள் அடைந்த அறிவுகளெல்லாம் பலனுள்ளனவாகத்தோன்றுது; வீண் விளையாட்டு, வேடிக்கையும் பரிகாசமுமேயாம். உலகப் பொருள்களுடைய முதலாளிகளும் அப்பொருள்களைப் பற்றிய அறிவு நிறைந்தவர்களும் அப்பொருள்களுக்குச் சமமான நிலையிலுள்ளவர்களேயாவர். அதாவது (முதலாளிகளும் கலைவல்லவர்களும்) மாறிக்கொண்டிருக்கும் மாயாசம்பந்த முள்ளவர்கள். டாக்டர்கள், தத்துவ சாஸ்திரிகள், போதகாசிரியர்கள் என்ற இவர்கள் கோபித்தாலும் சரியே, பிரியப் பட்டாலும் சரி, குறை கூறினாலும் சரி, போதித்தாலும் சரி இவைகள் கட்டுவைப்பற்றி யனுபவம் நிறைந்தவர்களுக்கு யாதொருவித

பலனுமளிப்பதில்லை. இவைகளைப் பொருட்படுத்தமாட்டார்கள். சாதாரணமாக சர்வகலாசாலைகளும் கண்காட்சிச்சாலைகளும் சந்தைகளும் என்ற இவைகள் மாயா சம்பந்த நிலைமைகளை விர்த்திசெய்யக் கூடியவைகளே. ஜீவன் முக்தர்களுக்கு எதுவும் ஆச்சர்யத்தை விளைவிக்காது. சூரியன் பனிக்கட்டி போல் ஜில்லென்று குளிர்ந்தாலும் சந்திரன் மிக அதிகமான உஷ்ணத்துடன் பொங்கினாலும், நெருப்பின் ஜ்வாலை மேல் நோக்கி எரிவதற்குப் பதிலாகக் கீழ்நோக்கியே எரிந்தாலும், சகல ஸ்தலங்களும் பாய்போல் சுருண்டு விட்டாலும் பாதி இவற்றிலெல்லாம் ஆச்சர்யத்திற்குக் காரணமென்று ஒன்றையும் பார்க்கமாட்டான்.

பிராம்மணத்துவம் (அதாவது ஆசார்ய தத்துவம்) ஒரு காலம் உலகில் ஆட்சி புரிந்தது. ஒரு காலம் க்ஷத்திரிய தர்மம் ஆதிக்கம் பெற்று விளங்கியது. தற்காலம் வைசியர்களாகிற முதலாளிகள் ஆட்சிசெலுத்துகிறார்கள். இதற்கடுத்தபடியான காலம் வருகின்றது. சூத்திர தர்மமாகிற தொழிலாதிக்கம் ஏற்படும் காலம் வந்து கொண்டிருக்கிறது. ஆனால் சூத்திர தர்மமாகிற தொழில் சன்யாச சக்தியுடன் கூடி ஆசீர்வதிக்கப்பெற்று விளங்கும் அமெரிகாவிலும் ஐரோப்பாவிலும் தொழிலாளராகிய சூத்திர வகுப்பினர் பிறப்பைப்பற்றிய நிபந்தனைகளாலும் மதசம்பந்தமான தடைகளாலும் ஆணியடித்தாற் போல் நிறுத்தப்படவில்லை? கெட்டியான கடின வஸ்துக்களாக்கப்படவில்லை. அப்படியிருந்தும் விஷயங்கள் திருப்தியாயில்லை. மிகுந்த அதிருப்திக் கிடமாயிருக்கிறது. இந்தியாவிலோ தீமையும் அநீதியும் இரண்டு பங்காக

அதிகரித்து நிற்கின்றன. சுயமாக இருக்கும் மாயை என்ற அறிவீனத்துடன் ஜாதிப்பிரிவு முறையும் உதவி செய்கின்றது, இதனால் தொழில் நிறுத்தங்கள் ஏற்படாமலிருக்கின்றன. (தற்காலம் இந்த நிலையும் நன்றாக மாறிவிட்டது.) என்றாலும் சமூகத்தினரெல்லோரும் பலஹீனர்களாகவும் சாதுவான ஆடுகளைக்காட்டிலும் அதிசம் பயந்தவர்களாகவு மாகிறார்கள்.

இதுவரையில் வேதாந்தம் என்பது ஒரு சிலருக்கே சொந்தமான ஆஸ்தியாக இருந்தது. அநேகமாக புத்தி சம்பந்தமான உலகிலேயே இருந்து வந்தது. நீண்ட காலமாக எண்ணப்பட்ட இந்தக் குழந்தை பூமாதேவியினது கர்ப்பத்தில் ஹிமாசலத்திலேயே தங்கி நின்றது. கடைசியில் சம நிலத்திற்குள் கங்காநதியாகப் பாய்ந்து பரிசுத்த நீரைக்கொண்டு பிராமணனையும் சூத்திரனையும் புனிதமாக்கி, மனிதனையும் கடவுளையும் கூடப் பரிசுத்தப் படுத்தித் தகாத வித்தியாசங்களை யெல்லாம் போக்கிவிடுகின்றது. மனிதவர்க்கம் ஒரே சரீரம் பல அவயவங்களுடன் கூடியது போலிருக்கவேண்டும். இது சாதாரணமாக உணரப்படுவதில்லை. காலா காலத்தில் உணவு எடுத்துக்கொள்வது நம்முடைய ஞாபகத்துடன் செய்ய வேண்டிய காரியமானலும் உணவு பதார்த்தங்கள் சரீரத்தின் பல அவயவங்களாகவும் உறுப்புக்களாகவும் மாறும்போது உனக்குத் தெரியாமலே தாமே பார்த்துக் கொள்கின்றன அல்லவா? அது போலவே, ஒற்றுமையிலும் ஐக்கியத்திலும் உன் கருத்தைச் செலுத்தி விட்டால், உன் மனத்தை சமஷ்டி ஐக்கியத்தில் ஒருங்கு கூட்டினல் (அன்பிலும் தெய்வத்தன்மையிலு மென்ற

படி) பல வகைப்பட்ட நிலைமைகளும் எவ்வெவ்வாறு இருக்கவேண்டுமோ அப்படியப்படியே தாமே பார்த்துக் கொள்ளும். ஓ இந்திய மன்னர்களே! வைதீக ஆசாரியரே! சூத்திரர்களே! ஆட்சி செலுத்தும் வகுப்பினர்களே! சிறிது வருஷங்களுக்குள் நிலைமை எவ்வாறாகுமென்று உங்களுக்குத் தெரியவருமா? நான் கூறுவதை விஜித்திரமென்றும், விநோதமென்றும் கூறுங்கள். அக்கறையில்லை. எனக்கு முன்னால் எதிரில் பிற்காலம் சுவாமிகள் நிறைந்த உலகத்தையே பார்க்கிறேன். உலகில் திரிந்துவரும் கடவுள்கள் தென்படுகின்றனர். (உடலாகிய) மண்ணைப்பற்றிய மனிதப் பிரிவுகள் அடித்துக்கொண்டு போகப்பட்டன. இந்தியாவிலும் சீனாவிலும் அமெரிக்காவிலும் இங்கிலாந்து முதலிய இடங்களிலும் இருக்கும் வித்தியாச பாவனைகள் நலந்துவிடுகின்றன. புது மாதிரியான பகுப்புக்கள் ஏற்பட்டு மறுபடியும் அழிந்து போகின்றன. கனவுகாண்கின்ற ஏ அன்பர்களே! உங்கள் கண்களை மறைத்துக் கொண்டிருக்கும் திரையை நீக்கிப் பாருங்கள். உன்னத சந்யாசிகளும் தாழ்ந்த ஸ்திதியிலுள்ள சூத்திரர்களும் கலந்துகொள்வதைப் பாருங்கள். ஆகா! அதோ, பிட்சாபாத்திரம் மண்வெட்டியாகவும் களையெடுக்கும் கருவியாகவும் மாறிவிட்டது. சன்யாசிகளிடம் சோம்பேறித்தனம் போய்விட்டது. சூத்திரரது தொழில் சன்யாச கௌரவம் பெற்றுவிட்டது. எதிலும் தியாகம் என்ற சக்தி புகுந்துவிட்டது. பொதுமகளின் மானக்கேடான துணிவும் சாமனது பரிசுத்தத் தன்மையும் ஒன்று கூடுகிறது. ஆட்டுக்குட்டியினது மிருதுவான சுபாவமும் சிம்மத்தின் பிடிவாதமான தைரியமும் பராக்கிரமமும் ஒன்று சேர்க்கப்படுகின்